# தமிழ் இலக்கியங்களில் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில்



முனைவர். சு. துரைமாணிக்கம்

# தமிழ் இலக்கியங்களில் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில்

முனைவர் சு. துரைமாணிக்கம்
எம்.ஏ., எம்.ஏ., எம்.ஏ., எம்.காம்., எம்.எட்., பி.எச்.டி.
தமிழாசிரியர்,
நெ.ச.து. அரசினர் உயர்நிலைப்பள்ளி,
நெய்யாடுபாக்கம்.

மோகன்குமார் பதிப்பகம்
26, நகரீஸ்வரர் கோயில் தெரு,
காஞ்சிபுரம்-631 502.
தொலைபேசி : 044-27232714

# நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | தமிழ் இலக்கியங்களில் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் |
| நூலாசிரியர் | : | முனைவர். சு. துரைமாணிக்கம் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு, நவம்பர் 2007 |
| உரிமை | : | மோகன்குமார் பதிப்பகம் |
| வெளியீடு | : | மோகன்குமார் பதிப்பகம்,<br>26, நகரீஸ்வரர் கோயில் தெரு,<br>காஞ்சிபுரம் - 631 501 |
| தாள் | : | 13.7 கி.கி. வெள்ளைத்தாள் |
| பக்கங்கள் | : | I to XVI + 167 |
| படிகள் | : | 1000 |
| விலை | : | ரூ.75/- |
| ஒளி அச்சு | : | வண்ணன் D T P, காஞ்சி.<br>செல் . 09364312079 |
| அச்சிட்டோர் | : | மூவேந்தர் அச்சகம்,<br>73, எஸ்.பி.எஸ். முதல் தெரு,<br>இராயப்பேட்டை, சென்னை-14.<br>தொலைபேசி: 044-28351189 |

# காணிக்கை



திருமதி. சு. கண்ணம்மாள் திரு. ச. சுந்தர முதலியார்

இறைப்பணி செய்ய என்னை உருவாக்கிய என் தந்தையார்
தெய்வத்திரு. ச. **சுந்தர முதலியார்** அவர்களுக்கும்,
என் அன்னையார்
திருமதி. சு. **கண்ணம்மாள்** அவர்களுக்கும்
இந்நூலைக் காணிக்கையாக்குகின்றேன்.

## அணிந்துரை

**நீதியரசர். க. ஞானப்பிரகாசம்**
ஏ.எச். 196, 3வது தெரு,
8வது மெயின்ரோடு
சாந்தி காலனி, அண்ணாநகர்,
சென்னை - 600 040.

சோழவள நாடு சோறுடைத்து, பாண்டிய நாடு முத்துடைத்து, சேரநாடு வேழம் உடைத்து "தொண்டைநாடு சான்றோருடைத்து" என்ற பெருமை நமக்குண்டு. அத்தொண்டை நாட்டைப் பல்லவர்கள் ஆட்சி செய்தஞான்று, "காஞ்சி" தலைநகராக விளங்கியது என்பது வரலாறு கூறும் உண்மை.

இச்சீர்மிகு தொண்டை நாட்டில், அமைந்துள்ள குன்றத்தூரில்தான், பெரியபுராணத்தைத் தந்த சேக்கிழார் அவர்கள் தோன்றினார்கள். உரைநடைக்கோர் புதியதோர் நடைகண்டவரும் தொழிலாளர் தோழர்களுக்குத் தமிழகத்தில் முதன்முதலாக "தொழிலாளர் இயக்கம்" கண்ட திரு.வி.க. அவர்கள் அவருடைய இளமைப் பருவத்தில் வாழ்ந்த "துண்டலம்" எனும் கிராமமும் இத்தொண்டை நாட்டில் தான் உள்ளது. திருக்குறளுக்கு விரிவான பழமையான உரையெழுதிய பரிமேலழகர் காஞ்சியைச் சார்ந்தவர் அந்தககக்கவிவீரராகவ முதலியார், வெண்பாவிற்கோர் புகழேந்தியும், தொண்டை மண்டலத்தைச் சார்ந்தவர்களே.

தொண்டை மண்டலத்தில், சைவ வேளாளர் குடியில் பிறந்த இந்நூலாசிரியர் கற்றோரும் மற்றோரும் போற்றும், பார்புகழ் நகரமாக விளங்கிக் கொண்டிருக்கின்ற, காஞ்சியம் பதியில் எழுந்தருளியுள்ள அருள்மிகு ஏகாம்பரநாதரைப் பற்றியும். அவர் நீக்கமற நிறைந்திருக்கும் அத்திருக்கோயில் பற்றியும், தம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு, அப்பணியைச்

செவ்வனே செய்து முடித்துள்ளார்கள். அவர் பணியை நாம் பாராட்டக் கடமைப்பெற்றிருக்கிறோம்.

**இந்நூலில்**

1. அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் தோற்றமும் வளர்ச்சி பற்றியும்
2. கோயிலின் சிறப்புகள்
3. இக்கோயில் வளர்ந்த சமயம்
4. கோயில் விழாக்கள்
5. கோயில் வளர்த்தகலைகள்
6. கோயில் வழிபாட்டுப் பயன்கள்

என ஆறு பெருந்தலைப்புகளில் இவ்வாய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளது.

கோயில்கள் எப்படித் தோன்றியிருக்கக்கூடும் என்பதனை முறைப்படுத்திக் கூறியுள்ள பாங்கு பாராட்டத்தக்கது.

இயற்கையில் எதிர்பாராது ஏற்படும் சீற்றங்கள் (அதனால் ஏற்படும் அழிவுகள்), அதே நேரம் இயற்கையின் நன்மைகளையும், அவைகள் இல்லாமல் இவ்வுலகம் இயங்க முடியாது, மனிதன் வாழமுடியாது என்ற உண்மையினையும் நிரல்பட கூறப்பட்டுள்ளது. இயற்கையில் அதிக அச்சத்தைத் தரக்கூடியதும், அதே நேரத்தில் அவைகளின் இன்றியமையாமைகளையும், கருதி அவைகள் - பஞ்சபூதங்கள் என்று அழைக்கப்பட்டன. நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு, இவைகளே பஞ்ச பூதங்களாகும். "நீரின்றி அமையாது உலகு" என்பது வள்ளுவன் வாக்கு. இயற்கைச் சீற்றங்களைக் கண்டு பயந்த மனிதன், முதலில் அவைகளை வணங்க ஆரம்பித்தான், வணங்கிய இயற்கைகளை வசப்படுத்த ஆரம்பித்தான். இம்முறையே பிற்காலத்தில் பக்திமுறையாக மாறி, கோயில்கள் உருவாக அடித்தளமாக அமைந்தது எனக் கருத வேண்டியுள்ளது என ஆசிரியர் கூறுகிறார்.

அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயில் அமைந்துள்ள இடம், ஆதியில் எட்டிவனமாக இருந்ததாகவும், மூவேந்தர்கள் மூலம் கம்பாநதியும், கம்பாலிங்கமும் கண்டுபிடிக்கப்பட்ட இடமே காஞ்சி (அ) காஞ்சிபுரம் என பெயரிடப்பட்டதெனத் தெரியவருகிறது.

கோயிலில் உள்ள லிங்கம் கிரேதாயுகத்தில் சந்திரனால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்ற செய்தியும், கோச்செங்கணோன் என்னும் மன்னன் ஏகாம்பரநாதர் கோயிலை முதன்முதலாகக் கட்டியதாகவும், மாமரம் தல விருட்சமாகவும், ஒரு காலத்தில் காஞ்சி மாநகர், தாமரை மலர் போன்ற அமைப்புடையதாக இருந்ததென்றும், பல்லவர், சோழர் பாண்டியன் சம்புவராயர், விசய நகர மன்னன் ஆகியோர் இக் கோயிலின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாக இருந்தனர் என்றும், ஏகாம்பரநாதருக்கு, விளங்கிய பல பெயர்களில், "மாமூலன்" என்பது ஒன்றாகும் என்றும் "மா" என்றால் மரம் என்றுபொருள்படும் என்றும், திருமூலர் கி.மு. 3100 லேயே காஞ்சி வந்து ஏகாம்பரநாதரை வணங்கிச் சென்றார் என்ற செய்தியும் கூறப்படுவதால் இக்கோயில் மிக மிகப் பழமையானதென்றும், பல்லவர்கள் காலத்தில் 350க்கு மேற்பட்ட கோயில்கள் இருந்துள்ளது என்றும் தெரிகிறது. முதலாம் நரசிம்மவர்மன் காலத்தில் இக்கோயில் வியத்தகு வளர்ச்சி அடைந்தது என்றும், கி.பி. 1120ல் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் துர்க்கை சிற்பம் நிறுவப்பட்டு, நூற்றுக்கால் மண்டபம் கட்டப்பட்டது என்றும், இவன் காலத்தில் காஞ்சி நகராக அமையப்பட்டதென்றும், பின்னர் இம்மண்டபம் ஆயிரங்கால் மண்டபமாக விசயநகர மன்னரால் மாற்றப்பட்டது என்ற செய்திகளையும், இம் மண்டபம் புலவர்கள் கூடி, நூல் வெளியிடும் இடமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது என்றும், 12ம் நூற்றாண்டில் பாண்டிய மன்னர்கள் குறிப்பாக சடாவர்ம பாண்டியன், அதன்பின்னர், சம்புவராயர்கள் கோயிலுக்குத் தேரும்,

துலாபாரமும் செய்தனர் என்றும், பள்ளிக்கோபுரமும் கட்டப்பட்டது என்ற செய்தியும் கூறப்பட்டுள்ளது.

கிருஷ்ணதேவராயர் காலத்தில் ஏழு ஆள் உயர வாசற்கதவு பொருத்தப்பட்டதென்றும், விழாக்கள் நடத்த குன்றத்தூரைத் தானமாகக் கொடுத்தார் என்றும், தென்திசை நுழைவு வாயிலை (192 அடிஉயரம்) இவர் கட்டினார் என்றும், இச்செய்திகள் விதானத்தில் அமைந்துள்ள தமிழ், தெலுங்கு கல்வெட்டுகள் மூலம் தெரிய வருவதாகக் கூறுகிறார். கிருஷ்ணதேவராயரின் முதலமைச்சர் அம்பி அறம் வளர்த்தான் முதலியால் "ஞானப்பிரகாச மடம்" என்பது மருவி "தொண்டை மண்டல ஆதினமாக" இந்நாள்வரை செயல்பட்டு வருகின்றது என்றும், அம்மையின் வழிபாட்டை சோதிக்க இறைவன் ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடச் செய்து, இதனின்று பெருமானைக் காக்க இறைவி அவரைத் தழுவிக் கொண்டதகாவும், இக்கோயிலின் தலவிருட்சமான மாமரம் "சுமார் 3500 வருடங்களுக்கு முந்தயது என்றும் மரத்தின் நான்கு கிளைகளிலும், நாலுவிதமான சுவை இருப்பதாகவும், இம்மரம் ஏக + ஆம்ரம் = ஏகாம்பரம், அதாவது ஓரேமாமரம், பலசுவைப் பொருந்தியதாக உள்ளது என்ற விவரமும் கூறப்பட்டுள்ளது.

அம்பிகைக்கு தனிச்சன்னதி இல்லா தனிச்சிறப்பும் இத்திருக்கோயிலுக்கு உண்டென்றும், சிவபெருமான் மீதே மன்மதன் மலர் அம்பு ஏய்தினான் என்றும், அதனால் அவனை சிவபெருமான் நெற்றிக்கண்ணால் சுட்டெரித்தார் என்றும், அயோத்தி, மதுரா, மாயா, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை எனும் 7 நகரங்களுள், காஞ்சி ஆகாசபீடமாக விளங்குகிறது என்றும் இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இக்கோயிலின் சிறப்புக்கள், சிலப்பதிகாரம், மூவர்தேவாரம், திருவாசகம், திருவந்தாதி, பெரியபுரணம், கச்சித்திருவாய், திருவேகம்பமாலை, கந்தபுராணம்,

வில்லிபாரதம், திருப்புகழ், தொண்டை மண்டல சதகம், தண்டியலங்காரம், காஞ்சிப்புராணம், கச்சிக் கலம்பகம் போன்ற 23க்கு மேற்பட்ட நூல்களால் எடுத்து இயம்பப்பட்டுள்ளது. இராவணன் கயிலையைப் பெயர்த்து எடுக்க முயற்சி செய்தபோது, சிவபிரான் அவன்மீது தன் மெல்லிய கால் விரலால் அழுத்த, அவன், "கச்சியேகம்பனே" என அபயக்குரல் எழுப்பியதாகவும், சம்மந்தர் தன் பாடல்களால் ஏகாம்பரத்தின் சிறப்புக்கள், திருமேனியழகு இயல்பு, அருளும் தன்மை, போன்றவற்றைப் பாடியுள்ளார் என்றும், சுந்தரமூர்த்தி சுவாமிக்குக் கண் அளித்த கருணையை அவர் ஒரே பதிகத்தில் பாடியுள்ளதையும், மாணிக்கவாசகர், ஆறுதிருப்பாடல்கள் மூலம் பெருமையை எடுத்து இயம்பி உள்ளார் என்றும், நம்பியாண்டார் நம்பி, சாக்கிய நாயனார் தினமும் கல் எறிவதைப் பொருட்படுத்தாமல் (அவருக்கு உண்மையாக அன்பைக் காட்ட வேண்டும் என்பதால்) என்னை, "கல் எறிந்தார்க்கும் கருணை காட்டியதை" எடுத்துரைத்துள்ளதும், சேக்கிழார் தன் பெரியபுராணத்தில் எல்லாவற்றிற்கும் மூலமானவர் "ஏகம்பன்" என்றும், பட்டினத்தடிகள், எழுபிறவியில், மறைப்படியே சிறந்ததென்றும், சிற்றின்பத்தை தவிர்த்து, இறைவனை வழிபடும் முறையை எடுத்தியம்பி, "உறவெல்லாம் உறவல்ல, ஏகம்பன் உறவே உறவு" என்ற தத்துவத்தை உணர்த்தியதும், இடியைப்போல் ஒலிக்கும் குரலுடைய இடபத்தை (ரிஷபம்) வாகனமாகவும், படம் எடுத்து ஆடும் பாம்பினை, கச்சையாகவும், உலகாளும் மன்னர்களும், ஏகம்பணார் "திருநீறு" பூசவில்லையே, எனில் அவர்கள் பகைவர்களாய் வருந்துவார்கள் என்ற செய்தியும், கிடைக்கிறது.

இத்தகைய அரிய செய்திகளை, நூலாசிரியர் தன் நுண்மாண் நுழைபுலத்தோடு அறிந்ததோடல்லாமல், பல்சான்ற நூல்களைத் தன்வழிகாட்டி நூலாகக் கொண்டு,

அதன்மூலம் தேர்ந்து புரிந்து தான் ஒரு நல்ல தமிழறிந்த ஆசிரியர், ஆராய்ச்சியாளர் என்பதை இந்நூல்மூலம் புலப்படுத்தியுள்ளார். அன்னாருக்கு என் மனமுவந்த நல்வாழ்த்துக்களை உரித்தாக்குகிறேன்.

நூல் ஆசிரியர் சு. துரைமாணிக்கத்தின் முயற்சி பெரிதும் பாராட்டுக்குரியது. காஞ்சியைப்பற்றியும், அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் பற்றியும் அறிந்து கொள்ள ஒரு சிறப்பான நூலாக இந்நூல் அமைந்துள்ளது. எனவே இந்நூல் ஆன்மீகவாதிகளுக்கும், பள்ளி, கல்லூரிகளில் பயிலும் மாணவர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும், பொது மக்களுக்கும் பெரிதும் பயன்படுமென நினைக்கிறேன்.

ஆசிரியரின் முயற்சியைப் பாராட்டி, இந்நூல் எல்லோராலும் படிக்கப்படவேண்டிய நூல், எனவே எல்லா தரப்பினரும் இந்நூலை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென விழைகிறேன்.

(நீதியரசர். க. ஞானப்பிரகாசம்)
அண்ணாநகர்,
14.07.2007

**Dr.M.Varadarajan,** M.A.,Ph.D.,
Associate Professor
Department of Tamil
Sri Venkateswara University
TIRUPATI-517 502.
Ph: Off: 0877-2249666 Ext.257
Res: 0877-2238826



# *FOREWORD*

*It is a matter of great pleasure for me to write a Foreword to Dr.S. Duraimanickam's book entitled "Tamil Ilakkiyangalil Kanchi Arulmigu Ekambaranathar Koil". This book is the result of Dr.Duraimanickam's assiduous study of the topic for getting Ph.D., in Tamil from the Department of Tamil, Sri Venkateswara University, Tirupati, under my guidance. He obtained the Degree in May 2007.*

*The history of India records the genesis, growth and development of Temples in various Places of India. Among these, in South India, Kanchi, is famous for temples of Vaishnavites and Saivaites. The author, being a native of Kanchi and a devout Saivite, has rightly chosen the topic for research and collected information. He classified the topic under six chapeters.*

*The first Chapter deals with the genesis and development of Kanchi Ekambaranathar Koil from the period of Sangam. He widely narrated the structure of the temple too.*

*In Chapter two, the uniqueness of the temple as notified from Chilappadikaram to Kalambakam*

*in Tamil literature find a place. It is interesting to note the author elicits the characteristic features of Lord Ekambaranathar as said in Kachchi Kalambakam.*

*The kanchi Ekambaranathar Temple's contribution for the development of Saivism is explained by citing variety of Lingas that are existing in that temple in Chapter three.*

*The narration of day to day festivals, throughout the year in that temple, enthuses one to enjoy a festival. This is well accommodated in Chapter four.*

*Dr. Duraimanickam has taken a painstaking effort in collecting information on the existence of Arts like Kudakkuttu, Cilpakalai and so on, find a place in Chapter five.*

*He highlighted the benefit of worshipping the Lord as was done by ancient saints like Tirujanana Sambandar, Manikkavachakar and others in the last Chapter.*

*The five appendices give mine of information on the temple and its features.*

*Dr.Duraimanickam has done a commendable job in bringing out the thesis in a book from which creates awareness among the people in society at large and devotees of Saivism in particular.*

*I wish him all success in his life.*

(M. Varadarajan)

# நன்றியுரை

காஞ்சியில் எத்தனையோ சிவத்தலங்கள் இருந்தபோதுங்கூட அவற்றுக்கெல்லாம் தலைமையானதாகத் திகழும் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் பற்றி விரிவான முறையில் ஆய்வு நிகழ்த்தி, அதனை நூலாக வெளியிட வேண்டும் என்ற எண்ணம் என்னுள் தோன்றியதன் காரணமாக விளைந்ததுவே இந்நூலாகும்.

என்னை ஆய்வு செய்ய அனுமதித்த திருவேங்கடவன் பல்கலைக்கழகத்திற்கும், தமிழ்த்துறைக்கும் முதற்கண் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். கல்லூரி முதல்வர் பேராசிரியர் முனைவர் திரு.தேவசங்கீதம் மற்றும் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் திரு.இரா.மனுவேல் அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு அணிந்துரை நல்கிய நீதியரசர் மாண்புமிகு க. ஞானப்பிரகாசம் அவர்கள் மிகச்சிறந்த சட்ட நிபுணர் மட்டுமல்லாது, மிகச்சிறந்த தமிழறிஞராவார். அவர்களது பல்வேறு பணிகளுக்கிடையே இந்நூலை முழுமையாகப் படித்து, பல அரிய ஆலோசனைகளை வழங்கி, அணிந்துரை நல்கிய அப்பேரறறிஞரை வணங்கி நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

மேலும், இந்நூல் வெளிவர அனைத்து நிலைகளிலும் ஆக்கமும், ஊக்கமும் அளித்து, எனக்குத் தேவையான தகவல்களையும், உதவிகளையும் காலநேரம் கருதாமல் செய்தளித்ததோடுமல்லாமல் சிறப்பான அணிந்துரை வழங்கிய எனது ஆசான் பேராசிரியர் முனைவர் திருமிகு. மா. வரதராஜன் ஸ்வாமி அவர்களுக்கு நன்றியினைக் காணிக்கையாக்குகிறேன்.

இந்நூல் வெளியிட நிதியுதவி செய்த திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித் தலைவர் அவர்களுக்கும் சப்தகிரி மாத இதழின் பதிப்பாசிரியர் அவர்களுக்கும், துணைப்பதிப்பாசிரியர் முனைவர் திரு.வ.கோ.சொக்கலிங்கம் அவர்களுக்கும் மற்றும் தேவஸ்தானத்தைச் சேர்ந்த அனைத்து நிர்வாகத்தினருக்கும் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை சிறந்த முறையில் ஒளி அச்சு செய்த வண்ணன் D.T.P.யின் உரிமையாளர் திரு.கோ.கருமுகில் வண்ணன் அவர்களுக்கும், நூலினை அழகிய முறையில் அச்சிட்டு உதவிய சென்னை, மூவேந்தர் அச்சக உரிமையாளர் டாக்டர். திருமிகு. மூவேந்தர் முத்து அவர்களுக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**முனைவர். சு. துரைமாணிக்கம்,**

காஞ்சிபுரம். நூலாசிரியர்.

நவம்பர் 2007

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| காஞ்சி | - | காஞ்சிபுரம் |
| நூ | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா | - | பாடல் |
| மேலது | - | அடிக்குறிப்பில் மேலே குறிப்பிட்ட புத்தகம் |
| Are | - | Archealogical Review |
| Vol | - | Volume |
| செ | - | செய்யுள் |
| AI | - | Ancient India |
| ARIE | - | Annual Report of Indian Epigraphy |
| ARSIE | - | Annual Report on South Indian Epigraphy |
| உ.வே.சா. | - | உ.வே.சாமிநாதய்யர் |
| தி.தே.வா. | - | திருநாவுக்கரசு நாயனார் தேவாரம் |

# பொருளடக்கம்

ஏகாம்பரநாதர் துணை

# இயல் ஒன்று

# அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் தோற்றமும் வளர்ச்சியும்

## 1.0 முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இயக்கம் பேரிடம் பெற்றுள்ளது. அந்த வகையில் பக்திப் பெருக்கு வளர்ச்சி பெற கோயில்கள் உருவாயின. தமிழகத்தில் அக்கோயில்கள் சைவ, வைணவ சமய சார்போடு திகழ்ந்து மக்களிடையே பெரிய வளர்ச்சியைப் பெற்றன. அந்த வகையில் தென்னிந்தியாவில் தொண்டை மண்டலத்தில் பல கோயில்கள் உருவாகி வளர்ச்சி பெற்று இன்றும் சிறப்போடு விளங்குகின்றன. அவற்றுள் "அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் தோற்றமும் வளர்ச்சியும்" என்ற முதல் இயல் பண்டைக் காலத்தில் பக்தியின் நிலை, அருள்மிகு ஏகாம்பர நாதர் கோயில் தோற்றம், நகரின் தோற்றம், சங்க காலம், பல்லவர்கள், சோழர்கள், பாண்டியர்கள், சம்புவராயர்கள், விசய நகர மன்னர்கள், நாடு அடிமையாய் இருந்த காலம், விடுதலை பெற்ற காலங்களில் கோயிலின் வளர்ச்சி மற்றும் புராணங்கள் காட்டும் கோயில் பெருமை, மாமரத்தின் சிறப்பு, பஞ்ச பூதத்தலங்களில் மண் தலமாகச் சொல்லப்பெறும் காஞ்சியின் சிறப்பு, கோயில் அமைப்பு, தென்புற இராச கோபுரம், ஐந்து பிரகார அமைப்பு, இரண்டாம் பிரகாரத்தில் உள்ள சிவலிங்கங்களும் அவற்றின் காலமும், பெருமாளுக்குத் தனிச் சந்நிதானம், காஞ்சிபுரத்தில் அம்பிகைக்குத் தனிச் சந்நிதி இல்லாமை, ஏகாம்பரத்திற்குள்ளேயே திருக்கச்சி மயானம் அமைந்துள்ள சிறப்பு ஆகிய 21 தலைப்புகளில் ஆயப்படுகிறது.

### 1.1. பண்டைக்காலத்தில் பக்தியின் நிலை:

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்திலிருந்தே இயற்கையோடு இணைந்து வாழ்ந்து வந்த மக்கள் எதிர் பாராமல் ஏற்பட்ட புயல் வெள்ளம் போன்ற இயற்கைச் சீற்றங்களைக் கண்டு பயந்தனர். பின்னர் அவற்றையே பயந்து வணங்க ஆரம்பித்தனர். இத்தகை வணக்கமே பிற்காலத்தில் பக்தி என்று சொல்லப்படுகிறது. பயத்தின் காரணமாக இயற்கையை முதலில் வணங்கத் தொடங்கிய மக்கள், பின்னர் தங்களுக்கு ஒளி தரும் சூரியனையும், நீர் தரும் மழையையும், மரங்களையும் அன்பின் காரணமாக வணங்க ஆரம்பித்தனர். இதனை 'கொடிநிலை கந்தழிவள்ளி' என்று தொல்காப்பியம் உணர்த்துகிறது.[1] கொடி நிலை என்பது சூரியன்; கந்தழி என்பது தீ; வள்ளி என்பது திங்கள் என்பதாகும். அவை மூன்றும் முத்தீ வழிபாட்டினைக் குறிப்பதாகும்.[2]

#### 1.1.1. சூரியனை வணங்குதல்:

மக்கள் ;தாம் வாழ்வதற்கு ஒளி தேவை என்பதை உணர்ந்திருந்தனர். எனவே தான் சூரியனை முதன் முதலில் தெய்வமாக வணங்க ஆரம்பித்தனர் என்பதை அறியும் வகையில்

> ''தயங்குதிரைப் பெருங்கடல் உலகுதொழத் தோன்றி
> வயங்கு கதிர் விரிந்த வுருகெழு மண்டிலங்''

என்ற அகநானூற்றுப் பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.[3] மேலும் ''ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும்'' என்ற சிலப்பதிகார மங்கல வாழ்த்துப் பாடல் சூரிய வணக்கம் பற்றிக் குறிப்பிடுவது காணலாம்.[4]

#### 1.1.2. திங்களையும் மழையையும் வணங்குதல்:

பகலில் ஒளி தரும் சூரியனை வணங்கிய மக்கள் இரவில் ஒளி தரும் திங்களையும் வணங்கினர். மேலும்,

தாகம் தணிக்க நீர் தரும் மழையையும் கடவுளாக வணங்கினர். இதனைத் "திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்! - மாமழை போற்றுதும்! மாமழை போற்றுதும்!" என்ற சிலப்பதிகார மங்கல வாழ்த்துப்பாடல் மூலம் அறியலாம்.[5] இத்தகைய வணக்கமே பிற்காலத்தில் கோயில்கள் உருவாக அடித்தளமாக அமைந்தது எனலாம். மேற்சொன்னவாறே இறைவனுக்கென்று தனிப்பட்ட கோயில்கள் எதையும் அமைத்து வழிபடவில்லை. அவை யாவும் பிற்கால வளர்ச்சியேயாகும். பின்னர் மக்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்தின் தன்மைக்கேற்பவும், மேற்கொண்ட வாழ்க்கையின் தன்மைகளுக்கு ஏற்ற வகையிலும் தங்களுடைய வாழ்க்கை முறைகளை வகுத்துக்கொண்டனர். அவ்வாறே தாங்கள் வாழ்ந்த நிலத்தினைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்து வகையாகப் பிரித்துக் கொண்டனர்.

குறிஞ்சி நிலக் கடவுளாக சேயோனையும், முல்லை நிலக் கடவுளாக மாயோனையும், மருத நிலக் கடவுளாக இந்திரனையும், நெய்தல் நிலக் கடவுளாக வருணனையும் வழிபட்டனர். இதனை

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
................" என்று தொல்காப்பியமும் கூறுவது காணலாம்.[6]

பாலை நிலத்தில் கொற்றவை வழிபாடு மேற்கொண்டதை மறங்கடக்கூட்டிய குடிநிலை சிறந்த என்ற தொடர் உணர்த்துவது காணலாம்.[7]

மாயோன், சேயோன் என்று அழைக்கப்படும் தெய்வங்களுக்கு நிலங்கள் பற்றிய பெயர்கள் வைக்கும் வழக்கம் தொல்காப்பியத்தில் காணப்படுவதால் அவர்களுக் கேற்ற உருவ வழிபாடுகள் மேற்கொள்ளப்பட்டன.

இவ்வகையில் தோன்றியதே உருவ வழிபாடு ஆகும். பின்னர் அவ்வுருவங்களைப் பாதுகாக்கும் வகையில் தோன்றியதே கோயில்களாகும். இவற்றிலிருந்தே பிற்காலத்தில் கோயில் கட்டடக்கலை வளர்ச்சியடைந்தது எனலாம். பண்டைய தமிழகத்தில் செங்கற் கோயில்கள், மாடக் கோயில்கள், களிமண் கோயில்கள், மரக் கோயில்கள் என பல்வகைக் கோயில்கள் வழக்கத்திலிருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.[8]

## 1.2. தோற்றமும் வளர்ச்சியும்:

காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் சங்க காலம் 1443 கலி வருடத்தில் மூவேந்தர்களில் சோழ அரசன் காஞ்சி வந்தபொழுது அவ்விடம் எட்டி மரங்கள் நிறைந்த காடாகக் காட்சியளித்தது. அதனை ஆழ்ந்து பார்க்கும்போது ஒரு நதி காணப்பட்டது. அந்நதியின் கரையைக் கவனித்துப் பார்க்கும்போது ஒரு லிங்கம் இருப்பது தெரியவந்துள்ளது. அதனை மண்ணில் இருந்து வெளியே எடுத்தபோது ஒரு ஆவுடையாரும் அதற்கான ஆதாரமும் தெரியவந்துள்ளது. மேலும் அதன் அடிப்புறத்தே அகழ்ந்து பார்க்கும்போது மற்றொரு லிங்கம் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அதற்கும் கீழே பார்க்கும்போது மூன்று ஆவுடையார்கள் இருப்பது கண்டறியப்பட்டது அறியற்பாலதாகும்.[9] அந்த வகையில் கோயில்கள் உருவாக்கப்பட்டதைக் காணும்போது காஞ்சியில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் பழமை அறிய வேண்டி உள்ளது. எனவே, முதலில் அக்கோயில் மூலமாக காஞ்சியின் பெருமை அறியற்பாலதாகும்.

ஆவுடையாரின் பக்கத்தில் வடமொழியில் விஷ்ணு, சிவன் மொழியில் பிரம்மதேவன் கையெழுத்து இருந்தது. அதன் மூலம் அங்கு பாயும் ஆறு கம்பா நதியென்றும், கண்டறியப்பட்ட லிங்கம் கம்பாலிங்கம் என்றும் அவைகள் கண்டறியப்பட்ட இடம் காஞ்சிபுரம் என்பது அறியற்பாலதாகும்.[10]

### 1.2.1. ஏகாம்பரநாதர் கோயிலின் பழமை :

இக்கோயிலில் கண்டெடுக்கப்பட்ட லிங்கம் கிரேதாயுகத்தில் தேவேந்திரன் ஆட்சியில் காஞ்சியில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இவ்வுலகில் ஆதிகயிலைக்கு அடுத்து ஏகாம்பரநாதர் கோயில் பெருமை வாய்ந்தது என்பது அறியற்பாலதாகும்.[11]

செங்கல், மரம், களிமண் ஆகியவற்றால் கட்டப்பட்ட கோயில்கள் விரைவில் அழியக்கூடிய தன்மை கொண்டதான அழிநிலைக் கோயில்களாகும். இதற்குச் சான்றாக 'இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென' என்ற அகநானூற்றுப் பாடல் உணர்த்தும்.[11] இக்கோயில்களும் நீண்ட காலம் அழியா திருக்கக்கூடிய நிலையில் பல்லவர்களால் கற்கோயில்கள் அமைக்கப்பட்டது. இதனை 'சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்' என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகள் நினைவுபடுத்துகின்றன.12

### 1.2.2. அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் தோற்றம்

#### கோயிலின் தோற்றம்:

கற்கோயில்களைக் கட்டக் கற்றுக்கொண்ட மக்கள் அவற்றில் பல புதுமைகளையும்; கலை நயத்தையும் கொண்டு வந்தனர். அவ்வாறு கட்டப்பட்ட கோயில்களில் ஒன்று தான் காஞ்சி அருள்மிகு ஏகாம்பநாதர் கோயில் ஆகும். கோச்செங்கணான் என்னும் மன்னர் ஏகாம்பரநாதர் கோயிலை முதன் முதலாகக்கட்டி, காஞ்சிக்குத் தலவிருட்சமாக மாமரத்தை உரிமையாக்கியுள்ளான். இதனையறியும் வகையில் திருமங்கையாழ்வார் "எண் தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து" என்று போற்றுவர். இதற்குச் சேர பெரியவாச்சான் பிள்ளை என்னும் வைணவ ஆசாரியர் 'எட்டு தோள்களையுடைய ருத்ரனுக்கு அழகு பூண்ட எழுபது ஆலயங்களைப் பிரதிட்டை செய்து' என்று உரையிடுவர்.[14] அவ்வாறே இதே மன்னன் தில்லையைச்

செப்பனிட்டு பெருங்கோயிலாக்கி, தில்லை என்ற மரத்தைத் தலவிருட்சமாக்கி மதுரைக்குக் கடம்ப மரத்தையும். குற்றாலத்துக்குக் குறும்பலா மரத்தையும் உரிமையாக்கி யுள்ளான் என்பது அறியற்பாலதாகும். மேலும் சோழ மன்னர்களில் சிறந்தவரான கரிகால் சோழன் காஞ்சியையும் ஏகாம்பரநாதர் கோயிலையும் செம்மைப்படுத்தியதை

'கச்சி வளைக்கச்சி காமகோட்டம் காவல்
மெச்சி இனிதிருக்கும் மெய்ச்சாத்தன் கைச்செண்டே'

என்ற சிலப்பதிகார வரிகள் மூலம் அறியற்பாலதாகும்.[15] மேலும் இந்தக் கோயிலுக்கும் அரிய பல பணிகளைச் செய்துள்ளதால் இம்மன்னனது சிலை கொடிமர மண்டபத்திலிருந்து கோயிலுக்குள் நுழையும் தென்பகுதியில் உள்ளது. ஆகவே, ஏகாம்பரநாதர் கோயில் முற்காலச் சோழர்களால் கட்டடப்பட்டது என்பது தெளிவாகிறது. சோழ மன்னர்களான விஜயாலயன், ஆதித்தன் ஆகியோரால் கட்டப்பட்ட மதுரை, சிதம்பரம் ஆகிய கோயில்களில் அம்பிகைக்குக் கோயிலில் இடம் இருப்பினும் ஏகாம்பரநாதர் கோயிலில் அம்பிகைக்காகத் தனிக்கோயில் அமைக்கப் படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**நகரின் தோற்றம்:**

கோயிலின் தோற்றத்திற்கும் நகரின் தோற்றத்திற்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. மக்கள் தாம் உருவாக்கிய நகரங்களின் கட்டடக்கலை மற்றும் அமைப்பு போன்ற வற்றோடு தொடர்புபடுத்தியே கோயில்களையும் உருவாக்கினர். பத்துப்பாட்டில் 'நளிமலைச் சிலம்பின் நன்னகர்' என்ற தொடரில் நகர் என்ற சொல்லே கோயில் என்ற பொருளில் வந்துள்ளது.[16] 'நகரேஷு காஞ்சி' என்று வடமொழியில் கூறப்படும் நகரங்களுள் நாகரிகத்தின் அடையாளமாகத் திகழும் நகரம் காஞ்சியாகும்.

காஞ்சி மாநகரம் தாமரை மலர் போன்ற அமைப்பு உடையதாய் இருந்துள்ளது. அதனைச் சுற்றிலும் அகழி இருந்தது. அகழியைச் சுற்றி காவற்காடுகளும், சோலைகளும் இருந்துள்ளன. பலகாலம் ஓடிக் குழித்த காட்சியையுடைய நீண்ட தெருக்களும் இருந்தன. பண்டங்களை விற்கவும் வாங்கவும் பெரிய கடைத்தெரு அமைந்து இருந்தது. பல்வேறு சமயத்தாரும் வணங்கக்கூடிய கோயில்கள் இருந்துள்ளன. அவற்றில் பல்வேறு விழாக்கள் நடைபெற்று வந்தன. பழத்தின் இனிமையால் உயர்த்திச் சொல்லும் பலாப் பழத்தைப்போல, பல சமயத்தினரும் நடத்தும் விழாக்களால் உலகத்து நகரங்களில் எல்லாம் தலைசிறந்த நகராகத் திகழ்ந்தது காஞ்சியாகும் என காஞ்சிப்புராணம் வாயிலாக அறியற்பாலதாகும்.[17]

இத்தகைய நகரக் கலாசாரத்தோடே காஞ்சிபுரத் திலுள்ள ஏகாம்பரநாதர் கோயிலும் உருவாக்கப்பட்டுள்ளன. எனவேதான் கோயிலின் தோற்றத்திற்கும், நகரின் தோற்றத்திற்கும் நெருங்கிய தொடர்புள்ளது என்பது உறுதியாகிறது. ஏகாம்பரநாதர் கோயிலின் வளர்ச்சிக்குக் காரணமாக சங்ககால பல்லவர், சோழர்கள், பாண்டியர்கள், சம்புவராயர், விசயநகர மன்னர்கள் ஆகியோரின் பங்கு மிகவும் சிறப்பாக விளங்கியது.

## 1.3. கோயிலின் வளர்ச்சி:

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் வளர்ச்சிக்குக் காரணமாக சங்ககாலம், பல்லவர், சோழர், பாண்டியர், சம்புவராயர், விசயநகர மன்னர் ஆகியோரின் பங்கு சிறந்ததாகும்.

### 1.3.1. சங்ககால வளர்ச்சி:

கோயிலின் தோற்றத்திற்கும், நகரின் தோற்றத்திற்கும் எத்தகைய தொடர்பு இருந்ததோ, அதே தொடர்பு வளர்ச்சி நிலையிலும் காணப்படுகின்றது. பல்வேறு அரசர்களின்

ஆட்சிக்காலங்களில் காஞ்சிபுரம் பல்வேறு விதமான மாற்றங்களைக் கண்டுள்ளது. பல்லவர், சோழ, பாண்டிய சம்புவராயர், விசயநகர மன்னர்களின் ஆட்சிக் காலத்திலும் காஞ்சிபுரம் படிப்படியான வளர்ச்சி நிலைகளைக் கண்டுள்ளது. காஞ்சிபுரம் எவ்வாறு வளர்ச்சியடைந்ததோ அதைப் போன்றே பல்வேறு பேரரசுகளின் ஆட்சிக் காலங்களிலும் ஏகாம்பரநாதர் கோயில் வளர்ச்சி நிலைகளைக் கண்டுள்ளது.

பரிபாடலில்

'ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்
மைந்துடை ஒருவனும், மடங்கலும் நீ என்ப' என்றும்

ஐங்குறு நூற்றில்

'நீலமேனி வாலிழைபாகத்து
ஒருவன் இருதாள் நிழல்கீழ்
மூவகை உலகம் முகிழ்த்தன முறையே'

என்றும்

'தாழ்சடை பொலிந்த அருத்தவந்தோன்'

என்றும்

சங்க காலத்திலேயே சிவபிரானைப் போற்றியும் பல கோயில்கள் இருந்துள்ளன என்பது அறியற்பாலதாகும்.[18]

காஞ்சியிலும் சங்க கால மக்கள் பலர் சிவலிங்க வழிபாட்டை மேற்கொண்டுள்ளனர். காஞ்சியை ஆட்சி செய்த மன்னர்களில் சிலரும், காஞ்சியிலுள்ள சிவலிங்கங்களின் சிறப்பைக் கேட்டுணர்ந்த பிற மன்னர்களும் சிவலிங்கங்களைச் சுற்றிக் கோயில் அமைக்க முயற்சி மேற்கொண்டுள்ளனர். அவ்வாறு சில மன்னர்களின் முயற்சியால் உருவானதே ஏகாம்பரநாதர் கோயிலாகும்.

சங்க காலத்தில் வாழ்ந்த முற்கால சோழ மரபைச் சார்ந்த கோச்செங்கணான் என்ற சோழ அரசர் ஒவ்வொரு கோயிலுக்கும் ஒரு மரத்தைத் தல விருட்சமாக உரிமையாக்கி

யுள்ளான் என்பது அறியற்பாலதாகும்.[19] இதன் உட்பொருள் யாதெனில் கோயில்களை அமைக்கும் பணியில் இவ்வரசன் மிகுந்த ஈடுபாடு கொண்டுள்ளான் என்பதேயாகும். இவ்வரசனால் தமிழகத்தில் பல கோயில்கள் அமைக்கப் பட்டுள்ளன. அவற்றுள் ஒன்றுதான் ஏகாம்பரநாதர் கோயிலாகும். இக்கோயிலே பிற்காலத்தில் மகோன்னதமாக வளர்ச்சியடைந்துள்ளது.

ஏகாம்பரநாதருக்கு அமைந்த பல பெயர்களில் மாமூலன் என்பது ஒன்றாகும். 'மா' என்பது மரம் என்றும் 'மூலம்' என்பதால் அதன் அடியையும் குறிக்கும். எனவே, மரத்தின் அடியில் இருப்பவர் என்பது பொருள். இப்பெயரிலேயே சங்கப்புலவர் ஒருவர் இருந்தார் என்பது குறிப்பிடத் தக்கதாகும். அவ்வாறே காமாட்சிக்கு உரிய பல பெயர்களில் 'காமக்கண்ணி' 'நப்பசலை' என்ற பெயர்களில் பெண்பாற் புலவர்கள் சங்க காலத்தில் இருந்தனர் என்பது புலப்படுவதால், ஏகாம்பரநாதர் - காமாட்சி அம்மை வழிபாடு அக்காலத்தில் இருந்தமைக்கு அடையாளமாகக் கொள்ளத்தக்கதாகும்.[20]

இருப்பினும் கோச்செங்கணானுக்கு முன்பே ஏகாம்பர நாதர் கோயில் உருவாக்கப்பட்டு இருக்கலாம். அதற்குச் சான்றாக திருமூலர் கி.மு.3100இல் காஞ்சிபுரம் வந்து ஏகாம்பரநாதரைத் தரிசித்து அக்காலத்தில் காஞ்சியில் இருந்த யோகமுனிவர்களுடன் உரையாடியது குறிப்பிடத்தக்கதாகும்.[21]

### 1.3.2. பல்லவர்கள் கால வளர்ச்சி:

ஏகாம்பரநாதர் கோயில் பல்லவர்கள் ஆட்சிக் காலத்தில் சிறப்பாக வளர்ச்சிகளைக் கண்டுள்ளது. பல்லவர்கள் செய்த சமயத் தொண்டுகளில் கோயில்களைக்கட்டியதே சிறப்புடையதாகும். பல்லவர்கள் ஆட்சியில் 530க்கு மேற்பட்ட கோயில்கள் இருந்துள்ளதை அப்பர், சம்பந்தர், சுந்தரர் பாடல்களால் அறிந்துகொள்ள முடிகிறது.[22] மண்தளிக்

கோயில்களாக இருந்தவற்றை கற்றளிகளாக மாற்றினர். பல்லவ வேந்தர்களில் முதலாம் மகேந்திரவர்மன் ஏகாம்பர நாதர் கோயிலில் ஒரு மண்டபம் கட்டித் தன் விருதுகளை மண்டபத் தூணில் கிரந்த மொழியில் பொறித்ததும், இடபேசுவரர் சிற்றாலயத்தையும் புதுப்பித்துள்ளதும் குறிப்பிடத் தக்கதாகும்.[23] இக்கோயிலுள்ள இவரது கல்வெட்டுடன் கௌதம புத்தரின் தியானச் சிற்பங்களும், நிர்வாணச் சிற்பங்களும் இடம் பெற்றுள்ளன என்பது அறியற்பாலதாகும்.[24]

மகேந்திரவர்மனால் இயற்றப்பட்ட மத்தவிலாசப் பிரகசனம் என்ற நாடக நூல் மூலமாக ஏகாம்பரநாதர் கோயிலைப் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது. பிரகசனம் என்பது நகைச்சுவை நாடகமாகும். இதன் மூலமாக காஞ்சியில் வழக்கத்திலிருந்த காபாலிகம். காளாமுகம். பாசுபதம். பௌத்தம். சமணம் போன்ற சமயங்களின் கருத்துக்களை அறிந்துகொள்ள முடிகிறது.[25]

முதலாம் மகேந்திரவர்மன் மகன் முதலாம் நரசிம்மவர்மன் காலத்திலும் ஏகாம்பரநாதர் கோயில் வியக்கத்தக்க வளர்ச்சியடைந்திருக்கிறது. இவனது காலத்துத் தூண்கள் சிங்கத்தூண்கள்; நிமிர்ந்து உட்கார்ந்த சிங்கங்கள் தூண்களைத் தாங்குவது போல இருக்கும். சிங்கத்தூண்களை முதன் முதலில் உண்டாக்கியவன் நரசிம்மவர்மனே என்பர். இதன்மூலம் ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள சிங்கத்தூண்கள் அனைத்துமே நரசிம்மவர்மனால் அமைக்கப்பட்டவைகளே என்பது தெளிவாகிறது.

கருவறை வாயிலுக்கு இருபுறத்திலும் துவாரபாலகர் உருவம் அமைப்பது பல்லவ மன்னர்களின் வழக்கம். இது மகேந்திரவர்மன் காலத்தில் இருந்தபோதிலும் அவைகள் இரண்டும் கைகள் கொண்டதாக மட்டும் இருக்கும். ஆனால் நரசிம்மவர்மன் காலத்தில் நான்கு கைகள் கொண்டதாகவும், கருவறை வாயிலை நோக்கியபடியும் அமைக்கப்பட்டிருக்கும்.

ஆனால் ஏகாம்பரநாதர் கோயிலின் கருவறையின் வெளிப்புறத்தில் அமைந்துள்ள துவாரபாலகரின் உருவங்கள் முன்புறப் பார்வை கொண்டுள்ளதால் அவை மகேந்திரவர்ம பல்லவனால் அமைக்கப்பட்டு இருக்கலாம் என்பது அறிஞர் கருத்தாகும்.[26] முதலாம் மகேந்திரவர்மன் காலத்தில் கட்டிய ஏகாம்பரநாதர் கோயிலின் மூன்றாம் பிரகாரத்தில் பாழடைந்த சிறு மண்டபக் கற்றூண்கள் நடுவில் சதுரமாகவும் இருபுறமும் எட்டுப்பட்டை தீட்டியவையாகவும் உள்ளன.[27]

மகேந்திரவர்மனின் மகனான நரசிம்மவர்மனால் கட்டப்பட்ட கோயிலுள் சோமாஸ்கந்த உருவம் முக்கியமான தாகும். இந்த உருவமானது கட்டில் போன்ற ஒரு ஆசனத்தில் இறைவனும், இறைவியும் சுகாசன மூர்த்தமாக அமர்ந் துள்ளார்கள். பெருமான் நீண்ட சடாமுடியுடன் வலது காலை மடக்கி இடது காலைத் தொங்கவிட்டுச் சுகாசனமாக அமர்ந்து நான்கு கைகளில் இரண்டு கைகளைத் தொடைகள் மேல் வைத்து மற்ற இரண்டு கைகளிலும் மான், மழு ஏந்தியிருத்த தலாகும். ஏகாம்பரநாதர் கோயிலில் இவ்வகை உருவம் உள்ளதால் இக்கோயில் நரசிம்மவர்மன் காலத்தில் செப்பனிடப்பட்டதாகக் கூறுவர்.[28] பல்லவர் காலத்தில் நாயனாராக மாறிய ஐயடிகள் காடவர்கோன் அருளிய சிவத்தளி வெண்பாவில் "என் நெஞ்சே உன்னை இரந்தும் உரைக்கின்றேன்" என்ற தொடர்மூலம் ஏகாம்பரநாதரைக் குறிப்பிடுவது அறியற்பாலதாகும்.[29] கம்பாதீர்த்தம் அருகிலுள்ள கோபுரம் பல்லவ மன்னர்களால் கட்டப்பட்டதால் இக்கோபுரம் பல்லவர் கோபுரம் என்றழைக்கப்படுகிறது. இவர்களைப் பின்பற்றியே சோழர்கள் பெருங்கோயில்கள் கட்டினார்கள். எனவே, பல்லவர்களே கோயில் அமைப்பதற்கு மூலபுருடர்கள் எனக்கூறலாம். இவ்வாறு கட்டடக் கலையிலும், ஓவியக்கலையிலும், சிற்பக்கலையிலும் தேர்ச்சி பெற்றவர்களால் உருவாக்கப்பட்ட ஏகாம்பரநாதர் கோயில் ஒரு வரலாற்றுப் பெட்டகமாகும்.

### 1.3.3. சோழர்கள் கால வளர்ச்சி:

முற்கால சோழ மன்னனான கோச்செங்கணானால் கட்டப்பட்டதாகக் கருதப்படும் ஏகாம்பரநாதர் கோயில் பிற்காலச் சோழர்களால் சிறப்பான வளர்ச்சி நிலையினை எட்டியுள்ளது. ஏகாம்பரநாதர் கோயிலில் கி.பி.1120ல் முதலாம் குலோத்துங்கன் துர்க்கைச் சிற்பத்தை அமைத்து நூற்றுக்கால் மண்டபம் கட்டி பொன் மயமாக்கியுள்ளார்.[30] பின்னர் இம்மண்டபம் ஆயிரங்கால் மண்டபமாக விசயநகர மன்னர்களால் மாற்றப்பட்டு உள்ளது. இம்மண்டபத்தை புலவர்கள் கூடி நூல் வெளியிடும் இடமாகப் பயன்படுத்தி யுள்ளனர். கோயிலின் உள்ளே அகத்தீசுவரர் மண்டபமும், சபாநாதர் மண்டபமும் கட்டப்பட்டுள்ளது. மூன்றாம் குலோத்துங்கனால் திருப்பணி மேற்கொள்ளப்பட்டுள்ளது.[32]

சோழ அரசர்களில் கோப்பெருஞ்சிங்கன் என்னும் சிற்றரசனின் இரு மகன்களும் ஏகாம்பரநாதர் கோயிலுக்குப் பசுக்களைத் தானமாகத் தந்துள்ளனர்.[33] முதல் குலோத்துங்கனின் ஆட்சிக் காலததில் காஞ்சி நகரமாக அழைக்கப்படடுச் சிறப்பிடம் பெற்றுள்ளது.[34]

இம்மன்னனின் மனைவி ஏகாம்பரநாதர் கோயிலுக்குத் திருப்பணி செய்ததாகக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[35] இக்காலத்தில் வாழ்ந்த பட்டினத்தடிகள் தம்முடைய திருவேகம் பத்தந்தாயில் உலகாளும் அரசர்கூட ஏகாம்பரநாதரைப் பணிந்து வணங்காதவர்கள் கானகத்தில் திரியும் வேடுவர் நிலைக்குத் தள்ளப்படுவர் என்பதால் ஏகாம்பரநாதரின் மேன்மை அறியப்படுகிறது.[36]

### 1.3.4. பாண்டியர்கள் கால வளர்ச்சி :

பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் காஞ்சியில் பாண்டியர்கள் ஆட்சி ஏற்பட்டது. இவர்கள் ஏகாம்பரநாதர் கோயிலின் வளர்ச்சிக்கு சிறப்பான பங்கினை ஆற்றி யுள்ளனர். அவ்வகையில் சடாவர்ம பாண்டியன் காஞ்சி

அருகிலுள்ள திருக்கச்சூரை கோயிலுக்குத் தானமாகக் கொடுத்துள்ளான் என்பதை கல்வெட்டுகள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.[37] காஞ்சியை அடுத்துள்ள திருப்புட்குழி இம்மன்னனது வடக்கு எல்லையாக இருந்துள்ளது. அங்குள்ள விஜயராகவப் பெருமாள் கோயிலிலும் பாண்டிய மன்னர்கள் வளர்ச்சிப் பணிகளை மேற்கொண்டுள்ளனர். இதனால் மன்னரின் சைவ, வைணவ சமயப்பற்று புலனாகிறது.

## 1.3.5. சம்புவராயர்கள் கால வளர்ச்சி:

சம்புவராயர்கள் ஆரணிக்கு அருகிலுள்ள A.K.படவேடு என்னுமிடத்தை தலைநகராகக் கொண்டு ஆட்சிசெய்த குறுநில மன்னராவர். இவர்களும் ஏகாம்பரநாதர் கோயிலுக்குச் சீரிய தொண்டாற்றியுள்ளனர். கி.பி.1360ல் இராஜ நாராயண சம்புவராயன் கோயிலில் துலாபாரம் கட்டியதும், தேர் செய்து கொடுத்ததும் அறியப்படுகின்றன. மேலும் ஏகாம்பரநாதர் தலையில் அணிவிக்கும் ஒரு திருமுடியையும் அளித்ததோடு, பள்ளிகோபுரமும் இம்மன்னனால் கட்டப்பட்டுள்ளது.[38] இம்மன்னனே ஏகாம்பரநாதர் கோயில் பூசை வழிபாட்டுக்காக நான்கு வேலி நிலத்தை இறையிலியாகத் தருவதாகக் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.[39] இவனது மகன் ஏகாம்பர சம்புவராயனும் கோயிலுக்குத் திருப்பணிகள் செய்துள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.[40]

காகதீய மன்னன் கணபதி காஞ்சி சூராகரன் என்ற வெற்றி விருது பெற்றதற்கு களத்தூர் கிராமத்தை ஏகாம்ப நாதர் கோயிலுக்குத் தானமாகத் தந்துள்ளான். இம்மன்னனின் மகள் கனகாம்பாவால் மண்டபத்தூண் எழுப்பபட்டள்ளது. பின்னர் அம்மன்னர் மனைவி சூரியதேவியால் ஏகாம்பரநாதர் கோயிலில் திருநந்தவனம் அமைக்கப்பட்டு உள்ளது.41 இதனைத் தொடர்ந்து ஹொய்சாள வேந்தன் விஜயகண்ட கோபாலனால்

இக்கோயில் புதுப்பிக்கப்பட்டுள்ளது.

### 1.3.6. விசயநகர மன்னர்கள் கால வளர்ச்சி:

தமிழகத்தில் முற்காலச் சோழர், பல்லவர்கள், பிற்காலச் சோழர்கள் ஆகியோரால் வளமாக்கப்பட்டுப் பாண்டிய மன்னர்களால் அழகுபடுத்தப்பட்ட கோயில் கட்டிடக்கலை, விசயநகர மன்னர்கள் காலத்தில் மேலும் அழகுபடுத்தப்பட்டு மிகவும் சிறப்பான வளர்ச்சியினை அடைந்தது.[42] அவ்வகையில் பல்லவ சோழர்களை விசயநகர மன்னர்களின் முன்னோடி எனக்கூறலாம்.

விசயநகர மன்னர்கள் பழைய கோயில்களிலும் புதிய மண்டபங்களையும், துணைக்கோயில்களையும், காட்சி மண்டபங்களையும் கட்டினார்கள். ஆயிரங்கால் மண்டபங்கள், நூற்றுக்கால் மண்டபங்கள், திருக்குளங்கள், இராச கோபுரங்கள் போன்றவைகள் உருவாக்கப்பட்டதை அறிந்து கொள்ள முடிகிறது.[43] அந்த வகையில் ஏகாம்பரநாதர் கோயிலினுள் சோழர்களால் கட்டப்பட்ட நூற்றுக்கால் மண்டபத்தை ஆயிரங்கால் மண்டபமாக மாற்றிய பெருமை இவர்களைச்சாரும்.[44] முதலாம் புக்கரின் மகன் குமார கம்பணன் தனது ஆட்சிக் காலத்தில் ஏகாம்பரநாதர் கோயில் பிராமணர்களுக்கு மேல் ஒட்டிவாக்கத்தில் இருவேலி நிலத்தைத் தானமாக அளித்துள்ளார்.[45] கி.பி.1367ல் ஏகாம்பரநாதர் கோயிலில் தேவாரம் பாடுவதற்கு குமார கம்பணனால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள செய்தியை அறிந்து கொள்ள முடிகிறது.[46] மேலும் குமார கம்பணனை அடுத்து இரண்டாம் புக்கனால் ஏகாம்பரநாதர் கோயிலில் கி.பி.1380ல் நடராசர் சன்னிதி கட்டப்பட்டுள்ளது.[47]

இக்கோயில் நிர்வாகிகள் மாவடிக்கந்தர் சன்னதியின் தேவதான நிலமான சிறு காவேரிப்பாக்கத்தை 26-03-1406ல் வரதராச உடையார் மகன் ஜம்பைய தண்ட நாயகத்துக்கு 250 வாசிபடா வீர சம்பன் குளிகை பெற்றுக்கொண்டனர். இது பொது ஏலத்தில் விற்பனை செய்யப்பட்டதை அறிய

முடிகிறது.[48]

மேலும் இக்கோயில் வளர்ச்சிப் பணிகளில் அடுத்ததாகப் பங்கு கொண்டவர் மல்லிகார்சுனன் ஆவார். இவர் தனது ஆட்சிக்காலத்தில் (கி.பி.1452-1464) கவிஞர் அப்பரம உடையார் நினைவாக ஏகாம்பரநாதர் கோயிலைப் பழுது பார்க்க இரு கிராமங்களின் வரிகளை (புதுப்பாக்கம், வேளியூர்) மறு நிர்ணயம் செய்து வழங்கியுள்ளார்.[49]

அடுத்து சாளுவ நரசிம்மன் தனது ஆட்சிக் காலத்தில் (கி.பி.1480-1498) ஏகாம்பரநாதர் கிழக்கு கோபுரம் அருகிலுள்ள ஆலால சுந்தரர் மடம் நலிவுற்று இருந்ததால் அதனை நிருவகிக்க கூடலுடையான் தழுவக்குழைந்தானுக்கு 18-01-1483ல் நிலதானம் அளித்தது காணலாம்.[50] இம்மன்னன் தன் இறுதி ஆட்சியாண்டில் காஞ்சி காமகோடி பீடத்தைக் கட்டியதுடன், அதனை நிபிடநாமம் சிவவம்சத்தவனைக் கொண்டு உயர்ந்த கற்களால் விரிவு படுத்தியுள்ளான்.

அடுத்ததாக இம்மரபில் சிறந்தவரான கிருஷ்ண தேவராயர் ஆட்சிகாலத்தில் (கி.பி.1509-1529) ஏகாம்பர நாதருக்கு ஏழு ஆள் உயர வாசற்கதவைப் பொருத்தி 26-12-1510ல் பல வழிபாடுகளைப் பூசையுடன் உற்சவம் நடத்த குன்றத்தூரைக் தானமாகக் கொடுத்துள்ளார்.[51] கிருஷ்ணதேவராயர் கி.பி.1517-1518ம் ஆண்டில் சோழ மண்டலத்தில் சைவ-வைணவ ஆலயங்களுக்குப் பதினாயிரம் வராகன் தருமம் கொடுத்துள்ளார். அவ்வகையில் காஞ்சிபுரத்திற்குத் தன் மனைவி திருமலாதேவியுடன் வந்து ஆயிரம் வராகன் காணிக்கை தந்து பொன் கூடத்திலுள்ள துலாபாரத்தையும் தந்துள்ளார். ஏகாம்பரநாதர் கோயிலில் தெப்போற்சவம் நடத்தி, அங்கிருந்த விநாயகருக்கு இரு சிறு தேர்கள் செய்து கொடுத்துள்ளார் என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது.[52] மேலும் கி.பி.1509ஆம் ஆண்டில் தென்திசையிலுள்ள நுழைவாயில் கோபுரத்தைக் (192அடி

உயரம் கொண்டது கட்டியுள்ளார்.[53] கிருஷ்ணதேவராயரால் கட்டப்பட்ட இராசகோபுரம் இராய கோபுரம் என்றழைக்கப் படுவதை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.[54] கி.பி.1517ல் தெப்போற்சவம் நடத்த மேலும் அதிக உதவிகள் செய்துள்ளார். இதனை விதானத்திலுள்ள தமிழ், தெலுங்கு கல்வெட்டுக்கள் உறுதிப்படுத்துகின்றன.[56] மேலும் கிருஷ்ணதேவராயர் தம்முடைய அமைச்சரான அச்சுத தேவராயன் தன்னால் தானமாக்கப்பட்ட நிலங்கள் வரதராசர் மற்றும் ஏகாம்பரநாதர் கோயிலுக்குச் சமமாகப் பிரித்தளிக்கப்படாததால், மீண்டும் தலையிட்டு நியாயம் வழங்கியதை அறிந்துகொள்ள முடிகிறது.[56] மெய்கண்டார் மடமானது கிருஷ்ணதேவராயரின் முதலமைச்சர் அம்பி அறம் வளர்த்தான் முதலியால் ஞானப்பிரகாச மடம் என மருவி தொண்டை மண்டல ஆதீனமாக இந்நாள்வரை செயல்பட்டு வருகிறது. பெரிய நாட்டார் தானத்தால் ஈசான தேவர் மடம் ஏகாம்பரநாதர் கோயிலில் நிறுவப்பட்டது அறியற்பாலதாகும்.[57] சமர கோலாகலன் என்ற மன்னன் ஏகாம்பரநாதர் மற்றும் காமாட்சியம்மன் கோயில்களுக்கு வழங்கப்பட்ட இரு கிராமத் தானங்களில் இறை செலுத்தியுள்ள விவரம் தெரியவந்துள்ளது.[58] ஏகாம்பரநாதர் கோயிலில் சிலை வடித்தவனுக்கு வரிச்சலுகைகள் அம்மன்னனால் வழங்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.[59]

மேற்கண்ட கல்வெட்டு, தொல்பொருள் ஆய்வுச் சான்று ஆகிய ஆதாரங்களின் அடிப்படையில் நோக்கும்போது ஏகாம்பரநாதர் கோயிலின் வளர்ச்சியில் விசயநகர மன்னர்கள் மிகுதியான ஈடுபாடு கொண்டு இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.

### 1.4. நாடு அடிமைப்பட்டிருந்த காலத்தில் வளர்ச்சி நிலை:

ஏகாம்பரநாதர் கோயில் ஆங்கிலேயர்களின் ஆட்சியில் அதன் வளர்ச்சியில் சிறுதடைகள் ஏற்பட்டதெனினும் சிறுசிறு வளர்ச்சிகளைக் கண்டுள்ளது. ஆங்கிலேயர் ஆட்சி

ஏற்பட்டபோது செங்கற்பட்டு மாவட்டத்துக்கு ஆட்சித்தலைவராக இருந்த ஆட்சன்துறை என்பவர் ஏகாம்பரநாதர் கோயிலின் மதிலைப் புதுப்பித்துள்ளார் என்பதை .நோக்கும்போது அந்நியரான அவர் ஏகாம்பரநாதர் மீது கொண்டிருந்த பக்தி நன்கு புலப்படுகிறது.[60]

காஞ்சி நகரப் பெருமக்கள் சார்பாக வள்ளல் பச்சையப்பர் கி.பி.1774ஆம் ஆண்டு மார்ச் மாதம் 27ம் நாள் ஏகாம்பரநாதர் கோயிலில் பலி விநாயகர், சிவகாமியம்மை திருவுருவங்களைப் பிரதிட்டை செய்து கும்பாபிடேகம் செய்துள்ளார். அதன் பின்னர் பச்சையப்பர் பங்குனி உத்திர கல்யாண மண்டபத்தைக் கட்டியுள்ளார் என்பதை அறிய முடிகிறது.[61] தேவகோட்டை ரா.ம.அ. இராமநாதன் அவர்களும், ராம செ.அ.இலட்சுமணன் அவர்களும் இருபது இலட்சம் ரூபாய் செலவில் கும்பாபிஷேகம் செய்துள்ளனர். ஏகாம்பரநாதர் கோயிலில் இரண்டாம் திருச்சுற்று எனப்படும் மாவடித் திருச்சுற்றினை நகரத்தார் கட்டியுள்ளார்கள். கி.பி.1799ஆம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் மாவட்ட ஆட்சியராக இருந்த ஹட்சன் பிரபு ஏகாம்பரநாதர் கோயிலை செப்பனிட்டு 90அடி நீள பிரகாரச் சுவரையும் எழுப்பியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[62]

### 1.5. விடுதலை பெற்ற காலம்:

நாட்டு விடுதலைக்குப் பிறகு ஏகாம்பரநாதர் கோயில் மக்களாலும், அரசாலும் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. கோயிலின் திருப்பணிகளில் மக்கள் பெரிதும் அக்கறை கொள்ளுதல் விடுதலைக்குப் பின்னர் அதிகரித்துள்ளது.

### 1.6. புராணங்கள் காட்டும் கோயில் பெருமை :

இவ்வாறு வளர்ச்சி பெற்ற இக்கோயிலைப் பற்றி 13ஆம் நூற்றாண்டில் சிவாசாரியர்கள் புராணங்கள் மூலமாகவும் தல வரலாறு மூலமாகவும் பல விஷயங்களைக் காட்டிப் பெருமை சேர்த்துள்ளனர். அந்த வகையில் இக்கோயிலைப்

பற்றி காஞ்சிப் புராணத்திலும், பெரிய புராணத்திலும் பல சிறப்பான விஷயங்கள் அறியற்பாலதாகும். அவற்றுள் கச்சியப்ப முனிவர் இயற்றியுள்ள காஞ்சிப்புராணத்தில் இறைவன் தோன்றி காட்சி தந்தமைக்கான காரணங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. மேலும் காஞ்சிபுரத்தில் அமைந்துள்ள ஏகாம்பரநாதர் தேரில் உமையம்மையை உடனழைத்துக் கொண்டு காஞ்சிபுரத்தில் தாம் எழுந்தருளியிருக்கும் கச்சித் திருநெறிக்காரைக்காடு, திருஅநேகதங்காவதம், திருமேற்றளி, திருஓணகாந்தன்தளி போன்ற திருத்தலங்களையும் சுற்றிக் காட்டினார் என்றும் காஞ்சி ஏகாம்பரநாதர் உமையம்மைக்குக் கச்சி ஏகம்பத்தின் பெருமையைக் கூறியதோடு அங்கு ஒரு மாமரத்தினடியில் என்றும், நிலைத்திருக்கும் தம்மை வழிபாடு செய்யுமாறு கூறினார் என்றும், அவ்வாறே இறைவியும் ஒரு மாமரத்தின் அடியில் எழுந்தருளியிருக்கும் திருமேனியைத் தொழுது வழிபட்டுள்ளார் என்பதும் காஞ்சிப்புராணத்தில் உள்ள தழுவக்குழைந்தை படலத்தின் மூலம் தெளிவாகிறது.[63]

அம்மையின் வழிபாட்டைச் சோதிப்பதற்காகவே இறைவன் வெள்ளம் பெருக்கெடுத்து வரச்செய்ததால் இதனின்று பெருமானைக் காக்க இறைவி அவரைத் தழுவிக் கொண்டுள்ளார். அன்புக்கு உருகும் பெருமான், உமையம்மையின் வளைத்தழும்போடு முலைத்தழும்பும் ஏற்றுத் தழுவக் குழைந்தவரானார் என்ற சிறப்பான கருத்துக்கள் அமைந்ததைக் காணலாம்.[64]

பெரியபுராணத்தில் ஏகாம்பரநாதர் கோயில் பற்றிய புராணக் கதையையும், கோயிலை வளர்க்கப்பாடுபட்ட மன்னர்களைப் பற்றியும் குறிப்பு அமைந்துள்ளது. சோழ அரசன் கரிகாற் பெருவளத்தான் பற்றியும், ஏகாம்பரநாதர் கோயில் வழிபாடுகள் பற்றியும் சேக்கிழார் பாடியது அறியற்பாலதாகும். இது இரண்டாம் இயலில் இயம்பப்படுகிறது.

### 1.6.1. மாமரத்தின் சிறப்பு:

ஏகாம்பரநாதர் கோயிலின் தலவிருட்சம் மாமரமாகும். சிவபெருமான் சம்கார காலத்தில் தாம் நடனம் செய்து உலகஉயிர்களை தம்மிடையே ஒடுக்கியபின் மீண்டும் வைகறையில் தம்பால் ஒடுங்கிய அனைத்து உயிர்களையும் தம்முள் ஒடுங்கின. அதேபோல் படைக்க எண்ணி வேதங்களைப் படைத்தார். இதனை

'பகுப்பின்றி மன்னும் பழமாமறை தன்னை நோக்கி'

என்ற காஞ்சிப்புராண வரிகள் மூலம் அறிந்து கொள்ளலாம்.[65] உலகில் நீரினால் பிரளயம் ஏற்பட்டபோது மார்க்கண்டேய முனிவர் தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சி செய்தபோது இம்மாமரம் தானேதோன்றி அம்முனிவர்க்குப் புகலிடம் அளித்ததாகவும் அறிந்து கொள்ளலாம். மேலும் இத்திருத்தலத்திலுள்ள மாமரத்தின் வயது சுமார் மூன்றாயிரத்து ஐந்நூறு வருடங்களுக்கு மேற்பட்டது. நான்கு கிளைகளிலும் நான்கு விதமான சுவையும், தோற்றமும் கொண்ட மாங்கனிகள் கிடைக்கின்றன. ஏக + ஆம்ரம்=ஏகாம்பரம். அதாவது ஒரே மாமரம் என்பதாகும்.[66]

### 1.6.2. பஞ்ச பூதத்தலங்களில் மண்தலமாகச் சொல்லப் பெறும் காஞ்சியின் சிறப்பு:

நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என்று சொல்லப்படும் பஞ்சபூதங்களைக் கொண்டு ஒவ்வொரு வடிவமாகவும், சிவபெருமான் ஒவ்வொரு இடத்தில் காட்சி தருகின்றார். இவற்றில் மண்தலமாகப் போற்றப்படுவது காஞ்சிபுரம் ஆகும். ஏகாம்பரநாதர் கோயிலில் உள்ள 'மூலலிங்கம்' மணலால் அமைக்கப்பட்டுக் கவசம் அணிவிக்கப்பட்டுள்ளது. திங்கட்கிழமையன்றும், பிற விசேஷ நாட்களிலும் இவ்வெள்ளிக் கவசம் அணிவிக்கப்படுகிறது. இலிங்கப்பகுதிக்குப் புனுகு எண்ணெய் மற்றும் வாசனைத்

திரவியங்கள் மட்டும் சாத்தப்பட்டு வருகிறது.[67] திருவாரூரில் பிறந்தால் முக்தி, திருவண்ணாமலையை நினைத்தால் முக்தி, காசியில் இறந்தால் முக்தி, திருப்பதியை மிதித்தால் முக்தி என்ற ஆன்றோர் வாக்கிற்கேற்ப காஞ்சியில் வாழ்ந்தால் முக்தி என்பது காஞ்சியின் தனிச் சிறப்பைக் குறிப்பதாகும்.

### 1.6.3. கோயில் அமைப்பு:

ஏகாம்பரநாதர் திருக்கோயில் ஐந்து பிரகாரங்களைக் கொண்டுள்ளது.

1. மூலவர் அமைந்துள்ள பிரகாரம்
2. மாமரம் அமைந்துள்ள பிரகாரம்
3. சிவகங்கைத் தீர்த்தம் அமைந்துள்ள பிரகாரம்
4. கம்பா நதி மற்றும் ஆயிரங்கால் மண்டபம் அமைந்துள்ள பிரகாரம்
5. குடியிருப்பு பகுதிகளைக் கொண்ட வடக்கு, மேற்கு, தெற்கு, கிழக்கு மாடவீதிகளைக் கொண்டு அமைந்த பகுதி ஆகும். இக்கோயில் சுமார் 23 ஏக்கர் பரப்பளவைக் கொண்டுள்ளது.

### தென்புற இராச கோபுரம்:

ஏகாம்பரநாதர் கோயிலின் தென்திசையில் அமைந்துள்ள இராசகோபுரம் ஒன்பது நிலைகளைக் கொண்டு 192அடி உயரத்தையும் 82அடி அகலத்தையும் கொண்டுள்ளது. கி.பி.1509ஆம் ஆண்டில் விசயநகர மன்னர் கிருஷ்ணதேவராயரால் கட்டப்பட்டதாகும்.[68] இக்கோபுரம் மனிதனுடைய மயக்கத்தை நீக்கவல்லது. மக்களிடம் உள்ள மயக்கத்தை நீக்கி மனிதன் உடம்பல்ல, ஆன்மா என்ற உண்மையை இடைவிடாது உணர்த்தி நிற்பது கோபுரம். கோபுர தரிசனம் கோடி புண்ணியம் ஆகும் என்பது அறியற்பாலதாகும்.[69]

### I.6.4. ஐந்து பிரகார அமைப்பு :

ஏகாம்பரநாதர் கோயிலின் கோபுரத்தைக் கடந்ததும் ஐந்து திருச்சுற்றுகள் உள்ளன. இவ்வைந்தும் மதிற் சுவர்களைப் பெற்றுள்ளன. அவைகள் இறை உடலின் மறைப்பை அறிவிப்பதாகும்.

இவ்வைந்துச்சுற்றும் பருவுடல் (அன்னமயம்) வளியுடம்பு (பிராணமயம்) (ஆனந்தமயம்) என்றும் உடம்புகள் குறிக்கின்றதை அறிந்துகொள்ள முடிகிறது.[70]

### I.6.5. இரண்டாம் பிரகாரம்:

இரண்டாம் பிரகாரத்தில் எண்ணற்ற சிவலிங்கங்கள் காணப்படுகின்றன. கணபதியின் சந்நிதிக்கு அடுத்து மேற்கிலிருந்து கிழக்காக 21 பட்டை வடிவிலான இலிங்க உருவங்கள் மேடைப்பகுதியில் வரிசையாக அமைந்துள்ளதை அறியமுடிகிறது.[71]

பள்ளியறைக்கு அடுத்து மீண்டும் 28 சிவலிங்கத் திருவுருவங்கள் வரிசையாக மேடையில் அமைந்துள்ளது அறியற்பாலதாகும்.[72] ஒரே சிவலிங்கத்தின் சிறிய சிவலிங்கங்களைக் கொண்ட சஹஸ்ரலிங்கத்தை அறிந்து கொள்ள முடிகிறது.[73]

ஏகாம்பரநாதரின் எதிரில் உள்திருச்சுற்றின் இடப் பக்கத்தில் தனியாகக் கோயில் அமைந்துள்ளது. இங்கு வைணவ சமயம் சார்ந்த பெருமாள் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். இப்பெருமாளைக் குறித்துத் திருமங்கையாழ்வார்

'நீரகத்தாய் நெடுவரையினுச்சி மேலாய்'!

நிலாத் திங்கள் துண்டத்தாய் நிறைந்த கச்சி!

என்று மங்களாசாசனம் செய்துள்ளார்.[74]

### I.7. அம்பிகைக்குத் தனிச்சந்நிதி இல்லாமை:

ஏகாம்பரநாதர் கோயிலின் தொன்மையை ஆராயும் போது அவரது இறைவியான அம்பிகையின் கோயில் பற்றி

அறிய வேண்டியுள்ளது. அவ்வாறு காணும்போது அம்பிகைக்குத் தனிச்சந்நிதி இல்லாமை தெரியவந்தது. இதனை மெய்ப்பிக்கும் வகையில் காமாட்சி விலாசம் என்ற துதிநூல் நமக்கு ஆதாரமாக விளங்குகிறது. சிவபெருமான் மீது மலர் அம்பு எய்திய மன்மதன் சிவனது நெற்றிக் கண்ணால் எரிக்கப்பட்டான். அவன் காஞ்சியில் காமாட்சி யம்மையை நோக்கி தவமியற்றி தனக்கு மீண்டும் சரீரம் வேண்டும் என வேண்ட அம்பிகையும் அவ்வாறே செய்தாள். மீண்டும் மன்மதன் சிவபிரானை வெல்வதற்கு அருள் பாலிக்குமாறு வேண்டினான். அம்பிகையும் அதனை ஆமோதித்து, சிவன் கோயில்களிலுள்ள தன்னுடைய சக்திகளையெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டுவிட்டார். பின்னர் படைப்புக் கடவுளான பிரம்மா இறைவனைத் தரிசிக்க கயிலை சென்று வணங்க அம்பிகையைத் தரிசிக்கச் சென்றார். ஆனால அம்பிகை அங்கு இல்லை. பின்னர் பூவுலகு சென்று அங்குள்ள சிவாலயங்களில் தேடினார். காண முடியாத காரணத்தால் இதற்கான காரணத்தை அறியமுற்பட எல்லாம் காமாட்சியம்மையின் செயலே என்று அறிந்து அவரை நோக்கித் தவம் இயற்றினார். காமாட்சி யம்மையும் தோன்றி காஞ்சிபுரத்திலுள்ள சிவாலயங்கள் தவிர்த்து பிற சிவாலயங்களில் தேவிக்குத் தனிச் சந்நிதி தோன்றும் எனக்கூறினார். ஆனால் சிவஜித் திருத்தலம் என்ற பெயருள்ள காஞ்சிபுரத்தில் தனி சந்நிதி வேண்டாம் என்று அம்பிகை கூறினார். இதனால் காஞ்சி கோயில்களில் அம்பிகைக்குத் தனிச்சந்நிதி இல்லை என்பது புலனாகிறது.[75] பஞ்சபூதத்தலங்களில் காஞ்சிபுரமும். சிதம்பரத்தைப் போன்றே ஆகாசபீடமாகக் கருதப்படுகிறது. ஆகவே, காஞ்சியும், சிதம்பரமும் ஆகாச திருத்தலங்கள் ஆகும். காமாட்சியம்மன் கோயில் காயத்ரி மண்டபத்தின் அடியிலுள்ள குகையில் அம்பிகை பிலாகாச ரூபிணியாக உள்ளார்.[75] அயோத்தி, மதுரா, மாயா, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்னும் ஏழு நகரங்களுள் காஞ்சி ஆகாச பீடமாகிறது அறியற்பாலதாகும்.[76]

### 1.8. திருக்கச்சி மயானம் அமைந்துள்ள சிறப்பு:

பண்டைக்காலத்தில் பண்டன் எனும் அசுரன் பிரமனைக் குறித்துத் தவமியிற்றி உலகத்து உயிர்களின் வீரியத்தை உண்டு வாழும் வரம் பெற்றான். இதன் காரணமாக உலக உயிர்கள் அனைத்தும் வளர்ச்சி குன்றின. இதனால் பிரமன், இந்திரன் போன்றோர் சிவபெருமானிடம் முறையிட்டதை

"முன்னொரு நான்முகன் புருடப் பெயர்க்கற்பம் முடிவெய்தி"

என்ற காஞ்சிப்புராணம் தொடர் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.77 சிவன் சொற்படி உலகவுயிர்கள் வேள்வித்தீயில் அவிர்ப் பாகமாயினர். இறுதியில் தன்னுரு கொண்ட பண்டாசூரனும் வேள்வித்தீயில் இடப்பட்டார். அதற்கு பிறகு அத்தீப்பிழம்பானது இலிங்க உருவமாகி மயான லிங்கம் என்னும் பெயர் பெற்றதை அறிந்துகொள்ள முடிகிறது.[78] இம்மயானம் தமிழ்நாட்டின் தென்பகுதியிலுள்ள கடவூர் மயானம் திருநாவலூர் மயானத்தைக் காட்டிலும் சிறப்பு வாய்ந்ததாகும் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

# இயல் ஒன்று
## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியம் புறத்திணை நூற்பா-27
2. மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் ப.652-656
3. அகநானூறு பா. -263
4. சிலப்பதிகாரம் மங்கல வாழ்த்துப்பாடல் வரி-4
5. சிலப்பதிகார மங்கல வாழ்த்துப்பாடல் வரி 1,7
6. தொல்காப்பியம் புறத்திணையியல் நூ.-5
7. தொல்காப்பியம் புறத்திணையியல் நூ.-3
8. தமிழக கோயிற்கலை ப.26
9. சோழன் பூர்வபட்டயம், காஞ்சி கல்வெட்டு, ப.6-10
10. மேலது, ப.7
11. மேலது, ப.7
12. அகநானூறு, பா.-167
13. பெரும்பாணாற்றுப்படை வரி-404
14. பெ.தி.6.6.8. பெரியவாச்சான்பிள்ளை உரை
15. சிலப்பதிகாரம் இந்திரவிழாவெடுத்த காதை வரி:95-98
16. பத்துப்பாட்டு பா.-43
17. காஞ்சிப்புராணம் திருநகரப்படலம் க.22
18. பரிபாடல் வரி-18; ஐங்குறுநூறு 4-5; புறநானூறு பா.-17
19. தமிழக வரலாறு ப.179
20. காஞ்சியின் பழமை கலைமகள், ப.105
21. திருத்தொண்டர் புராணம் வரி-83
22. சைவ இலக்கிய வரலாறு, ப.21
23. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1890 எண்.25-28
24. மேலது, எண்.25-28
25. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1939-40 எண்.344
26. தமிழக வரலாறு ப.28
27. சென்னையில் காணலாகும் தொல்பொருள் காட்சியத்தில் உள்ளது.

28. வாதாபிகொண்ட நரசிம்மவர்மன், ப.90
29. ஐயடிகள் காடவர்கோனின் சிவத்தளி வெண்பா,ப.20
30. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1890,எண்.25-28
31. மேலது 1893, எண்.1-13
32. மேலது 1893, எண்.8
33. தமிழக வரலாறு, ப.177
34. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1890 எண்.29
35. மேலது 1917, ப.583
36. திருவேகம்பமுடையார் திருவந்தாதி, பா-31
37. தொல்பொருள் ஆய்வுச்சான்று எண்.310-1909
38. EPI Vol. III ப.95
39. தொல்பொருள் ஆய்வுச்சான்று 33 of 1833-34 V-117
40. மேலது Vol. VI ப.552
41. தென்னிந்தியக் கல்வெட்டுகள் Vol. IV No.84
42. இந்தியக்கலை வரலாறு ப.521
43. விசயநகரப் பேரரசின் வரலாறு ப.35
44. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1919-20 எண்.641
45. மேலது 1923, எண்.107
46. மேலது 1956, எண்.276
47. மேலது 1893
48. மேலது 1955-56 எண்.280
49. மேலது 1923 எண்.102
50. மேலது 1939-40 எண்.346
51. மேலது 1955-56 எண்.275
52. விசயநகரப் பேரரசின் வரலாறு, ப.279
53. மேலது, ப.35
54. தமிழகச் சிற்ப ஓவியக்கலை, ப.97
55. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1919-20 எண்.2
56. தென்னிந்தியக் கல்வெட்டுகள் பாகம் VI எண்.102
57. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1939-40, எண்.349
58. மேலது 1890, எண்.25
59. மேலது 1923, எண்.101

60. காஞ்சிப்புராணம் தழுவக்குழைந்தை படலம், ப.682
61. மேலது, ப.684
62. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1955-56
எண்.274-282
63. காஞ்சிப்புராணம் தழுவக்குழைந்தை படலம்,ப-682
64. மேலது, ப.684
65. கச்சித்திருவேகம்பன் தலவரலாறு, ப.91
66. மேலது, ப.93
67. மேலது, ப.34
68. மேலது, ப.117
69. மேலது, ப.117
70. மேலது, ப.55
71. மேலது, ப.86
72. மேலது, ப.86
73. மேலது, ப.90
74. திவ்வியப் பிரபந்தம் திருநெடுந்தாண்டகம் பாடல்-8
75. காமாட்சி விலாசம் சுலோகங்கள்
9-12; 31-32; 68-73; 75
76. மேருதந்த்ரம் - 24வது சுலோகம்
77. காஞ்சிப்புராணம் கச்சிமயானப்படலம்
78. திருநாவுக்கரசர் தேவாரம் பாடல் 325

## இயல் இரண்டு

# தமிழ் இலக்கியங்களில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் சிறப்புக்கள்

### 2.0 முன்னுரை:

தமிழ் இலக்கிய வரலாற்றில் சைவ சமயம் பேரிடம் பெற்றுள்ளது. அந்தவகையில் சைவக்குரவர்கள் பலர் தோன்றி சைவ பக்தியைத் தங்கள் பிரபந்தங்கள் மூலம் வளர்த்து வந்துள்ளனர். எடுத்துக்கொண்ட தலைப்புக்கு ஏற்ப காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் சிறப்பைப் பல சைவ குரவர்கள் போற்றிப் புகழ்ந்தது இவ்வியலில் விளக்கப்படுகிறது. காஞ்சி கல்வெட்டில் சோழன் பூர்வ பட்டையம், சிலப்பதிகாரம், மூவர் தேவாரம், மத்தவிலாசப் பிரகசனம், மாணிக்கவாசகரின் திருவாசகம், பரணதேவ நாயனார் அருளிய திருவந்தாதி, நம்பியாண்டார் நம்பி அருளிய திருவந்தாதி, ஐயடிகள் காடவர்கோனின் சேத்திரவெண்பா, பெரியபுராணம், கச்சித் திருவகவல், திருவேகம்பமாலை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, கந்தபுராணம், வில்லி பாரதம், திருப்புகழ், சங்கர விலாசம்-காஞ்சிபுரமான்மியம், ஏகாம்பர நாதருலா, தொண்டை மண்டல சதகம், ஆனந்த ருத்திரேசர் வண்டு விடுதூது, தண்டியலங்காரம் கச்சியேகம்பன் கைச்சிலம்புப்பாட்டு, காஞ்சிப்புராணம், கச்சிக்கலம்பகம் ஆகிய 23 நூல்களில் ஏகாம்பரநாதர் பெருமானின் சிறப்புபற்றி ஆயப்படுகிறது.

### 2.1. சோழன் பூர்வ பட்டையம் :

சென்னை மாகாண நூலகத்தில் பதிப்பாசிரியராக இருந்த சந்திரசேகரன் என்பவரால் இந்நூல் தொகுக்கப்பட்டது. உரைநடையில் வரலாற்றுக்கருத்துகளைத் தன்னகத்தே கொண்டதாகும். இவற்றுள் ஏகாம்பரநாதரின் பெருமைகள், அவரைத் தரிசித்தால் தீரும் நோய்கள், அடியவர்களுக்கு தாமே அருளும் தன்மை முதலியவை புலப்படுகின்றன.

### 2.1.1. பெருமைகள்:

ஏகாம்பரநாதருடைய கோயிலைத் தம் கண்களால் கண்டு வணங்கினால் அவர்களுடைய கொடிய பாவங்களும், போக்கமுடியாத நோய்களும், ஒன்பது வகையான தோஷங்களும் நிவர்த்தியாகிவிடும் என்பது அறியற்பால தாகும்.[1] மேலும் கச்சிவீரன் என்பவன் கம்பாநதியில் நீராடி, அந்நதியின் நீரைக் கொண்டுவந்து ஏகாம்பரநாதரின் தலையில் ஊற்றி, எட்டி மரத்தின் இலையை வில்வபத்திரமாக நினைத்து வணங்கியதை அறிந்துகொள்ள முடிகிறது.[2]

### 2.1.2. நோய் தீர்க்கும் தன்மை:

அடுத்து கரிகால் சோழனுக்குப் பைத்தியம் பிடித்ததை அறிந்த ஏகாம்பரநாதர் மனமிரங்கி காமாட்சியம்மனை குறத்தி வடிவம் கொண்டு கரிகாலனுடைய நோயைப் போக்குமாறு அனுப்பி வைத்ததை அறிந்துகொள்ள முடிகிறது.[3]

### 2.1.3. அருளும் தன்மை:

ஏகாம்பரநாதர் மல்லிகார்ச்சுனர் என்ற சைவ ஆசாரியார் வடிவம் கொண்டு மூவேந்தர்களுக்கும் மற்றும் கச்சிமாவீரன் ஆகிய நால்வர் முன் காட்சியளித்ததை அறிந்து கொள்ள முடிகிறது.[4] துவாபரயுகத்தில் பாண்டவர்களின் தலைவன் தருமன் காஞ்சி வந்து ஏகாம்பரநாதரைக் கண்டு வணங்கினார்.[5]

### 2.2. சிலப்பதிகாரம் :

இளங்கோவடிகளால் இயற்றப்பட்ட சமணநூல் சிலப்பதிகாரம் ஆகும். இந்நூலுள் அருள்மிகு ஏகாம்பரநாதர் ஆடிய கொடுகொட்டி நடனம் பற்றிய செய்தியினை

'மேகலை ஒலியாது மென்முலை அசையாது'

என்ற வரித் தொடர்மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[5அ] இதனை விளக்கும் வகையில், திருநிலைபெற்று இருக்கின்ற

தன் சிவந்த பாதங்களிலே சிலம்புகள் ஒலி முழங்கின; சிவந்த கையினிடத்தே விளங்கும் பறை முழங்கின: ஆயிரஞ் செங்கண்களும் தன் திருக்குறிப்பினைப் புலப்படுத்தின; செஞ்சடையானது சென்று எட்டுத்திக்குகளிலும் அலைந்தன; பாடகமானது பதையாமல், சூடலமானது துலங்காமல் மேகலை ஒலி செய்யாமல், மென்மையான முலைகள் அசையாமல், நீண்ட குழையாகிய காதணிகள் ஆடாமல், மான் போன்ற கருங்குழல் அவிழாமல், உமாதேவி தன் இடப்பக்கத்தினால் ஓங்கிய இமையவனான ஏகாம்பரநாதன் ஆடிய கொடுகொட்டி என்னும் ஆட்டத்தினை நான்கு வேறுவகையான மறையவர்கள் வாழும் ஊரிலிருந்து வந்த கூத்தச் சாக்கியர்கள் செங்குட்டுவன் முன்பு ஆடினார்கள் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

"மேகலை ஒலியாது மென்முலை அசையாது
வார்குழை ஆடாது, மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒருதிறள் ஆக, ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச்சேதம்"

## 2.3. திருநாவுக்கரசர் தேவாரம்:

சமயக்குரவர்கள் நால்வர் என்று போற்றப்படும் திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் ஆகியோர் அருளிய தேவார, திருவாசகப் பாடல்களில் ஏகாம்பரநாதரின் பெருமைகள் சிறந்து விளங்குவது காணலாம்.

அந்த வகையில் திருநாவுக்கரசர் அருளிய பாடல்களில் ஏகாம்பரநாதர் கோயில் பற்றி 73 பாடல்கள் அமைந்துள்ளன.[6] அவற்றுள் ஏகாம்பரநாதரது வடிவம், ஏகாம்பரநாதருடைய வீரச்செயல், அடியவர்களின் பாவங்களைப் போக்கும் தன்மை, அருள்பாலிக்கும் தன்மை, இரக்க குணம் முதலானவை சிறந்து விளங்குகின்றன.

### 2.3.1. ஏகாம்பரநாதர் வடிவம்:

பாம்புகள் ஆடவும், சடைகள் தாழவும் தம்முடைய உள்ளங்கையில் நெருப்பை வைத்துக் கொண்டு நள்ளிரவு நேரத்தில் நடனமாடுபவர் ஏகாம்பரநாதர். இது பற்றியே 'அரவாடச்சடைதாழ அங்கையில் அனல் ஏந்தி' என்ற பாடல் உணர்த்துவது அறியற்பாலதாகும்.[7] மேலும் ஏகாம்பரநாதர் தமக்கென நிறமோ, குணமோ பெற்றிராதவர்; அடியவர்களின் விரும்பும் வடிவங்களைத் தமக்கெனக் கொள்பவர்; கண்ணின் கருவிழிப்படலம்போல நமக்கு அனைத்தையும் காட்டக் கூடியவர். இதற்குச்சேர 'வண்ணம் இல்லி, வடிவு வேறானவன்' என்ற தொடர் புலப்படுத்துகிறது.[8]

அடுத்து ஏகாம்பரநாதர் நீல நிறம் பொருந்திய கண்டத்தினையும், அழகிய மலர் போன்ற பாதங்களைக் கொண்டவர் என்பதை 'நீலமாமிடற்று அண்ணல் ஏகம்பனார்' என்ற தொடர்மூலம் அறியற்பாலதாகும்.[9]

### 2.3.2. ஏகாம்பரநாதரின் வீரச்செயல்:

'ஆனை உரித்தானை அருச்சுனர்க்குப் பாசுபதம்' என்ற பாடல் தொடர் மூலம் ஏகாம்பரநாதர் கஜமுகாசுரனின் தோலை உரித்தவர்; அருச்சுனனுக்குப் பாசுபதம் என்னும் வில்லினை அளித்தவர், மேரு மலையை வில்லாக்கி முப்புரங்களை அழித்தவர் என்பது அறியற்பாலதாகும்.[10] மேலும் ஏகாம்பரநாதர் நாளும் அன்புடன் வந்து அடியார்கள் வணங்கவும், உமாதேவியார் விருப்புடன் பணிந்து வழிபடவும், தீயவர்கள் அணுக முடியாதவராகவும் அடர்ந்த இனிய சோலைகளையும் தன்னகத்தே கொண்டவர் என்பது

'நச்சி நாளும் நயந்து அடியார் தொழ' என்ற தொடர் புலப்படுத்துகிறது.[11] அடுத்து ஏகாம்பரநாதர் தாமே நீராகவும், நெருப்பாகவும், காற்றாகவும், மின்னலாகவும், தம் திருமேனியில் வெண்மையான திருநீறு அணிந்தவராகவும் காணப்படுகிறார் என்பதை

குவலயங்காண், குவலயத்தின் நீர் ஆனான் காண்

என்ற தொடர் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[12]

### 2.3.3. அடியவர்களின் பாவங்களைப் போக்கும் தன்மை:

'வருத்தி நின்று அடிமை செய்வார்' என்ற தொடரானது ஏகாம்பரநாதர் அடியவர்கள் தம் உடலை வருத்தமுறச் செய்து, மாறாத அன்புடன், தொடர்ந்து திருத்தொண்டு செய்வார்களானால் அவர்களது கொடிய பாவங்களையும் போக்குவார் ஏகாம்பரர் என்பது அறியற்பாலதாகும்.[13] மேலும் நமது பழைய ஊழ்வினையின் துக்கங்களை அறிந்தும், உலகியல் இன்பங்களில் நாட்டம் கொண்டுள்ளோம். இந்நிலை மாற ஏகாம்பரநாதரின் தொண்டனாக மாறினால் நம்முடைய பாவங்கள் நீங்கும் என்பதை

'பண்டு செய்த பழவினையின் பயன்' என்ற பாடல் தொடர் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[14]

ஏகாம்பரநாதர் ஐம்புலன்களின் தீயசெயலால் ஏற்படும் குறைகளைப் போக்க தன்னை நினைந்து வழிபடுவர்களின் மனத்தின் அமுத ஊற்றாகத் திகழ்பவர் என்பது 'பொறிப்புலன்களைப் போக்கறுத்து உள்ளத்தை' என்ற தொடர் மூலம் வெளிப்படுகிறது.[15]

### 2.3.4. அருள்பாலிக்கும் தன்மை:

பஞ்சேந்திரியங்களின் பலவகைத் தீங்குகளிலிருந்து நம்மை விடுவித்து, அருள்புரிந்து, நம்மைக் கண்காணித்து தீவினையின் காரணத்தால் ஏற்படும் கொடிய நோய்களிலிருந்து காத்து அருள்புரிவார் ஏகாம்பரநாதர் என்பது

'மூக்கு வாய் செவி கண் உடல் ஆகி வந்து'

என்ற பாடல் மூலம் அறிதற்பாலதாகும்.[16] மேலும் ஏகாம்பரநாதர் தனது திருவடிகளைப் பணிந்து வணங்குபவர்கள் மனத்தே நினைத்த காரியங்களை நடத்தி வைத்து அருள்புரிவார்; மாறாத மனம் கொண்டவர்களுக்கு

அனைத்துச் செல்வங்களையும் அளித்து அருளுபவர் என்பதை

'தாதை காண் தாழ்ந்து அடியே வணங்குவார்க்குச்'

என்ற பாடல் தொடர் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[17]

## 2.3.5. இரக்க குணம்:

இலங்கை அரசன் இராவணன் கயிலையைப் பெயர்த்து எடுக்கச் செருக்குடன் முற்பட்டபோது அவன்மீது தம்முடைய மெல்லியகால் விரலால் ஒரு சிறிது அழுத்திய உடனே அவன் பயந்து 'கச்சியேகம்பனே என்னைக் காப்பாற்று' எனத் தஞ்சமடைந்தான். அவ்வளவில் அவனது செயலைப் பொறுத்து, அவன்மேல் இரக்கம் கொண்டு நலமாகச் செல்வதற்கு வழி வகுத்தார் என்பதை

'............. இலங்கை வேந்தன் இராவணன் சென்று'

என்ற பாடல் தொடர் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[18] இவ்வாறு திருநாவுக்கரசர் தம் பாடல்களில் ஏகாம்பரநாதரது வடிவம், பெருமைகள், அருள்குணம், இரக்கத்தன்மை ஆகியவற்றை ஒருசேர விளக்குகிறார்.

## 2.3.6. மத்தவிலாசப் பிரகசனம்:

மத்தவிலாசப் பிரகசனம் என்ற நூலானது கலைச் செல்வனான மகேந்திரவர்ம பல்லவனால் இயற்றப்பட்டது. பிரகசனம் என்பது நகைச்சுவையாகும். மத்தவிலாசப் பிரகசனம் என்றால் பைத்தியக்காரனின் நகைச்சுவை நாடகம் என்ற பொருளைத் தருகிறது.

இந்த நகைச்சுவை நாடக நூலில் காஞ்சிபுரம் அருள்மிகு ஏகாம்பரநாதரைப் பற்றியும், அக்கோயிலின் அருகில் காபாலிகம், பாசுபதம் எனும் மதங்களைப் பரப்பிய மடங்கள் இருந்துள்ளதைப் பற்றியும் அறிந்துகொள்ள முடிகிறது. நாடக உரையாடலைக் கீழ்க் காணும் வரிகளில் எடுத்து இயம்புவது அறியலாம். ''பௌத்தபிக்கு: யார் என்னை

அழைப்பது! (திரும்பிப் பார்த்து) ஓ! ஏகம்பத்தில் வசிக்கின்ற அந்த போக்கிரிக் காபாலிகனா!" இந்தக் கூற்றின் மூலம் ஏகம்பம் என்பது காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலைக் குறிப்பதையும், பழங்காலத்தில் இக்கோயிலில் காபாலிகள் இருந்தனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.[18அ]

மேலும் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலுக்குக் கிழக்கில் இருந்த சுடுகாடு பற்றி செய்தியினை மத்தவிலாசப் பிரகசனத்தில் மற்றொரு இடத்திலும் அறியலாம். பாசுபதன் குற்றமற்றவனுக்கு அச்சமில்லை என்பது சரியானது ஆகும். இந்தப் பௌத்தபிக்கு இன்று தப்பித்துக் கொண்டான். என்னுடைய நண்பரின் மகிழ்ச்சியைக் கண்டு நானும் மகிழ்ச்சியடைகிறேன். தூமவேளை ஆகிவிட்டது. கிழக்குப் பக்கமுள்ள எம்பெருமானிடம் செல்ல வேண்டும் என்பது அறியற்பாலதாகும். இப்பொழுதும் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலுக்கு எதிரில் கிழக்குப் புறமாக திருக்கச்சி மயானம் எனும் கோயிலில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.[18ஆ]

## 2.4. திருஞானசம்பந்தர் தேவாரம்:

சம்பந்தர். ஏகாம்பரநாதர் பற்றிய 4 பதிகங்களுள் 43 பாடல்களைப் பாடியுள்ளார். அவற்றுள் ஏகாம்பரநாதரது திருமேனியழகு, இயல்பு, அருளும் தன்மை, பாவங்களைப் போக்கும் குணம், செயல்கள் ஆகியன வெளிப்படுகிறது.

### 2.4.1. ஏகாம்பரநாதருடைய திருமேனியழகு:

வெந்த வெண் பொடியாகிய திருநீற்றைப் பூசிய மார்பும், ஒரு பக்கத்தில் பூணூல் பொருந்தியும், மணம் பொருந்திய கூந்தலைக் கொண்ட காமாட்சியம்மையை, இடது பக்கத்தில் கொண்டுள்ளார் என்பதை 'வெந்த வெண்பொடி பூசு மார்பின்' என்ற பாடலால் அறிந்து கொள்ள முடிகிறது.[19] மேலும் பொன் மலையான மேருவை வில்லாக்கி தம் புன்முறுவலால் மூவுலகை அழித்து, பாம்புகளையும் பூணூலையும்

ஏகாம்பரநாதர் தம் மேனியில் அணிந்துள்ளார் என்பதை 'சாகம் பொன்வரையாகத்தானவர் மும்மதில் சாயவெய்து' என்ற பாடல் தொடர் புலப்படுத்துகிறது.[20]

## 2.4.2. ஏகாம்பரநாதருடைய இயல்பு:

நான்கு வேதங்களை இயற்றியவர்; தலையில் வெண்மையான பிறைச் சந்திரனை உடையவர்; அர்த்த நாரீசுவர வடிவம் கொண்டவர்; எல்லாப் பொருளிலும் நிறைந்துள்ளவர் ஏகாம்பரநாதர் என்பதை உணர்த்தும் போக்கில் சம்பந்தர் பாடலில்

'மறையானை மாசிலாப்புண்சடை மல்குவெண்'

என்ற தொடர் உணர்த்துவது காணலாம்.[21]

அடுத்து, ஏகாம்பரநாதர் விரைந்து செல்லக்கூடிய காளையின் மீது பாகனைப்போல ஊர்ந்து செல்பவர்; ஒளியாகிய தீ வடிவம் கொண்டவர்; ஆலமரத்தின் கீழ் அமர்ந்து தட்சிணாமூர்த்தியாகத் திகழ்பவர்; மன்மதனை தம் நெற்றிக் கண்ணால் எரித்தவர் என்பதை

'பாயுமால் விடை மேலொரு பாகனே'

என்ற பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[22]

## 2.4.3. ஏகாம்பரநாதரின் அருளும் தன்மை:

ஏகாம்பரநாதர் கரிகால் சோழனுக்கு அருள் செய்ததையும்; கூற்றுவனைத் தம் காலால் உதைத்ததையும்; வேதங்களை விரித்து ஓதியதையும்; அடியவர்களைக் காக்கும் கண்களை உடையவர் என்பதையும்

'விண்ணுளார் மறைகள் வேதம் விரித்தோதுவார்'

என்ற பாடல் மூலம் அறியற்பாலதாகும்.[23]

ஏகாம்பரநாதரை வணங்கித் தொழுதால் இந்தப் பிறவியில் சிறப்புமிகுந்த புகழ்பெற்ற மறுமையில்

வானுலகத்திலுள்ள தேவர்களுடன் சென்று மகிழ்ச்சியுடன் வாழலாம் என்பதை

'ஏரினார் பொழில்சூழ்ந்த கச்சியேகம்பம்' என்ற பாடல் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[24]

### 2.4.4. ஏகாம்பரநாதரின் பாவங்களைப் போக்கும் தன்மை:

உலகம் முழுவதும் அறிந்த பெருமையைக் கொண்டவர் ஏகாம்பரநாதர் ஆவார். அவரைப் பற்றி தமிழ் ஞானசம்பந்தனின் பாடல்களைப் பாடியும், ஆடியும் துதித்து வணங்கினால் எல்லாப் பாவங்களையும் ஏகாம்பரநாதர் போக்கிவிடுவார் என்பதை 'சம்பந்தன் சொற்படி ஆடக்கெடும் பாவமே' என்ற பாடல் தொடர் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[25]

### 2.4.5. ஏகாம்பரநாதரின் வீரச்செயல்கள்:

ஏகாம்பரநாதர் சிறந்த தவம் புரிந்த விசயனுக்கு சிவப்படையைக் கொடுத்தவர்; திருப்பாற்கடலில் தோன்றிய உண்டவரைக் கொல்லக் கூடிய நஞ்சினை அருந்தியதால் கருத்த கண்டத்தை உடையவரானார் என்பதை

'வேடனாகி விசையற்கருளியே'

என்ற பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[26]

இவ்வாறு சம்பந்தர் அருளிய பாடல்கள் மூலம் ஏகாம்பரரின் அழகு, அருளும் தன்மை, பாவங்களைப் போக்கும் தன்மை, வீரச்செயல்கள் ஆகியன அறியமுடிகிறது.

### 2.5. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்:

கி.பி.6-9ஆம் நூற்றாண்டுகளில் தமிழ் இலக்கியத்தில் சிவபிரானின் பெருமைகளைப் பாடியவர்களில் சுந்தரமூர்த்தி நாயனாரும் ஒருவராவார். இவர் பாடிய தேவாரப்பாடல்களில் ஏகாம்பரநாதர் பற்றி ஒரே பதிகம் பாடியுள்ளது குறிப்பிடத் தக்கதாகும். இதனைத் திருக்கச்சியேகம்பம் என்பர்.[27] இப்பதிகம்

சுந்தரர் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சத்திய மீறலை அறிந்துகொள்ளவும், அதனால் அவரது இடக்கண் பார்வை பறிபோனதையும் அறியமுடிகிறது.

சுந்தரர் திருவேகம்பத்தைச் சென்றடைந்து, கச்சி ஏகம்பனைக் கண் பார்வை அளிக்கும்படி வேண்ட, ஏகம்பனும் இடக்கண் பார்வையைக் கொடுக்க மகிழ்ச்சியில் பாடிய இப்பதிகம் என்பது பெரியபுராணம் உணர்த்துகிறது.[28] இப்பதிகம் தமக்குக் கண் பார்வை அளித்த ஏகாம்பரநாதரது கொடைத்தன்மையை விளக்குவதோடு மட்டுமல்லாமல், மற்றவர்கள் உயிர்வாழ வேண்டும் என்பதற்காக தேவர்கள் போற்றி வணங்கும் ஒழுக்கத்தில் சிறந்து திகழ்பவனும் என்பதை 'சிந்திபபார் அவர் சிந்தை உளானை' என்ற தொடர்மூலம் அறியமுடிகிறது.[29]

மேலும், ஏகாம்பரநாதர் யாவரையும் வெல்லும் தன்மை உடைய மழுவாயுதத்தைப் பெற்றவரும், தம்மை வணங்குபவர் களுக்கு ஏற்படும் துன்பங்களை முழுவதுமாக நீக்கக்கூடியவர் என்பதையும்

'வெல்லும் வெண்மழு ஒன்றுடையானை .....
அல்லல் தீர்த்தருள் செய்யவல்லானை'

என்ற பாடல் மூலம் அறியற்பாலதாகும்.[30]

ஏகாம்பரநாதருடைய பெருமைகள் பலவற்றையும் சிந்திப்பவரின் உள்ளத்தில் மங்கலப் பொருளாக உள்ளவரும், முடிவில்லாத புகழை உடையவராகி உமாதேவியார் வழிபடப்பெற்ற நீண்ட முடியுடைய திருஏகம்பத்தில் உள்ளவரைக் காண்பதற்கு சுந்தரர் கண் பெற்றார் என்பதற்குச் சேர 'கந்தவார் சடைக்கம்பன் எம்மானைக்
காணக் கண் அடியேன் பெற்றவாறே'

என்ற தொடர் உணர்த்துவது காணலாம்.[31]

உலகத் தோற்றத்தின்போது ஏகாம்பரநாதர் உருத்திர மூர்த்தியானபோது வழிபட்ட லிங்கம் நல்ல கம்பர் என்றும்,

மகா விஷ்ணு வழிபட்ட லிங்கம் கள்ளக்கம்பர் என்றும் அறியற்பாலதாகும்.[32] இவ்வாறு சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய பதிகம் மூலம் ஏகாம்பரநாதரின் பெருமைகளையும் வீரச்செயல்களையும் அறியமுடிகிறது.[33]

### 2.6. மாணிக்கவாசகர் திருவாசகம்:

ஒன்பதாம் திருமுறையில் அடங்கப்பெற்ற திருவாசகத்தில் மாணிக்கவாசகர் ஆறு திருப்பாடல்கள் வழி ஏகாம்பரநாதரின் மேன்மையைக் குறப்பிட்டுள்ளார். அவை பெரும்பாலும் ஏகாம்பரநாதரின் திருமேனியழகு, குணநலன் களைச் சொல்வதாக அமைந்துள்ளது.

### 2.6.1. ஏகாம்பரநாதர் திருமேனியழகு:

ஏகாம்பரநாதர் தூய்மையான திருவடியைக் கொண்டவரும், சாதாரண உருவத்தோடு நறுமணம் வீசுகின்ற கூந்தலை உடைய உமாதேவியை இடப்பாகதத்தில் கொண்டு அமர்ந்துள்ளார் என்பதையும் மாணிக்கவாசகர் குறிப்பிட்டுள்ளார்.

### 2.5.2. பழவினையைப் போக்குபவர்:

ஏகாம்பரநாதர் உயிர்களது பழவினையைப் போக்கி நல்லருள் புரிபவர் என்பதையும், உலகிலுள்ள தேசங்களி லெல்லாம் புகழ்ந்து பேசக்கூடியது கச்சித்திருவேகம்பன் செமபொற்கோயில் என்பதை திருபபொற் சுண்ணத்தின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[34]

### 2.5.3. மாணிக்கவாசகரின் பக்தி:

இப்படி ஏகாம்பரரைப் போற்றிய மாணிக்கவாசகரின் பக்திப்பெருக்கை நீரால் சூழ்ந்ததும், மதில் நிறைந்ததுமான தில்லையில் நடனமாடும் காட்சியைப் புகழ்ந்து அல்லிப் பூவைப் பறிக்கும்போது ஏகாம்பரநாதரின் திருவடி அன்பு மனத்தில் நிழலாடுவதாகவும் 'படமாக என்னுள்ளே' என்ற திருப்பூவல்லிப் பாடல் மூலம் மாணிக்கவாசகர் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[35]

இவ்வாறு மாணிக்கவாசகரின் பாடல்கள் மூலம் ஏகாம்பரரின் திருமேனியழகு, பழவினையைப் போக்கும்பாங்கு, பக்தி ஆகியன பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

## 2.7. பரணதேவநாயனாரின் சிவபெருமான் திருவந்தாதி:

பரணதேவநாயனார் இயற்றிய சிவபெருமான் திருவந்தாதியில் ஏகாம்பரநாதரின் பெருமைகள் கூறப்படுகின்றன. ஏகாம்பரநாதரை தினந்தோறும் நினைக்காதவர்கள் உடம்பானது தீயில் கருகி பொசுங்கிவிடும் என்பதை 'எரியாடி ஏகம்பம் எண்ணாதார்மேனி' என்ற பாடல் உணர்த்தும்.[36] மேலும் ஏகாம்பநாதர் எருதினை வாகனமாகக் கொண்டுள்ளார் என்பதை 'ஊர்வதும் ஆனேறு' என்ற பாடல் உணர்த்தும்.[37]

## 2.8. நம்பியாண்டார் நம்பி அருளிய திருவந்தாதி:

நம்பியாண்டார் நம்பியினுடைய திருவந்தாதியில் ஏகாம்பரநாதர் தம்முடைய அடியவரான சாக்கியநாயனார் தினமும் செங்கல் எறிந்ததைப் பொருட்படுத்தாமல், அதனால் ஏற்படும் வலியைத் தாங்கிக் கொண்டு வீடுபேறு அளித்ததை 'மகடனந்தாக்கக் குழைந்தை திண்டோளர் வணகம்பர்' என்ற பாடலில் குறிப்பிட்டது காணமுடிகிறது.[38]

## 2.9. ஐயடிகள் காடவர்கோனின் சிவத்தளி வெண்பா:

பல்லவ அரசரான காடவர்கோன் 24 சிவத்தலங்களைப் பற்றி சிவத்தளி வெண்பா பாடியுள்ளார். அவற்றுள் 20ஆவது வெண்பா ஏகாம்பரநாதர் பற்றியதாகும். இது யாக்கை நிலையாமை, இளவை நிலையாமை, சொந்தபந்தங்கள் கடைசிக் காலத்தில் கைவிடுதல், முதுமைப்பருவத் துன்பம் ஆகியவற்றை அடைவதற்கு முன் இன்னின்ன தலத்தில் உள்ள இறைவனை வணங்குதல் என்பதாகும். மனம் போன போக்கில் செல்லாமல், அறிவின் வழி சென்று இறைவனின் அருளைப் பெறுதல் வேண்டும் என்ற கருத்தை உரைக்கும்

காடவர்கோன் வஞ்சித்து வாழ முற்பட்டால் கடைசிக் காலத்தில் துன்பமுறுவர் என்று பகருவதும் அறியற்பாலதாகும்.

வலிமை வாய்ந்த பெரிய தூண்களில் கட்டக்கூடிய யானையானது தோலை உரித்தவரும், வளம் பொருந்திய காஞ்சியில் வீற்றிருக்கும் எகாம்பரநாதரை வழிபடுமாறு தன் நெஞ்சுக்கு உரைப்பதை 'என் நெஞ்சே உன்னை இரந்தும் உரைக்கின்றேன்' என்ற பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[39]

## 2.10. பெரியபுராணம்:

சேக்கிழாரால் இயற்றப்பட்ட இந்நூலுள் ஏகாம்பர நாதரின் வடிவம், எல்லாவற்றுக்கும் மூலப்பொருள் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

### 2.10.1. இறைவடிவும் மூலப் பொருளும்:

ஏகாம்பரநாதரின் நிறமானது இடியோசை கொண்டு அதிர்கின்ற மேகம் போன்று கருமையாகவும், நீலமணி என்னும் மிடற்றினை உடையவராகத் திகழ்கின்றார் என்பதை

'சடைக்கம்பர் செம்பொன் கோயில் குறுகினார்'

என்ற தொடர் உணர்த்துவது அறியற்பாலதாகும்.[40]

ஏகாம்பரநாதரே உலகத்திலுள்ள அனைத்திற்கும் மூலப் பொருளாகத் திகழ்கின்றார் என்பதை

'கருஆர் கச்சி ஏகம்பர்
கனக மணி மாளிகை சூழ்ந்து' என்ற பாடல் தொடரால் அறிந்துகொள்ள முடிகிறது.[41]

### 2.10.2. அரவாடபாணர்:

வெண்மையான பற்களையுடைய பாம்பினை கழுத்திலே மாலையாகக் கொண்டவர் ஏகாம்பரநாதர் என்பதை

'அரவாரம் புனைந்தவர்தம்: திருமுன்றின் புறத்தணைந்தார்' என்ற பாடல் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[42]

## 2.11. கச்சித்திருவகவல்:

பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த பட்டினத்தடிகள் ஏகாம்பர நாதரைப் பற்றி கச்சித் திருவகவல், திருவேகம்பமாலை, திருவேகம்பமுடையார், திருவந்தாதி ஆகிய மூன்று நூல்கள் பாடியுள்ளார்.

எழுபது வரிகளைக் கொண்ட கச்சித்திருவகவல் என்ற பாமாலையில் ஏகாம்பரநாதரின் அடியார்க்கு அருளும் தன்மையையும், குணநலன்களையும் அறிந்துகொள்ள முடிகிறது. ஏழுவகைப் பிறவிகளுள் மனிதப் பிறவியே சிறந்தது என்பதும், அம்மனிதப் பிறவியில் பிறந்து பொது மகளிருடைய சிற்றின்ப நுகர்ச்சியில் விருப்பம் கொண்டு அழியக்கூடிய உடல் உறுப்புகளைப் பலவாறு புகழ்ந்து பட்டினத்தடிகள், அதனை விட்டுக் காஞ்சியில் திருக்கோயில் கொண்டுள்ள ஏகநாதனான ஏகாம்பரநாதர் பக்தர்களுக்கு எளிதில் அருள்புரிந்து சிவபதமாகிய வீட்டையருளுவார் என்று உபதேசிப்பது அறியலாகும்.

மேலும் மூவா முதல்வனாக ஏகாம்பரநாதர் திகழ்கின்றார் என்றும், வீட்டுலகிற்குத் தலைவனான முக்திநாதனுமாவார் என்றும் குறிப்பிடுவர்.[43] அடுத்து அண்டங்களுக்கெல்லாம் தலைவரான ஏகாம்பரநாதர் தேவலோகம் உள்ளிட்ட அனைத்து உலகங்களையும் படைத்த பெரியவன் ஆவான். அவனுடைய திருவடிகளை வணங்கினால் பிறவா நெறியைக் கொடுப்பார் என்பதையும் காட்டுவதன் மூலம் அடியார்க்கு அருள்புரியும் தன்மை வெளிப்படுகிறது.[44]

## 2.12. திருவேகம்பமாலை:

அருள்மிகு ஏகாம்பரநாதரைப் பற்றி மாலையாக 144 வரிகள் பாடியதால் இந்நூல் திருவேகம்பமாலை என்று

அழைக்கப்படுகிறது. இவற்றுள் மனித வாழ்க்கையில் நிகழும் பல்வேறு நிகழ்ச்சிகளை இங்கு அழகாக சித்தரித்துள்ளார். இவற்றை ஆராயும்போது அறம் இயற்றுதல், மனித உடலின் நிலையாமை, மனிதனின் உள்ளத்து குற்ற உணர்ச்சிகள் ஆகியன காணமுடிகிறது.

மேலும், நூலோர் வகுத்துக் காட்டிய இல்லற நெறிகளைக் கொண்டவர்கள் நூறாயிரம் மடங்கு பெருமையுடையவர் என்றும், அவர்களைக் காட்டிலும் உள்ளத்திலே பற்றற்றவர்கள் பல ஆயிரம் மடங்கு பெருமையுடையவர் என்பதையும் 'அறந்தானியற்று மவனிலுங்கோடிய திகமில்லக்' என்ற பாடல் மூலம் உணர்த்துவது அறியற்பாலதாகும்.[45] அதே சமயத்தில் ஏகாம்பரநாதர் இவ்வுலகிலுள்ள உயிர்களை இயக்கிவைக்கக் கூடியவர் என்பதை 'மற்றுனைப் பரிந்தாலென்னாலிங்காவ துண்டோ இறவா கச்சியேகம்பனே' என்ற பாடல் உணர்த்துகிறது.[46]

ஏகாம்பரநாதரை வழிபாடு செய்தால் மக்கள் ஐம்புலன்களை அடக்கவும் சான்றோர் வகுத்த நன்னெறியில் வாழவும், உண்மை பேசுபவர்களாக இருக்கமுடியும் என்பதையும் அறிந்துகொள்ள முடிகிறது.[47]

ஏகாம்பரநாதர் மக்களிடையே ஞானாசிரியனாக வந்து மாய நட்பு கொண்டோரையும் மாயாமலம் என்னும் மாதரையும் இறந்தொழியும்படி செய்ய வல்லவர் என்பதை

'மாய நட்போரையும் மாயாமலமெனுமாதரையும்'
என்ற பாடல் மூலம் அறியற்பாலதாகும்.[48]

அவ்வாறே ஒருவனுக்குத்தான் பிறந்த ஊர், மக்கள், நெருங்கிய சுற்றத்தார், ஊக்கத்தோடு ஈட்டிய புகழ், தன் மனைவி, மக்கள், செல்வம், தன் நாட்டின் அரசன் ஆகிய யாவையும் உற்ற துணையாகாது; மாறாக ஏகாம்பர நாதருடைய திருவடிகள மட்டுமே எப்பொழுதும் உற்ற

துணையாகும் என்பதை 'யாருஞ்சதமல்ல நின்தாள் சதங்கச்சியே கம்பனே' என்ற பாடல் மூலம் பட்டினத்தார் அறிவுறுத்துகிறார்.[49] மேலும் ஏகாம்பரநாதர் தேவர்களுககாக அசுராகளின் மூன்று மதில்களை எரித்ததையும், மாாக்கண்டேயனுக்காக காலனை காலால் உதைத்ததையும், மேரு மலையைத் தம்முடைய கையில் வில்லாக ஏந்தியதையும் ஒருசேர 'ஏற்றுக்கொடியுடையாயிறைவா' என்ற பாடல்மூலம் உணாத்துவது காணலாம்.[50]

## 2.13. திருஏகம்பமுடையார் திருவந்தாதி:

அருள்மிகு ஏகாம்பரநாதரைப்பற்றி பட்டினத்துப் பிள்ளையார் அந்தாதித் தொடைபொருந்த நூறு பாடல்கள் பாடியதால் இந்நூல் திருஏகம்பமுடையார் திருவந்தாதி என்று அழைக்கப்படுகிறது. இவற்றுள் ஏகாம்பரநாதர் அடியார்களுக்கு அருள்பாலிக்கும் தன்மை, கொடைத்தன்மை, மேனியழகு, வாகனம், ஏகாம்பரநாதரது திருக்கரத்தின் பெருமை, அவரது கையில் உள்ள ஆயுதங்கள், திருநீற்றின் பெருமை, குணநலன்கள், ஏகாம்பரநாதர் கோயில் கொண்டிருக்கும் மலைகள், பிட்சாடனர்கோலம், கச்சியில் திருமால் திருப்பதிகள் அமைந்துள்ள பாங்கு விளக்கப்படுகின்றது.

### 2.13.1. அடியார்க்கு அருள்பாலிக்கும் தன்மை:

ஏகாம்பரநாதர் அவரை வணங்கும் அடியார்கள் உய்யும் ஞானநெறியைக் காட்டியருளுபவர் என்பதற்கேற்ப 'மெய்த்தொண்டர் செல்லும் நெறியறி' என்ற பாடல் உணர்த்துவது காணலாம்.[51] தம்மை வணங்கக்கூடிய அடியார்கள் செய்யும் குற்றங்களைப் பெரிதாகக் கருதாமல் அவற்றை உயர்வாகவே கருதி அருள்புரிவார் ஏகாம்பரநாதர் என்பதற்குச் சேர 'அன்பு செய்வோர் நெஞ்சரத் தாழ்வுகத்தோர் கச்சி' என்று உணர்த்துவர்.[52]

ஏகாம்பரநாதர் உலகத்தில் வாழும் உயிர்களுக்குத் தாயாயவும், தந்தையாயவும் திழகழ்ந்துக் காக்கின்றார்

என்பதை 'தாய் தந்தையாயுயிர் காப்போன்' என்ற பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[53]

மக்களைப் பிறவியாகிய கடலிலிருந்து கரையேற்றி, பிறவா நிலைக்குக் கொண்டு செல்பவர் மூன்று கண்களைக் கொண்டுள்ள ஏகாம்பரநாதர் என்பதை 'தம்மைப் பிறவிக்கடல் கடப்பிப்பவர் தாம் வணங்கும்' என்ற பாடல் மூலம் பட்டினத்தார் குறிப்பிடுகின்றார்.[54] இவ்வாறு அடியார்க்கு அருள்பாலிக்கும் தன்மை சிறந்து விளங்குகிறது.

'நிலத்திமை யோரில் தலையாய்' என்ற பாடல் மூலம் அந்தணர்கள் வேதங்களை முறையாகக் கற்றுணர்ந்து வேள்விகள் செய்தாலும், பிறப்பினால் உயர்ந்தவர்களாகக் கருதப்பட்டாலும் அவர்கள் ஏகாம்பரநாதரை வணங்க வில்லையெனில் வேடுவர்களாகவே கருதப்படுவார்கள் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.[68]

### 2.13.2. கொடைத்தன்மை:

மக்கள் இனிதே வாழ அவர்களுக்கு நுகரும் பொருள்கள் தேவைப்படுகிறன்றது. அதேபோல் வானுலகில் வாழும் தேவர்கள் மீது ஏகாம்பரநாதர் கருணை கொண்டு அவர்களுக்குத் தேவையான நுகர்பொருளை அளிக்கக் கூடியவர் என்பதை 'இமையோர்க்கிரங்கி போகம் பண்ணாளும் கொடுக்கின்ற' என்ற பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.[55]

### 2.13.3. திருமேனியழகு:

'அந்திச் செக்கர் ஒளிதருமேனிஎம் ஏகம்பனே'

என்ற தொடர் மூலம் மாலை வேளையில் மேற்கே காட்சியளிக்கும் செவ்வானம் போன்ற ஒளியினைத் தருகின்ற மேனியைக் கொண்டவர் ஏகாம்பரநாதர் என்பது அறிய வருகிறது.[56]

ஏகாம்பரநாதரது நீண்ட சடை முடியானது மின்னல்கள் போன்று காட்சியளிக்கின்றது; கண்டமானது கொண்டல்கள் போல் தோற்றமளிக்கிறது; அவருடைய மேனியானது பொன்னிற வண்ணத்தைக் கொண்டதாக உள்ளது என்பதை விளக்கும் வகையில் 'மின்கள் என்றார் சடைகொண்டல்' என்ற தொடர் அமைவது காணலாம்.[57] ஏகாம்பரநாதர் பெரிய யானையின் தோலைப் போர்த்தியுள்ளார் என்பதை 'உந்துங்க யானை உரியார்' என்ற பாடலும், அழகிலும், அறிவிலும் மேம்பட்டவர் என்பதை 'அழகறிவிற்பெரிதாகிய' என்ற பாடலும் உணர்த்துசிறது.[58]

அடுத்து, உமாதேவிக்கு இடப்பாகத்தை அளித்த ஏகாம்பரநாதரது அர்த்தநாரீச வடிவம் அதாவது அவரது வலப்பக்கத்தோள் பவளக்குன்று போல் உயர்ந்தும், இடப் பக்கத்தில் தாது அலைக்கும் கூந்தலைச் சேர்ந்த தோளும், நறும் சாந்தணிந்த முலை மார்பிடம் கொண்டது என்பதை 'காதலைக்கும் வலத்தோள்' என்ற பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.[59]

### 2.13.4. வாகனம்:

ஏகாம்பரநாதர் விரைவில் மழையைப் பெய்விக்கக் கூடிய கருமேகமானது மிகப்பெரிய இடியோசை கொண்டு திகழும், அத்தகைய இடியைப் போல் ஒலிக்கும் குரலையுடைய இடபத்தை வாகனமாகக் கொண்டவரும், படமெடுத்தாடும் பாம்பினை கச்சையாகக் கொண்டுள்ளவர் என்பதை 'இடிநின்ற சூழ்குரல் ஏறுடை' என்ற பாடலும், 'படநாகக்கச்சின்' என்ற பாடல் அடியும் உணர்த்துகிறது.[60]

### 2.13.5. திருக்கரத்தின் பெருமை:

திரிபுராதிகளின் கோட்டையை அழித்த, நெற்கள் எனும் பருக்கவற்றாம் ஏகாம்பரநாதர் தன்னுடைய பாம்புகளின் திருக்கரற்றால் அருள்பாலிக்கும் கடகத்திருக் கரத்தைக் கொண்டவர் என்பதற்குச் சேர அருளும் 'கடகத்திருக்கரமே' என்ற பாடல் அடி மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[61]

மேலும் ஏகாம்பரநாதர் கையில் மழுப்படையைக் கொண்டுள்ளார் என்பதை 'கார்முகம் ஆரவன் கைக்கொண்ட' என்ற பாடல் மூலமும் அறியமுடிகிறது.[62] அடுத்து ஏகாம்பரநாதர் ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், மண், சூரியன், சந்திரன், ஆன்மா என்று சொல்லும் அட்ட மூர்த்தியாய் உள்ளார் என்பதை 'அம்பரம் காலனல் நீர், நிலம்' என்ற பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[63]

### 2.13.6. திருநீற்றின் பெருமை:

உலகின்கண் தேர், குதிரை, யானை, காலாள் எனும் நால்வகைப் படைகளுடன் ஆட்சிபுரியும் பெரிய மன்னர்களது நெற்றியில் ஏகாம்பரநாதரது திருநீறு பூசவில்லையெனில் அவர்கள் பகைவர்களால் வருந்துவார்கள் என்பதை 'அன்றும் பகையடர்க்கும் பரி' என்ற பாடல் உணர்த்துகிறது.[64]

### 2.13.7. குணநலன்கள்:

'இனியவர் இன்னர் அவரை யொப்பார்' என்ற பாடல் மூலம் ஏகாம்பரநாதர் மக்களை நமக்கு இன்னார் வேண்டியவர், இன்னார் வேண்டாதவர் எனக்கொள்ளாத விருப்பு, வெறுப்பற்றவர் அனைவரையும் சமமாகப் பாவிக்கும் குணநலன் கொண்டவர், காமம், வெகுளி போன்ற மயக்கங்களைத் துறந்தவர்; திருநெறி ஒழுக்கத்தில் சிறந்து விளங்குபவர்; மூன்று கண்களைப் பெற்றுள்ளவர்; சண்டேசுவரரின் அன்புக்குப் பாத்திரமானவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[65]

### 2.13.8. ஏகாம்பரநாதர் கோயில் கொண்டிருக்கும் மலைகள்:

இமவான் மகளாகிய பார்வதியோடு கருங்குன்றம், வெண்குன்றம், செங்குன்றம், மன்னற்குன்றம், நெடுங்குன்றம், நீள் திருக்கழுக்குன்றம், எட்டு வகையான தீவினைகளைக் குறைக்கும் முதுகுன்றம் ஆகிய மலைகளில் ஏகாம்பரநாதர் கோயில் கொண்டிருக்கிறார் என்பது

'குறைத்தார் முதுகுன்றம் ஏகம்பர்
குன்றென்று கூறுமினே'

என்ற பாடல்மூலம் அறியற்பாலதாகும்.[66]

### 2.13.9. திருமால் திருப்பதிகள் அமைந்துள்ள பாங்கு:

ஏகாம்பரநாதர்பற்றிய சிறப்போடு அன்றி இவ்வாசிரியர் இந்நூலில் திருமால் கச்சியில் குடிகொண்ட இடங்களையும் குறிப்பிடும் வகையில் காஞ்சி உயர்ந்த உலகளந்த பெருமாள் கோயிலையும், பாண்டவப் பெருமாள் கோயில் அமைந்துள்ளதையும், தேவர்கள் தங்குவதற்கு உகந்த இடமாகத்திகழ்ந்ததையும் 'ஓங்கின ஊரகம் உள்ளகம்' என்ற பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[67]

### 2.14. கந்தபுராணம்:

கச்சியப்ப சிவாச்சாரியாரால் இயற்றப்பட்ட கந்தபுராணம் என்னும் நூலில் ஏகாம்பரநாதர் கோயிலில் உள்ள விகடச் சக்கரவிநாயகர், மாவடிக்கந்தர் மற்றும் ஏகாம்பரநாதர் தோற்றப் பொலிவு பற்றி விளம்பப்பட்டுள்ளன.

ஏகாம்பரநாதர் கோயிலில் அமைந்துள்ள விகடச்சக்கர விநாயகரின் பெருமைகள் கூறப்படுகின்றன. இதற்குச்சேர

'திகடச்சக்கர செம்முக மைந்துளான்..............
.......... விகடச்சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாய்'

என்ற பாடல் அமைந்தது காணலாம்.[69]

மேலும், ஏகாம்பரநாதர் கோயிலில் அமைந்துள்ள மாவடிக் கந்தர் சன்னதி பற்றி அறிய

'மாவடிகளாமாவின் காஞ்சி மாவடி கீழ்
மாவடிகளாரு மனமன்று'

என்ற பாடல் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[70]

### 2.14.1. ஏகாம்பரநாதரின் தோற்றப் பொலிவு:

காஞ்சியில் அன்னை காமாட்சி விரும்புமாறும் திருமால் முதலான தேவர்கள் தத்தம் துணைவியாரோடு வந்து மலர்தூவி வழிபடுவதை அறிந்துகொள்ள முடிகிறது.[71]

### 2.15. வில்லிபாரதம்:

வில்லிபுத்தூரார் பாரதம் அர்ச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்தில் அர்ச்சுனன் தலயாத்திரை செல்லும் போது காஞ்சிபுரம் வந்து ஏகாம்பரநாதரையும், காமாட்சி யம்மையையும் வணங்கியதை அறிந்துகொள்ள முடிகிறது. அதாவது தம் விருப்பத்தின்படியே முப்பத்திரண்டு அறங்களைச் செய்துவரும் காமாட்சியம்மையை இடப்பாகத்தே கொண்டவரான ஏகாம்பரநாதரை தரிசனம் செய்ததை

......... மாநீழலின் வைகெண்
`புயனாருறை மெய்க்கோல் முழுள்ளவன்பொடு போற்றிப்'
என்ற பாடலால் அறிந்துகொள்ள முடிகிறது.[72]

### 2.16. திருப்புகழ்:

அருணகிரிநாதரால் இயற்றப்பட்ட திருப்புகழில் ஏகாம்பரநாதர், உலகத்து உயிர்கள் வாழ்வதற்கு முப்பத்திரண்டு அறங்களைச் செய்யும் காமாட்சி அம்மையோடு காஞ்சியில் தங்கியுள்ளார் என்பதை

`அமகர ஆகாம்பர அதுகர ஏகாம்பர .......................
....................உமையாள் சேர்ந்தருள
அறமுறு சீகாஞ்சியில் உறைவோன்'

என்ற பாடல் தொடரால் அறிந்து கொள்ள முடிகிறது.[73]

### 2.17. சங்கரவிலாசம் காஞ்சிபுரமான்மியம்:

சிதம்பரநாதன் என்பவரால் இயற்றப்பட்டது, சங்கர விலாசம் எனும் நூலாகும். இது சிவபெருமானின் பெருமை களைக்கூறும் நூலாகும். இவற்றில் காஞ்சிபுரமான்மியம்

என்னும் பகுதி ஏகாம்பரநாதரின் வழிபாட்டுப் பெருமைகளை விளக்குகிறது. வெண்மையான எருதினை வாகனமாக உடைய ஏகாம்பரநாதர் கொடிய விடத்தை உட்கொண்டதை 'விரித்திரை முகட்டெழும் வடத்தை வெள்விடை' என்ற பாடல் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[74] அடுத்து உமா தேவியார் பூசைசெய்ததை எட்டுத்திசையில் உள்ளவர்களும் புகழும் பெயர் கொண்டது ஏகாம்பர லிங்கம் என்பதை

'விண்டிவை பகர்தலும் ......................

...........................................................

யெண்டிசை புகழுமேகாம்பரப பெயர்

கொண்டதொரி லிங்கத்திற்குலவி நாடொறும்'

என்ற பாடல் தொடரால் அறிந்துகொள்ள முடிகிறது.[75]

## 2.18. ஏகாம்பரநாதர் உலா:

இளஞ்சூரியர், முதுசூரியர் ஆகிய இரட்டைப் புலவர்களால் பாடப்பட்ட நூல் ஏகாம்பரநாதருலாவாகும். இந்நூல் 556 கண்ணிகளைக் கொண்டதாகும். இந்நூலை தெய்வீக உலா என்றும் அழைப்பர். இந்நூலுள் முதலில் ஏகாம்பரநாதரின் பெருமைகள் குறிப்பாக எம்பெருமானது கண்களின் பெருமை, அருளும் தன்மை, ஏகாம்பர நாதருக்குத் தேர் செய்து தந்தருளிய ஏகாம்பர சம்புவராயனைப் பற்றியும், தோழனாகவும், உலாப்போந்த நிகழ்ச்சியினையையும் அறிந்துகொள்ள முடிகிறது.

### 2.18.1. ஏகாம்பரநாதர் கண்களின் பெருமை:

உமாதேவியார் ஏகாம்பரநாதரின் கண்களை விளையாட்டாக மூடியபொழுது சூரியன், சந்திரன், அக்கினி ஆகியவர்கள் தத்தம் தொழில்களைச் செய்யாததால் உலகம் இருளில் மூழ்கின. உலகமே இயங்காமல் நின்று விட்டது. இதிலிருந்து ஏகாம்பரநாதர் சூரியன், சந்திரன், அக்னி ஆகியவர்களை தம்முடைய மூன்று கண்களாய் பெற்றுள்ளார்

என்பதை 'படியும் விசும்பும் பரிதிமதி காணாது' என்ற கண்ணி மூலமாக அறியற்பாலதாகும்.[76]

### 2.18.2. அருளும் தன்மை:

ஏகாம்பரநாதர் தனக்கு துன்பம் நிகழும் என்பதைப் பொருட்படுத்தாமல் வானுலகில் வாழும் தேவர்களுக்காக கொடிய நஞ்சினை உட்கொண்டார் என்பதை 'வானோரை நஞ்சுண்டு காத்த பெருமான்' என்ற கண்ணியால் அறிதற் பாலதாகும்.[77] ஏகாம்பரநாதர் அடியவர்களுக்கு திருக்குறிப்பு தொண்டருக்குக் கல்லிலும் தோன்றி அருள்புரியும் ஈகைக் குணம் கொண்டவர் என்பதை 'தொல்லைத் திருக்குறிப்புத் தொண்டன் தலை மோதக்' என்ற கண்ணி உணர்த்துகின்றது.[78]

### 2.18.3. தயாபரகுணம் நிறைந்தவர்:

மகாபாரத்தில் வரும் பார்த்தன் ஏகாம்பரநாதரிடம் பாசுபதம் எனும் வில்லைப் பெறுவதற்குத் தவம் செய்யும் பொழுது இடையூறு செய்யவந்த 'மூகன்' என்னும் பன்றியை அழிக்கவேடுவ உருவங் கொண்டு பார்த்தனோடு போர்புரிந்து தாமே வில்லடிப்பட்டு அருள் செய்தார். இதனால் ஏகாம்பரநாதர் அடியார்களுக்காகத் தாமே துன்பத்தை ஏற்றுக் கொண்டு தயாபர குணம் கொண்டவர் என்பதை

'விசையின் முடிமேன் மதியாமல் மோத' என்ற கண்ணி உணர்த்துவது அறியற்பாலதாகும்.[79]

### 2.1.7.4. மணிமகுடம் அணிந்தவன்:

ஏகாம்பரநாதருக்குத் தலையில் சூடும் மணிமகுடத்தை ஏகாம்பர சம்புவராயன் என்ற அரசன் செய்தளித்து, பல திருப்பணிகளைச் செய்ததை 'சம்பு குலத்தொருவன்.... செம்பொன் மணிமகுடம் சேர்வது' என்ற கண்ணி மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[80]

### 2.18.5. ஆலகாலத்தை உண்டவன்:

ஏகாம்பரநாதர் தேவர்களைக்காக்க ஆலகாலத்தை உண்டதனால் கழுத்து கருமைநிறமாக மாறியது என்பதை அமரர் 'சாதல் ஒழிந்ததற்குச் சான்றிருக்கும் அவ்வியத்தே' என்ற கண்ணி உணர்த்துகிறது.[81]

### 2.18.6. தமிழ் இன்பம் உடையவர்:

ஏகாம்பரநாதர் தமிழில் பாடப்பட்ட தேவார, திருவாசகங் களையும் வடமொழியாலான வேதங்களையும் சரிசமமாகக் கேட்கக் கூடியவர் என்பதை 'மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்' என்ற கண்ணி உணர்த்துகிறது.[82]

### 2.18.7. தூது மனப்பான்மை:

சுந்தரமூர்த்தி நாயனார் ஏகாம்பரநாதரைத் தோழனாகப் பாவித்து அன்பு செலுத்தியவர் ஆவார். ஆகவே, அவருக்காக நாயனாரது இரு மனைவிகளிடத்தும் தூதுவராகச் செய்திப் பரிமாற்றம் செய்துள்ளார். இந்த வகையில் ஏகாம்பரநாதர் அடியவர்களுக்காக வேலையாளாகவும் பணி செய்வார் என்பதை 'குழுமிருள் பாதி இரவிற் பரவைக்கும், சங்கிலிக்கும் தூது நடப்பித்த தோழன்' என்ற கண்ணி மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.[83]

### 2.18.8. அரசனுக்கு உதவுதல்:

மல்லிநாதன் என்னும் அரசன் அளித்த தேரில் ஏகாம்பரநாதர் ஏறிவந்தார் என்ற செய்தியை 'வடித்த சுடர்வேற்சம்பன் வாழ்மல்லிநாதன்' என்ற கண்ணி உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[84] ஏகாம்பரநாதர் உலகில் சிறந்தவராகக் கருதப்படுகின்றார் எவ்வாறென்றால் மற்ற தெய்வங்களைப் போல் பிறப்பு, இறப்பு இல்லாத பெருந்தகையாளர் ஆவார் என்பதை 'உலகில் சிறந்த பிரானல்லாத தேவர்களைப்போல' என்ற கண்ணியால் அறிந்துகொள்ள முடிகிறது.[85]

### 2.18.9. திரிபுரம் எரித்தவர்:

மேரு மலையினை வில்லாக வளைத்து, மூன்று உலகங்களையும் எரித்தவர் ஏகாம்பரநாதர் என்பதனை 'நாகம் சிலையாக நண்ணார்புரமெறித்த' என்ற கண்ணியால் அறிந்துகொள்ள முடிகிறது.[86]

ஏகாம்பரநாதர் தன்னை மதியாமல் தக்கன் செய்த வேள்வியை அழித்தது, எமனை காலால் எட்டி உதைத்தது, சிலந்திக்கு மன்னனாகப் பிறப்பளித்தது, இராவணன் கயிலை மலையைப் பெயர்த்து எடுக்க முற்பட்டபோது தம்முடைய காலால் அவனை நெரித்தது; உமாதேவியார் கைத்தாளம் போட நடனம் செய்தது முதலானவற்றை 'கைத்தாளம் கொட்ட நடம் காண்பவராவர் மத்தமுறும்' என்ற கண்ணியால் வெளிப்படுவது அறிந்துகொள்ள முடிகிறது.[87] ஏகாம்பரநாதர் ஒருவரே பிறப்பு, இறப்பு, அந்தம், ஆதி முதலியவை அற்ற பேரின்பப் பரம்பொருளாவார் என்பதை 'பிறவாமல் எண்ணிந்த பேரண்டம்மாய்ந்தும்' என்ற கண்ணி மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[88]

## 2.19. தொண்டை மண்டலச் சதகம்:

படிக்காசுப் புலவரால் இயற்றப்பட்ட 101 பாடல்களைக் கொண்டது தொண்டை மண்டல சதகமாகும். இந்நூலுள் தொண்டை நாட்டின் பல்வேறு சிறப்புகள் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் ஏகாம்பரநாதர் கோயில்பற்றி மூன்று பாடல்கள் இடம் பெற்றுள்ளன. விகடச்சக்கர விநாயகர், மாவடிக்கந்தர், ஏகாம்பரநாதரின் தோற்றம், காமாட்சியம்மை தவம் செய்த பாங்கு போன்றவை பற்றிய சிறப்புக்கள் இடம் பெற்றுள்ளன. ஏகாம்பரநாதரின் புத்திரரும், மும்மதங்களைக் கொண்ட (கன்னமதம், கபாலமதம், பீஜமதம்) யானையின் துதிக்கையோடு ஐந்து கரங்களைக்கொண்ட விகடச்சக்கரப் பிள்ளையார் என்று பெயர் பெற்றதனால் தொண்டை மண்டலமே புகழ் படைத்தது என்ற பெருமையை

'சீர் கொண்ட கச்சித்திருவேகம்பத்தான்' என்ற படல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[89]

ஏகாம்பரநாதர் கோயிலில் இடம்பெற்றதும், கந்தபுராணம் முதலில் அரங்கேற்றம் செய்யப்பட்டதுமான மாவடிககந்தா் மாவலி சக்கரவர்த்தி முன்பு மூன்றுஅடி நிலம் வேண்டும் என்று உலகையே தன் காலால் அளந்த திருமால் மருமகன் மாவடிக்கந்தர் வாழும் தொண்டை மண்டலமாகும் என்பதை,

'சேவடி செய்வதறியாத மாவலி முன்பு சென்று' என்ற பாடல் மூலம் அறியற்பாலதாகும்.[90]

ஏகாம்பரநாதர் வெண்மையான பிறைச்சந்திரனைத் தம் தலையில் சூடியவர் என்றும், அவருடைய நல்லருளால் உயிர்களுக்கு அருள்பாலிக்கிறார் என்பதையும், காமாட்சி யம்மை மணலால் லிங்கம் அமைத்து பூசை செய்யும்போது வெள்ளம் வருவது கண்டு தம் கைகளால் அதனைத் தழுவ அவர் முலைத்தழும்பும், வளைத்தழும்பும் பெற்றார். அத்தகைய சிறப்பு வாய்ந்த தன்மையைக் கொண்டது தொண்டை மண்டலமாகும் என்பதற்கு
'இளைத்தெழு வெண் பிறையார் கச்சியேகம்பன்' என்ற பாடல் உணர்த்துகிறது.

## 2.20. ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது:

காஞ்சியில் உள்ள பல சிவன் கோயில்களுள் ஒன்றாகக் கருதும் ஆனந்த ருத்திரேசம் எனும் கோயிலிருள்ள 118 உருத்திரருள் ஒருவரான ஆனந்த ருத்திரேசர் மீது மையலுற்ற பெண் ஒருத்தி வண்டினைத் தூதுவிடுவதாகப் பாடப்பட்ட இந்நூலை கச்சியப்ப முனிவர் இயற்றியுள்ளார். இவர் ஏகாம்பரநாதர் கோயில் பற்றி நான்கு இடங்களில் தன்னை குறிப்பிட்டுள்ளார்.[91]

ஏகாம்பரநாதர் கோயிலில் வேதங்கள் நான்கும் வந்து மாமரமாய் நின்றது. இதுவே காஞ்சித் தலத்துக்குரிய மரமாகும். மேலும், வானில் வரும் சூரியன், சந்திரன் ஆகிய இரண்டு சுடரும் வழிவிலகுமாறு, உயர்ந்த ஒளிவிடும் கோயிலில் உள்ள உமாபத்தரை, கீர்த்திமதி ஆகிய இரண்டு தீர்க்கங்களையுமே (இவையிரண்டும் ஏகாம்பரநாதர் கோயிலின் தென்புறத்திலும், வடபுறத்திலும் அமைத்து உள்ளன) காமாட்சி அம்மையார் அமைத்தது என்பதை 'ஒற்றை மறை மாவு மிரு சுடரும் வான்விலங்கு மொண்கோட்டத் நேவாயமை' என்ற கண்ணி மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[92]

பூவுலகத்தில் சிறந்த நகராகிய காஞ்சியில் ஏகாம்பரநாதர் எந்தக் காலத்திலும் இனிமையாக வீற்றிருந்து பலவகைப்பட்ட உயிர்களுக்கு மயக்கத்தைத் தோற்றுவிக்கும் ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களை போக்குவதற்கு அன்பு கொண்டு திருவுள்ளத்தில் இடையீடு இல்லாமல் கருணை புரியும்படி உள்ளார் என்பதை 'ஏகாம்பரநாதரா யென்றுயினி திருந்தும்' என்ற பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[93]

ஏகாம்பரநாதர் கோயிலில் உருத்திரர், திருமால், பிரம்மன் ஆகிய மூவராலும் வழிபாடு செய்யப்பட்ட நல்ல கம்பம், கள்ளக்கம்பம், வெள்ளக்கம்பம் மற்றும் குரங்கின அரசரான வாலி வணங்கிய தலமான வாலீசம், மத்தள மாதவேசுவரர் ஆகிய லிங்கங்கள் அமைந்துள்ளதை 'மற்றுமொரு மூன்று கம்பம் வாலீச நந்தீசம்' என்ற பாடல் மூலம் அறியற்பாலதாகும்.[94]

மாமரத்தின் அடியில் உள்ள தலம் திருவேகம்பமாகும். ஒளி பொருந்திய அத்தலத்திலுள்ள ஏகாம்பரநாதர் வடிவம் சிறப்புடையதாகும் என்பதை 'தூங்குசினை மாவடியுஞ் சோதிலிங்கமுஞ் சிறந்த' என்ற பாடல் மூலம் அறியற்பாலதாகும்.[95]

## 2.21. தண்டியலங்காரம்:

காஞ்சியில் வாழ்ந்த தண்டி என்ற புலவரால் எழுதப்பட்டது தண்டியலங்காரம் எனும் நூலாகும். இந்நூலில் ஏகாம்பரநாதரின் பெருமைகள் இரு இடங்களில் கூறப்பட்டுள்ளது.

உலகத்து வாழும் உயிர்கள் அனைத்தும் நிலைத்து வாழ்வதற்கு இரண்டு நாழிகை நெல் பெற்று அதன் மூலம் முப்பத்திரண்டு தருமங்கள் செய்வதும் காமாட்சி அம்மை ஏகாம்பரநாதரைப் பூசை செய்ததை வேண்டும். 'தொல்லை மறைதேர் துணைவன்பால் ஆண்டு வரை' என்ற பாடல் உணர்த்துவது காணலாம்.[96]

## 2.22. கச்சியேகம்பன் கைச்சிலம்புப் பாட்டு:

கோட்டையப்ப நாயக்கர் இயற்றிய கிராமியக் கைச்சிலம்புப் பாடல் மூலம் ஏகாம்பரநாதரைப் பற்றித் தெரிந்துகொள்ள முடிகிறது. அம்பிகை கயிலையிலிருந்து காஞ்சி வந்து கம்பை நதிக்கரையில் மாமரத்தின் கீழ் பூசை செய்ததை மலர்களில் சிறந்த மலரான மரிக்கொழுந்து என்ற மலரை கையிலெடுத்து ஆற்று மணலால் லிங்கம் செய்து ஏகம்பனைப் பூசை செய்தார் என்பதை 'கொன்றை நல்ல மரிக் கொழுந்தாம்' என்ற பாடல் மூலம் அறியற்பாலதாகும்.[97]

## 2.23. காஞ்சிப் புராணம்:

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவஞானமுனிவர் காஞ்சிப்புராண முதல் பாகத்தையும், கச்சாலையார் என்பவர் இரண்டாம் பாகத்தையும் இயற்றியுள்ளார். இவற்றுள் ஏகாம்பர நாதரின் பெருமை, பெயர்ச்சிறப்பு, கோயில் சிறப்பு போன்றவை குறிப்பிடத்தக்கதாகும்.

### 2.23.1. ஏகாம்பரநாதரின் பெருமை:

கல், மண், செம்பு முதலிய உலோகப் பொருள்கள் கலை நயத்தோடு சிறந்து விளங்கினாலும் சிறப்புறாது.

அதுவே, தெய்வ உருவமாக அமைத்தால் போற்றி வணங்கப்படும் திருவருள் வடிவம் அடைகிறது. அதுபோல காஞ்சிப்புராணத்தில் வரும் உரை பிதற்றுரை என்பதையும் அதனுள் ஏகாம்பரநாதரது புகழ் சேரும்போது அது சிறப்புடைத்தாகிறது என்பதை

'மாயை காரிய உருக்களும்

எம் பிரான் வடிவம்' என்ற பாடல் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[98]

## 2.23.2. ஏகாம்பரநாதர் பெயர்ச் சிறப்பு:

இறைவனுக்கு பவன், சருவன், ஈசானன், பசுபதி, உருத்திரன், உக்கிரன், பீமன், மகாதேவன் எனும் எட்டுப் பெயர்கள் உகந்தவையாகக் கருதப்படுகிறது. அவை எல்லாவற்றையும்விட ஏகாம்பரநாதன் என்னும் பெயர் கடவுளுக்கு மிகவும் இனிமையானதாகும் என்பதை,

அகில நாமமும் எமக்குரிப்பெயராம் அவற்றினுள்

..................................................................

புகழ்பயைந்தர ஏகாம்பரநாதன் எனப்புகல்

பெயரெமக்கு மிக்கினிதாம்?

என்ற பாடல் உணர்த்துவது அறியற்பாலதாகும்.[99]

## 2.23.3. ஏகாம்பரநாதர் கோயிலின் சிறப்பு:

காஞ்சியிலுள்ள பிற கோயில்களுக்கு உயிராய் ஏகாம்பநாதர் கோயில் சிறந்து விளங்குவதை 'மல்லல் தலங்கட்கா சாமனித் தெய்வக்கோயில்' என்ற பாடல் தொடர் மூலம் அறிந்துகொள்ளமுடிகிறது.[100]

## 2.24. கச்சிக்கலம்பகம்:

பூண்டி அரங்கநாதரால் இயற்றப்பட்ட கச்சிக் கலம்பகம் என்னும் நூல் ஏகாம்பரநாதர் மீது பாடப்பட்டதாகும். இந்நூலுள் ஏகாம்பரநாதரது அருள்புரியும் தன்மை, தோற்றப் பொலிவு, வள்ளல் தன்மை, வீரச்செயல், இரக்க குணம், அடியவர் மனதில் குடிகொள்ளும் தன்மை, கிளிதூது

ஆகியவற்றின் மூலம் ஏகாம்பரநாதர் பெருமைகள் விளம்புவது அறிந்துகொள்ள முடிகிறது.

### 2.24.1. தோற்றப் பொலிவு:

ஏகாம்பரநாதர் மானைக் கையிலே தாங்கிக் கொண்டு இடபவாகனத்தின் மேலேறி அதைத் தன் வாகனமாகச் செலுத்துகின்றார் என்பதை 'அம்மானைக் கையமைத்தான் அக்காளை ஓடவைத்தான்' என்ற பாடல் உணர்த்துகிறது.[101] இதனால் இவரது தோற்றத்தின் பொலிவு சிறந்து விளங்குவது அறியலாம்.

### 2.24.2. அருள்புரியும் தன்மை:

வேத மந்திர முழக்கங்கள் நிறைந்த பல தலங்கள் தம்முடைய அடியார்களுக்குச் செய்யும் பலன்களைவிட அதிக அளவில் பலனை மாமரத்தின் கீழ் அமர்ந்திருக்கும் ஏகாம்பரநாதர் அருள்புரிகின்றார் இதற்குச் சேர

'பழமறை ஒலிகெழு பலதலம் அருள் பயன்'

என்று அரங்கநாதர் குறிப்பிடுவது அறியற்பாலதாகும்.[102] ஏகாம்பரநாதருடைய புகழைக் கூறும் நான்கு வேதங்களும் அவரால் பாடப்பட்டது. அதேபோல இவ்வாசிரியர் ஏகாம்பரநாதரது புகழைக்கூற தன் நாவில் அவன் வந்து நின்று அருள்புரிய வேண்டும் என்று வேண்டுவதற்கு ஏற்ப, 'மாவடிக்கீழ் மலரடிக்கே மங்கலச் சொற்பரமேட்டி' என்ற தொடர் விளக்குவது காணலாம்.[103]

### 2.24.3. வள்ளல் தன்மை:

மற்றவர்களுக்கு இல்லை என்று சொல்லாத தன்மையையும், குறையாத சத்தியத்தையும், சிறந்த பொறுமைக் குணத்தையும் ஏகாம்பரநாதர் பெற்றுள்ளார். ஆகவே, நாமும் அத்தகைய வள்ளல் தன்மையைப் பெறவேண்டும் என்றால் சிவந்த தாமரை போன்ற திருவடியை வணங்கவேண்டும் என்பதை

'ஐயம் உறு மனமே! அன்னறிருக்கச்சியரன்'

என்ற பாடல் மூலம் உணர்த்துவது அறியற்பாலதாகும்.[104]

### 2.24.4. வீரச்செயல்:

ஏகாம்பரநாதர் பகைவர்களது முப்புரத்தை அழித்தவர் என்பதனை

'வற்றா வளக்காஞ்சி வாழ்ந்தருளே காம்பரனார்
செற்றாற் புரமெறித்த தீயர்காண் அம்மானை
..........................
கழறல் அறுதொழில் சேர் காரணத்தால் அம்மானை

என்ற பாடல் உணர்த்துகிறது.[105]

### 2.24.5. இரக்க குணம்:

பாரதத்தில் அர்ச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்தில் அர்ச்சுனன் காஞ்சி செல்லும் செய்தி சொல்லப்படுகிறது. அப்போது அர்ச்சுனனுக்காகப் பன்றியைக் கொன்றவர், பன்றிக்குட்டிகளின் பசியைப் போக்கி அருளினார் என்பதை

'ஏனங்கொன்றார்; ஏனக்குருளைகள் இடர்தீர்த்தார்'

என்ற பாடல் அவரது இரக்கத்தன்மையை உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[106]

### 2.24.6. அடியவர் மனதில் குடிகொள்ளும் தன்மை:

கல் மனதைக் குழைவிக்கும் தன்மை கொண்ட ஏகாம்பரநாதர் மேருமலையிலும், கயிலை மலையிலும், வசித்தவர் ஆவார், ஆதலால் அடியவர்களது கல் போன்ற மனதில் அவரது குடும்பத்தோடு தங்கி வாழ்வளிக்க ஒரு தடையுமில்லை என்பதற்கேற்ப 'கச்சியமர் புண்ணிய நீ கயிலைமேரு' என உருவகமாகப்பாடுவது அறியற் பாலதாகும்.[107]

2.24.7. கிளி தூது:

ஏகாம்பரநாதர் வீதியில் பவனி வரும்பொழுது அவரைக் கண்ணுற்ற பெண்ணொருத்தி அவர்மேல் அன்பு கொண்டு அதனை ஏகாம்பரநாதருக்குத் தெரிவித்து வருமாறு கிளியைத் தூதாக அனுப்புகிறாள் இதனை

'சகமேழ் அயின்றோன் பெயர்கொள் எளியேன்
சரணாகதி சேர்தலை வேண்டினன்' என்ற பாடல் உணர்த்துகிறது.[108]

## இயல் இரண்டு
## சான்றெண் விளக்கம்

1. சோழன் பூர்வ பட்டையம் காஞ்சிபுரக் கல்வெட்டுச் சாசனம் ப.7
2. மேலது, ப.8
3. மேலது, ப.13
4. மேலது,ப.38
5. மேலது,ப.58

5அ. சிலப்பதிகாரம் நடுகல் காதை வரிகள் 72-75

6. கும்பாபிஷேக மலர் 1978 திருமுறைகளில் கச்சி 1,4,5,6
7. திருநாவுக்கரசு நாயனார் தேவாரம் 4,7,1
8. மேலது, 5-47-8
9. மேலது, 5-48-8
10. மேலது, 4-7-10
11. மேலது, 5-47-2
12. மேலது, 5-64-1
13. மேலது, 4-44-10
14. மேலது, 5-47-1
15. மேலது, 5-48-4
16. மேலது, 5-47-7
17. மேலது, 6-65-9
18. மேலது, 5-47-11

18அ. மகேந்திரவர்மன் மத்த விலாசம், ப.146

18ஆ. மேலது, ப.160
19. சம்பந்தர் தேவாரம் 1-133-1
20. மேலது, 1-133-6
21. மேலது, 2-12-1
22. மேலது, 3-14-1
23. மேலது, 2-12-7
24. மேலது, 1-133-11
25. மேலது, 2-12-11
26. மேலது, 3-114-5
27. ஏழாந்திருமுறை திருக்கச்சியேகம்பம் எண்.61
28. பெரியபுராணம் ஏயர்கோன் கலிக்காமர் புராணம் பா.288
29. ஏழாந்திருமுறை 7-61-1
30. மேலது, 7-61-5
31. மேலது, 7-61-8
32. மேலது, பாடல் 633
33. மேலது, பாடல் 624
34. திருப்பொற்சுண்ணம் பா.4
35. திருப்பூவல்லி பாடல்-14
36. சிவபெருமான் திருவந்தாதி பா.22
37. மேலது, பா.56
38. நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி பா.41
39. பதினோராந்திருமுறை சிவத்தளியியல்-20 செய்யுள்-164

என்னெஞ்சே உன்னை இரந்தும் உரைக்கின்றேன்
கன்னஞ்செய்வாகில் காலத்தால் - வன்னெஞ்செய்
மாகம்பத்தானை உரித்தானை வண்கச்சி
ஏகம்பத்தானை இறைஞ்சு.

40. திருநாவுக்கரசு நாயனார் புராணம் பா.1591
41. மேலது, பாடல் 1592
42. மேலது, பா.1594
43. கச்சித்திருவகவல் அடிகள் 2, 8-42
44. மேலது அடிகள் 64-70
45. திருவேகம்ப மாலை பா.1

46. மேலது, பாடல்-12
47. மேலது, பா.13-14
48. மேலது, பா.33
49. மேலது, பா.45
50. மேலது, பா.77
51. திருவேகம்பமுடையார் திருவந்தாதி பா.908
52. மேலது, பா.926
53. மேலது, பா.927
54. மேலது, பா.932
55. மேலது, பா.909
56. மேலது, பா.911
57. மேலது, பா.916
58. மேலது, பாடல்கள்.940, 943
59. மேலது, பா.948
60. மேலது, பா.913, 912
61. மேலது, பா.952
62. மேலது, பா.923, 996
63. மேலது, பா.941
64. மேலது, பா.937
65. மேலது, பா.955
66. மேலது, பா.966
67. மேலது, பா.990
68. மேலது, பா.938
69. கந்தபுராணக்காப்புச் செய்யுள்-1
70. மேலது, செய்யுள்-3
71. கந்தபுராணம் நாட்டுப் படலம் ப.13
72. வில்லிபாரதம் ஆதிபருவம் அர்ச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம் பா.14
73. திருப்புகழ் பாடல்-378
74. காஞ்சிபுர மான்மியம் பா.55
75. மேலது, பாடல்-60
76. ஏகாம்பரநாதருலா கண்ணி-3
77. மேலது, கண்ணி - 10

78. மேலது, கண்ணி - 46
79. மேலது, கண்ணி - 47
80. மேலது, கண்ணி - 61
81. மேலது, கண்ணி - 63
82. மேலது, க. - 78
83. மேலது, க. - 87
84. மேலது, க. - 102
85. மேலது, க. - 191
86. மேலது, க. - 206
87. மேலது, க. - 210
88. மேலது, க. - 545
89. தொண்டை மண்டல சதகம் பாடல் -1
90. மேலது, பாடல் -2
91. ஆனந்தருத்திரேசர் பதிகம் - 1-9
92. ஆனந்தருத்திரேசர் வண்டுவிடு தூது 10-11
93. மேலது, பா.56
94. மேலது, பா.84
95. மேலது, பா.84
96. தண்டியலங்காரம் பொருட்குறை விசேடம்
97. கோட்டையப்ப நாயக்கரின் கைச்சிலம்புப் பாட்டு பாடல்-1
98. காஞ்சிப்புராணம் பாயிரம் -1
99. மேலது, திருவேகம்பப் படலம் பா.44
100. மேலது, கலிநிலைத்துறை
101. கச்சிக்கலம்பகம் நலம் வரும் வழி நேரிசை வெண்பா ப.38
102. மேலது, பாடல் 4 பக்ஸ் 13
103. மேலது, பா. 8 பக்ஸ் 15
104. மேலது, பாடல் நேரிசை வெண்பா ப.29
105. மேலது, ப.37
106. மேலது, ப.42
107. மேலது, ப.12
108. மேலது, பா-கஎ

## இயல் மூன்று

# அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் வளர்த்த சமயம்

### 3.0 முன்னுரை:

இறை அடியவர்களுக்குச் சமயம் இன்றியமையாத தாகும். இந்த சமயத்தை வளர்த்த கோயில்கள் பல. அவை பெரும்பாலும் அன்று வாழ்ந்த அரசர்களால் வளர்க்கப்பட்டு வந்தவைகளாகும். அந்த அடிப்படையில் காஞ்சியில் சைவ சமயமானது பல்வகையில் பெருகியிருப்பதை ஏகாம்பரநாதர் கோயிலை மையமாகக் கொண்டு ஆராயப்படுகிறது. அதன் வகைப்பாட்டினை முறையே ஏகாம்பரநாதர் கோயிலின் சிறப்பு, கோயில் வளர்த்த சைவ சமயம், பாசுபதம், காபாலிகம், காளாமுகம், அரசர்கள் வளர்த்த சைவ சமயம், பஞ்சபூதத் தலங்களின் விளக்கம், நாயன்மார்கள் பாடலில் சிவனைப் போற்றும் விதம், அறுபத்து மூன்று நாயன்மார் களின் உருவச்சிலைகள், பெருமாளுக்குத் தனிச்சந்நிதி அமைந்த சிறப்பு, பல்வேறு கால கட்டத்தில் நிறுவப்பட்ட சிவலிங்கங்கள் - சுயம்பு லிங்கம், மானுட லிங்கம், அட்டோத்திர லிங்கம், சகஸ்ர லிங்கம், தாரா லிங்கம், முகலிங்கம், ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள திருமேனி சைவ சமய வளர்ச்சிக்கு உதவிய மடங்கள் - குறிப்பாக தொண்டை மண்டல ஆதீனம், மெய்கண்டார் கழகம், காஞ்சி சங்கரமடம் ஆகியவற்றோடு சேர்த்து 10 தலைப்புகளில் விளக்கப்படுகிறது.

### 3.1. ஏகாம்பரநாதர் கோயிலின் சிறப்பு:

பொதுவாக கோயிலின் சிறப்பை அறிய பல்வேறு வகைப்பாடுகள் உள. அவற்றுள் கல்வெட்டுக்கள் மூலமாக ஏகாம்பரநாதர் கோயிலின் சிறப்பு அறியப்படுகிறது. ஏகாம்பர நாதர் கோயில் தேவேந்திரனுடைய பாதுகாப்பினைக் கொண்டுள்ள கோயிலாகும். கிரேதாயுகத்தில் தேவேந்திரன்

ஆட்சியில் இக்கோயிலில் உள்ள லிங்கம் பிரதிட்டை செய்யப் பட்டுள்ளது என்பதனை சோழன் பூர்வ பட்டயம் மூலம் அறியப்படுகிறது.[1] இதிலிருந்து இதன் பழமையை அறிந்து கொள்ள முடிகிறது. தினந்தோறும் தேவர்கள் ஏகாம்பரநாதரை வழிபடுவதாக வரலாறு கூறுகிறது. மேலும், உமாதேவியார் ஏகாம்பரநாதரை குறித்துத் தவம் செய்து வழிபட்ட தலமாகும். இதுமட்டுமின்றி தேவாரப் பண் இசை ஒலியும், விழா ஒலியும் இக்கோயிலில் எப்போதும் கேட்டுக் கொண்டே இருக்கும்.

"ஏகாம்பரநாதரின் அன்புக்குப் பாத்திரமானால் வலிய நோய்கள் அனைத்தும் நீங்கிவிடும். ஏகாம்பரனின் அடியார்களை வணங்கினால் நாம் தலைவர்க்கும் தலைவரா வோம்; ஏகாம்பரநாதரை வணங்கினால் நமக்குத் துன்பமே வராது; நாம் ஐம்பொறிகளால் கட்டுண்டு கிடப்பதை ஏகாம்பரநாதர் விடுவிப்பார்" என்ற அப்பர் சுவாமிகளின் கருத்துக்கள் கோயிலின் சிறப்பை வலியுறுத்துபவைகளாக அமைந்துள்ளன.[2] மாமரம் இத்தலத்தின் தலவிருட்சமாகக் கருதப்படுகிறது. ஏகாம்பரநாதர் கோயிலைக் கண்டாலோ, சென்று தரிசனம் செய்தாலோ துன்பங்கள் அகலும் என்பதை 'ஏகம்பன் காண இடர் கெடுமே' என்ற பாடலால் அறிந்து கொள்ள முடிகிறது.[3]

காஞ்சிப் பதியையும், ஏகாம்பரத்தையும், கம்பா நதியையும் வழிமுறைப்படி வணங்குபவர் தலைமைப் பதவி அடைந்து உய்வர் என்பதனை

'கச்சி........நதி ஏகம்பம் விதியாலேத்தப் பதியாவோரே'

என்ற பாடலால் அறியற்பாலதாகும்.[4]

உமாதேவியார் ஆளும் கங்கையும், காஞ்சி நகர்க்குச் சிறப்பு தருதலால் ஏகாம்பரநாதர் கோயில் சிறப்புடன் பொலிவடைகின்றது. இவ்வாறு சிவனடியார்களின் வாக்கின் மூலம் ஏகாம்பரநாதர் கோயிலின் சிறப்பு அறியமுடிகிறது.

### 3.2. ஏகாம்பரநாதர் கோயில் வளர்த்த சைவ சமயம்:

சிவனை முழுமுதற் கடவுளாக நினைத்து வணங்கும் சமயம் சைவ சமயம் ஆகும். இச்சமயத்தைக் கடைப்பிடித்து ஒழுகுபவர்கள் சைவர்கள் எனப்படுவர். சைவ சமயத்தை அன்பு நெறி என்றும் அழைப்பர். சைவ சமயம் மிகவும் பழமை வாய்ந்த சமயமாகப் போற்றப்படக்கூடியது ஆகும். வடஅமெரிக்கக் கண்டத்திலுள்ள கொலராடோ ஆற்றின் கரையில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிவன் கோயில் இருந்திருப்பதனை கண்டுகொண்டதின் மூலம் சைவ சமயத்தின் பழமையை நம்மால் அறிந்துகொள்ள முடிகிறது.[5]

### 3.2.1. சைவத்தின் பிரிவுகள்:

வேத சாஸ்திரங்களில் விற்பன்னர்களான மறையவர்கள் பெருமளவில் பல்லவர் ஆட்சியில் இடம் பெயர்ந்தனர். அவர்களது வைதீக சமயம் பழமையான சைவ சமயத்தோடு ஒன்றிணைந்தது. சைவ சமயமானது சாமானிய சைவம், மார்க்க சைவம், சுத்த சைவம், கௌடசைவம், மிசிர சைவம், பாசுபத சைவம், காபாலிக சைவம், வீர சைவம், காளாமுக சைவம் என்று பல பிரிவுகள் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். சைவ சமயத்தின் பரிவுகளில் காணப்பட்ட பாசுபதர், காபாலிகர், காளாமுகர் முதலியவர்கள் பல்லவர்கள் காலத்தில் காஞ்சியில் குடியேறினர் என்பது அறியற்பாலதாகும்.[6]

### 3.2.1. பாசுபத சைவம் :

பாசுபத சைவத்தைப் பின்பற்றுபவர்கள் மயேச்சுவரர் என்றழைக்கப்படுவார்கள். சிவன் முழு முதற்கடவுள். நெற்றியில் திருநீறு அணிந்து கொள்வர். சிவ கணங்களிடம் நம்பிக்கைக் கொண்டிருந்தனர் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.[7]

### 3.2.2. காபாலிக சைவம்:

மண்டை ஓடுகளை மாலைகளாக அணிந்து கொண்டு பைரவரை வணங்கியவர்கள் காபாலிகர் என்றழைக்கப் பட்டனர். அவர்கள் சிவ வழிபாட்டில் எல்லாச் சமயத்தவர்களும் சமமானவர்கள் என கருதினார்கள். இவ்வகைப் பிரிவில் சக்தி வணக்கம் மேற்கொள்ளப்பட்டது என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.[8]

### 3.2.3. காளாமுக சைவம்:

இப்பிரிவைச் சேர்ந்தவர்கள் இறைவனைப் பற்றிப் பாடல்கள் பாடுவதிலும், மெய்மறந்து ஆடுவதிலும், மந்திரங்கள் ஓதுவதிலும் அதிக ஈடுபாடு கொண்டிருந்தனர். சோழர்கள் ஆட்சிக் காலத்தில் பலகோயில்களின் நிர்வாகங்களை இவ்வகைப்பிரிவினர் கவனித்து வந்தனர். அந்த வகையில் ஏகாம்பரநாதர் கோயிலின் நிர்வாகமும் இவர்களின் மேற்பார்வையின் கீழ் இருந்திருப்பது தெளிவாகிறது.

சைவசமயக் குரவர்களான நால்வரும், மற்றுமுள்ள நாயனர்மார்களும் தத்தம் பாடல்களில் சைவ முழு முதற்கடவுளான சிவனை மையமாகக் கொண்டு ஏகாம்பர நாதரின் பெருமையை எடுத்துக் காட்டியுள்ளனர். அந்த வகையில்

> "ஏகாம்பரநாதர் சைவ முழு முதற்கடவுள் என்பதை
> மறையானை மாசிலாப்புன்சடை மல்குவெண்...
> ......................................
> ......................................
> உறைவானை அல்லது உள்காது எனதுள்ளமே"

என்ற பாடலின் மூலம் திருஞானசம்பந்தர் குறிப்பிட்டது அறியற்பாலதாகும்.[9] அதே சமயத்தில் சாக்கியநாயனார் பௌத்த சமயத்தைச் சேர்ந்தவராயினும் ஏகாம்பரநாதர் மீது

கல் எறிந்ததையும், எம்பெருமான் பொருட்படுத்தாமல் அவருக்குக் காட்சியளித்து மோட்சமடையச் செய்த அவரது எளிமைத் தன்மையையும், தொண்டர்களுக்கும் அடியார் களுக்கும் குற்றத்தைப் பொருட்படுத்தாத தன்மையையும் அறிந்துகொள்ள முடிகிறது.[10]

நாயன்மார்கள் முதன் முதலாக ஏகாம்பரநாதர் கோயிலில் தேவாரம், திருவாசகம் முதலான சைவப்பக்தி பாடல்களை இசையோடு ஓதுவித்து, தொண்டை மண்டலத்தில் சைவ சமய வளர்ச்சிக்கு ஏகாம்பரநாதர் கோயிலை நிலைக் களனாகத் திகழச்செய்தனர்.

அறுபத்து மூன்று நாயன்மார்களைப் பற்றி எழுதிய சிவபக்த விலாசம் என்ற நூலுக்காகவும், ஏகாம்பரேஸ்தவம் என்ற வழிபாட்டுப் பாடல்களுக்காகவும் செய்யாறு என்னும் ஊரைச் சேர்ந்த கவிஞர் சீனிவாசயச்வனுக்கு வீட்டுமனை, நிலம் தானமாக வழங்கியுள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.[11] ஏகாம்பரநாதர் கோயிலில் திருப்பத்து பாடுவதற்கு நிலதானம் அளிக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.[12]

முதலாம் இராஜேந்திரன் என்ற சோழ அரசனால் 4000 சைவர்கள் வடபுலத்திலிருந்து அழைத்துவரப்பட்டு சைவ சமயக் கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தி சைவம் வளர அவர்களைக் குடியமர்த்தியுள்ளான் என்பது அறியற் பாலதாகும்.[13]

### 3.3. சைவ சமய வளர்ச்சியும் மகேந்திரவர்ம பல்லவனும்:

இம்மன்னன் சமண சமயத்தைச் சார்ந்தவனாக இருந்து திருநாவுக்கரசு நாயனாரால் சைவ சமயத்திற்கு மாறிய வனாவான் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[14] இவரது ஆட்சிக் காலத்தில் காஞ்சியில் சைவசமயம் உன்னதமான வளர்ச்சியடைந்தது என அறிய முடிகிறது. இம்மன்னன் இலிங்கத்தை வழிபட்டதால் குணபரன் என்னும் பெயர் பெற்றான் என்பதும் உணரத்தக்கதாகும்.

### 3.3.1. பரமேசுவரவர்மன்:

இவர் ஏகாம்பரநாதர் கோயிலில் பாரதக் கதையை மக்களுக்குச் சொல்லுமாறு செய்த அரசராவார் என்பது அறியற்பாலதாகும்.[15]

### 3.3.2. இராசசிம்மன்:

இம்மன்னன் சைவசித்தாந்தத்தில் மிகுந்த புலமை யுடையவன் ஆவான்.[16] சைவ சமயப்பற்றைக் குன்றின் மீது இட்ட விளக்குப்போல் ஒளிரச் செய்தவன்; பரமேச்சுவரன் உறுப்புகள் யாவும் ஒன்றுகூடி மனிதனாகப் பிறந்தாற் போன்றவன்; உடல் பலத்திலும், புகழிலும் நரசிம்ம அவதாரத்தை ஒத்தவன் ஆவான் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.[17]

## 3.4. பஞ்சபூதத்தலங்களின் விளக்கம்:

நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என்று சொல்லப்படும் பஞ்சபூதங்களைக் கொண்டு ஒவ்வொரு வடிவமாகவும், சிவபெருமான் ஒவ்வொரு இடத்தில் காட்சி தருகின்றனார். இவற்றுள் மண் முதன்மை இடம்பெற்ற தலமாய்ப் போற்றப்படுவது காஞ்சிபுரம் ஆகும்.

திருவாரூர் - காஞ்சிபுரம் - பிருதிவித்தலமாகவும், திருவானைக்கா - அப்புத்தலமாகவும், திருக்காளத்தி வாயுத் தலமாகவும், திருவண்ணாமலை நெருப்புத் தலமாகவும், சிதம்பரம் ஆகாயத்தலமாகவும் போற்றப்படுகிறது என்பது அறியற்பாலதாகும்.[18]

## 3.5. நாயன்மார்கள் பாடலில் சிவனைப் போற்றும் விதம்:

நாயன்மார்கள் சிவபிரானை முழு முதற்கடவுளாகக் கொண்டனர். அவர்கள் சைவ சமய வளர்ச்சிக்காகப் பதிகங்கள் மூலமாக இறைவனின் பெருமையை உலகுக்கு உணர்த்தியவர்கள் ஆவார்கள். வழிவழியாக வந்துள்ள இம்முறை மிகப்பழங்காலத்திலிருந்தே வந்துள்ளதை அறிந்து

கொள்ள முடிகிறது.[19] அறுபத்து மூன்று நாயன்மார்களின் பெயர்கள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

**அறுபத்துமூன்று நாயன்மார்கள்:**

1.அதிபத்த நாயனார், 2.அப்பூதியடிகள் நாயனார் 3. அமர்நீதி நாயனார், 4. அரிவாட்டாய நாயனார், 5.ஆனாய நாயனார், 6.இசைஞானியார், 7.இடங்கழி நாயனார், 8.இயற்பகை நாயனார். 9.இளையான்குடி மாற நாயனார், 10. உருத்திர பசுபதி நாயனார், 11. எறிபத்த நாயனார், 12. ஏயர்கோன் கலிக்காம நாயனார், 13. ஏனாதிநாத நாயனார், 14. ஐயடிகள் காடவர்கோன் நாயனார், 15. கணநாத நாயனார், 16. கணம் புல்ல நாயனார், 17. கண்ணப்ப நாயனார், 18. கலிக்கம்ப நாயனார், 19. கலிய நாயனார், 20.கழற்றறிவார் நாயனார் 21. கழற்சிங்க நாயனார். 22.காரி நாயனார், 23. காரைக் காலம்மையார், 24. குங்கிலியக்கலய நாயனார், 25.குலச்சிறை நாயனார், 26.கூற்றுவ நாயனார், 27. கோச் செங்கட் சோழ நாயனார், 28. கோட்புலி நாயனார், 29. சடைய நாயனார், 30. சண்டேசுவர நாயனார், 31. சத்தி நாயனார், 32. சாக்கிய நாயனார், 33.சிறப்புலி நாயனார், 34.சிறுத்தொண்ட நாயனார், 35. சுந்தரமூர்த்தி நாயனார், 36. செருத்துணை நாயனார், 37.சோமாசி மாற நாயனார், 38. தண்டியடிகள் நாயனார், 39.திருக்குறிப்புத் தொண்ட நாயனார், 40. திருஞானசம்பந்த நாயனார், 41. திருநாவுக்கரசு நாயனார், 42. திருநாளைப்போவார் நாயனார், 43. திருநீலகண்ட நாயனார், 44. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார், 45. திருநீலநக்க நாயனார், 46.திருமூல நாயனார், 47.நமி நந்தியடிகள் நாயனார், 48.நரசிங்க முனையரைய நாயனார், 49. நின்றசீர் நெடுமாற நாயனார், 50. நேச நாயனார், 51. புகழ்ச் சோழ நாயனார், 52. புகழ்த்துணை நாயனார், 53. பூசலார் நாயனார், 54.பெருமிழலைக் குறும்ப நாயனார், 55. பூசலார் நாயனார், 56. மானக்கஞ்சார நாயனார், 57. முருகநாயனார்,

58. முனையடுவார் நாயனார், 59.மூர்க்க நாயனார், 60. மூர்த்தி நாயனார், 61. மெய்ப்பொருள் நாயனார், 62. வரியலார் நாயனார், 63. விறன்மிண்ட நாயனார்.- ஏகாம்பரநாதரை பாடியவர்கள்.

நாயன்மார்கள் இறைவனையும் அவரது அடியாரையும் வணங்க வேண்டும் என்ற கருத்தை மக்களின் மனத்தில் உருவாக்கியதோடு, தாங்களும் அவ்வாறே வாழ்ந்து காட்டியுள்ளனர். சிவனடியார்கள் கேட்டதையெல்லாம் மறுக்காமல் உள்ளம் மகிழ்ந்து அளித்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[20] அந்த வகையில் தொண்டை நாட்டில் சைவ சமயத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்தவர்கள் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சேரமான் பெருமாள் நாயனார், மாணிக்கவாசகர், கண்ணப்ப நாயனார், காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர்கோன் முதலியவர்களாவர். இவர்களுள் பல்லவ அரசனான ஐயடிகள் காடவர்கோன் சைவ சித்தாந்தத்தில் சிறந்து விளங்கியவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[21]

சேக்கிழார் அருளிய பெரியபுராணத்தில் ஏகாம்பரநாதர் கோயிலின் தென்புறக்கோபுரம் வானுயரக் காட்சி அளிக்கின்றதையும், அதனருகில் அந்தணர் இருப்பிடங்கள் இருந்ததாகவும், அவர்கள் எழுப்பும் வேள்வித் தீயிலிலிருந்து கிளம்பும் வேள்விப் புகையானது மேகமண்டலம் வரை பரவுவதாகக் குறிப்பிட்டுள்ளார் என்பதையும் அறிந்துகொள்ள முடிகிறது.[22] திருநாவுக்கரசர் குறிக்கோளுடன் வாழ்வதுதான் சிறந்த அறநெறியாகும் என்று குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு கொண்ட குறிக்கோளை நாயன்மார்கள் உயிரைவிட மேலானதாகக் காத்து நின்றதால்தான் சிவனின் திருவருளைப் பெறமுடிந்தது.

திருஞானசம்பந்தர் வேதம் நான்கிலும் மெய்ப்பொருள் ஆவது நாதன் நாமம் என்று சிவனைப் போற்றுகிறார். திருநாவுக்கரசர் முதல் பல்லவ மன்னனான மகேந்திரனைச் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு மாற்றியவராவார்.

முதலாம் நரசிம்மவர்மனின் படைத்தளபதியான பரஞ்சோதி என்பவர் சிவன்மீது கொண்ட அன்பால் தொண்டருக்குத் தொண்டனாகச் சிறந்து விளங்கி சிறுத்தொண்ட நாயனார் என்று போற்றப்படுகிறார்.

இவ்வாறு நாயன்மார்கள் பாடிய ஏகாம்பரநாதர் பற்றிய செய்திகள் பொதுவாக சிவனை முழு முதற்கடவுளாகப் போற்றி வந்துள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.[23]

### 3.6. அறுபத்து மூன்று நாயன்மார்களின் உருவச் சிலைகள்:

காஞ்சியில் ஏகாம்பரநாதர் கோயில் சைவசமய வளர்ச்சிக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தது. இக்கருத்துக்கு ஏற்ப முதன்முதலாக தொண்டை மண்டல சிவபிரான் கோயில்களில் இக்கோயில் சிறந்து விளங்குகிறது எனலாம். அதற்கேற்ப வழிபடுவதற்கு, உரிய 63 நாயன்மார்களின் திருவுருவங்கள் பொலிவோடு இன்றும் கோயிலில் திகழ்வது காணலாம். இது சைவ சமயத்தின் பெருமைக்குச் சான்றாகும். அதனை அரண் செய்யும் வகையில் கி.பி.10ஆம் நூற்றாண்டுக்குப் பின்பு நாயன்மார்களின் உருவச்சிலைகளை கோயில்களில் வைத்து வழிபடும் வழக்கம் தோன்றியது குறிப்பிடத்தக்கதாகும்.[24]

உழவாரப் பணிபுரிந்த திருநாவுக்கரசர் திருவுருவம் கையில் உழவாரப் படை கொண்டுள்ள வகையில் உருவாக்கப்பட்டது. ஒரு கையில் பூச்செண்டும், ஏகாம்பர நாதர் ஊன்றுகோல் அளித்ததால் மற்றொரு கையில் ஊன்றுகோலுடன் சுந்தரர் திருவுருவம் அமைக்கப்பட்டது. ஐயடிகள் காடவர்கோன், கழற்சிங்கர் முதலியவர்கள் அரசர்களாக இருந்ததால் தலையில் கிரீடமும், இடுப்பில் வாளும். கையில் கேடயமும் கொண்டு அவர்கள் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளதையும் அறியற்பாலதாகும்.[25] பங்குனி மாதம் நடைபெறும் பிரம்மோத்சவத்தின் போது ஆறாம் நாள் காலை அறுபத்து மூன்று நாயன்மார்கள் வீதி வலம் வருவர். அதுமட்டுமின்றி இன்றும் அவர்களின் அவதார நட்சத்திரங்கள்

வருடாந்திர, மாதாந்திர உற்சவமாக சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

### 3.7. பெருமாளுக்குத் தனிச்சந்நிதி அமைந்த சிறப்பு:

சைவம், வைணவம், சமணம், பௌத்தம் முதலான சமயங்கள் மன்னர்களின் பேராதரவுடன் காஞ்சியில் சிறப்புற்று இருந்துள்ளது. சமயப் பற்றும், ஒற்றுமையுணர்வும் இருந்ததை சீனப்பயணி யுவான்சுவாங் பாராட்டியுள்ளார் என அறியமுடிகிறது.[26] அந்த வகையில் ஏகாம்பரநாதர் கோயிலில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட 80-வது திவ்ய தேசமாகிய "திருநிலாத்திங்கள் துண்டம்" என்ற பெருமாள் கோயில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.[27]

இதனையே திருமங்கையாழ்வாரும்

"நீரகத்தாய் நெடுவரையினுச்சிமேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய்"[28]

என்று ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள நிலாத்திங்கள் துண்டத்தையும் 'நெடுவரையின் உச்சிமேலாய்' என்று நீண்ட மலை உச்சியிலருள்ள திருவேங்கடவனோடு சேர்த்து மங்களாசாசனம் செய்துள்ளதை அறியமுடிகிறது.[29] மேலும், ஏகாம்பரநாதர் மீது அந்தாதி பாடிய பட்டினத்தடிகள் தாம் இயற்றிய நூலுள் ஏகாம்பரநாதரது சிறப்புகளைக் கூறும்போது, காஞ்சியில் உலகளந்த பெருமாள் கோயிலும், பாண்டவதூதர் சந்நிதியும் தேவர்கள் தங்குவதற்கு உகந்த இடமாக உள்ளமையை தெரிவிக்கிறார். எனவே, சமயப்பற்றுக்கு ஏகாம்பரநாதர் கோயில் சிறந்தது என்பத உணரத்தக்கதாகும்.

### 3.8. பல்வேறு கால கட்டத்தில் நிறுவப்பட்ட சிவலிங்கங்கள்:

சிவலிங்க வழிபாடு மிகப்பழங்காலத்திலேயே சிறப்புற்று இருந்ததை நம்மால் அறிந்துகொள்ள முடிகிறது. 7000 ஆண்டுக்கு முன் காணப்பட்ட ஹரப்பா நாகரித்தில் ஆவுடையார் இல்லாத லிங்கங்கள் இருந்திருக்கின்றன.

அதன் அடிப்படையிலான லிங்கமொன்று ஏகாம்பரநாதர் கோயிலில் வாலீசம் என்ற பெயரில் உள்ளது. இதனால் ஏகாம்பரநாதர் கோயில் லிங்கங்கள் பழங்காலத்திலேயே மக்களால் வழிபடப் பெற்றுள்ளன என்பது தெளிவாகிறது. இலிங்கம் என்னும் சொல் சிவபிரானுக்கு அடையாளமாகி வழிபட்டு வந்ததைக் குறிக்கும் சொல்லாகும்.[30]

### 3.8.1. ஆறு வகைப்பட்ட இலிங்கங்கள்:

இந்த இலிங்கமானது அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவலிங்கம், ஆன்மலிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் என்று ஆறு வகையானச் சிவலிங்கமாக மக்களால் வணங்கப்படுவதை அறியமுடிகிறது.[31]

சிவலிங்கமானது சலலிங்கம், அசல லிங்கம் என்றும் இருவகைப்பாடு கொண்டது. மண், கல், பொன், வெள்ளி, செம்பு முதலிய உலோகங்களால் செய்யப்படுவது சலலிங்கம் ஆகும். திருக்கோயிலின் மூலத்தானத்தில் நிலையாக நிறுவப் படுபவை அசலலிங்கங்கள் என்பது அறியற்பாலதாகும்.[32] இதனுள் தலையாயது சுயம்புலிங்கம் ஆகும். ஏகாம்பரநாதர் கோயிலில் காணப்படும் லிங்கங்களை இருவகையாகப் பிரிக்கலாம்.

### 3.8.1.1. சுயம்புலிங்கம்:

இவ்வகை இலிங்கம் தாமாகத் தோன்றக் கூடியது. எட்டிவனமாகக் காட்சியளித்த காஞ்சியில் மூன்று அரசர்களும் கம்பை லிங்கத்தையும், கம்பை நதியையும் பார்த்தார்கள். நதியின் கரையில் ஒரு ஆவுடையாரும் அதற்கான ஆதாரமும் இருந்தது. மேலும், அகழ்ந்து பார்க்கும் பொழுது மூன்று லிங்கங்களும், அவற்றின் ஆவுடையாரில் விஷ்ணு சிவன் மொழியில் பிரமதேவன் கையெழுத்தில் கல்சாகரம் பொறிக்கப்பட்டு இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.[33]

### 3.8.1.2. மானுடலிங்கம்:

இவ்வகை இலிங்கம் மனிதர்களால் வழிபாட்டுக்காக உருவாக்கப்பட்டவையாகும். மனிதர் உருவாக்கிய சிவலிங்கங்கள் அட்டோத்திரலிங்கம், சகஸ்ரலிங்கம், தாராலிங்கம், முகலிங்கம் என நானகு வகைப்படும்.

### 3.8.1.3. அட்டோத்திரலிங்கம்:

ஒரே லிங்கத்தில் 108 சிறிய சிவலிங்கங்களை உடையவை. இவ்வகை லிங்கம் ஏகாம்பரநாதர் கோயிலின் உள்சுற்றில் வடமேற்கில் உள்ளது.

### 3.8.1.4. சகஸ்ரலிங்கம்:

1008 சிவலிங்கங்களைக் கொண்டது. இவ்வகை லிங்கம் ஏகாம்பரநாதர் கோயிலில் உள்ளது.

### 3.8.1.5. தாராலிங்கம்:

பட்டைகளைக் கொண்ட இலிங்கம். இது காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயிலில் உள்ளது.

### 3.8.1.6. முகலிங்கம் :

ஒரு முகமுடைய இலிங்கம். இவ்வகை லிங்கமும் ஏகாம்பரநாதர் கோயிலில் அமைந்துள்ளது. மேலும் ஐந்து முகமுடைய சிவலிங்கத்தில் கிழக்கில் தத்புருஷ முகமும். மேற்கில் சத்தியோகாத முகமும், வடக்கில் வாமதேவ முகமும், தெற்கே அகோர முகமும், வடகிழக்கில் ஈசான்ய முகமும் உள்ளன. இவ்வகைச் சிவலிங்கமும் ஏகாம்பரநாதர் கோயிலில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.[34]

ஏலவார்குழலியின் முலைத்தழும்பும், வளைத்தழும்பும் பெற்றது ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள சிவலிங்கம் ஆகும். இவ்வாறு பல்லவ மன்னர்களான முதலாம் மகேந்திரவர்மன், முதலாம் நரசிம்மவர்மன் முதலிய பல்லவ மன்னர்களாலும், அவர்களுக்குப் பின்வந்த அரசர்கள் பலராலும் ஏகாம்பரநாதர்

கோயிலிலுள்ள இலிங்கங்கள் வைத்து வழிபடப்பட்டுள்ளது என்பது தெளிவாகிறது. ஏகாம்பரநாதர் கோயில் சிவலிங்கத்திற்குப் பின்புறம் கருவறைச் சுவரில் சோமாஸ் கந்தமூர்த்தம் அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.[35]

### 3.9. ஏகாம்பரநாதர் கோயிலுள்ள செப்புத் திருமேனிகள்:

ஏகாம்பரநாதர் கோயிலில் இறைவனும், இறைவியும் ஒருசேர அமர்ந்திருக்கும் சோமாஸ்கந்தர், நடராசர், சிவகாமி யம்மை, பிரதோடகாலத்தில் உலாவரும் ஏகாம்பரநாதர், ஏலவார்குழலி, விநாயகர் மற்றும் அறுபத்து மூன்று நாயன்மார்களுக்கும் செப்புத்திருமேனிகள் செய்யப் பட்டுள்ளன.

செப்புத்திருமேனிகளின் அமைப்பைக் காணும்போது முற்காலச் சோழர்களின் காலத்தில் உருவாக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.[36] இக்கோயிலில் சைவ சமய வளர்ச்சியில் முக்கியப் பங்குகொண்ட சந்தானாசாரியர்களான அருள் நந்தி சிவம், உமாபதி சிவம், மெய்கண்ட தேவர் முதலியோரது உருவச்சிலைகள் அமைக்கபட்டுள்ளன என்பது அறியற் பாலதாகும்.[37]

மகேந்திரவர்ம பல்லவனால் ஏகாம்பரநாதர் கோயிலுக்கு உள்ளேயே கட்டப்பட்ட இடபேசுவரர் ஆலய மண்டபத்தின் பீடப்பகுதியில் சிறுத்தொண்ட நாயனார் கதை சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

### 3.10. சைவ சமய வளர்ச்சிக்கு உதவிய மடங்கள்:

ஏகாம்பரநாதர் கோயில் மூலமாக அந்தக் காலத்தில் சைவ சமயம் வளர்ச்சி பெற்றுள்ளது. அதை ஆராய்ந்து நோக்கும்போது சைவ சமயத்திற்கு மையமாக இக்கோயில் திகழ்ந்தது எனலாம். ஏனெனில் அத்வைதத்தைப் பரப்பிய சங்கராச்சாரியார் இந்தக் கோயிலின் அருகில் ஒரு மடம் நிறுவியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

### 3.10.1. தொண்டை மண்டல ஆதீனம்:

மேலும், ஏகாம்பரநாதர் கோயிலை மையமாகக் கொண்டு சைவ சமய வளர்ச்சிக்கு மடங்கள் அரும்பாடு பட்டுள்ளது. அந்த வகையில் தொண்டை மண்டல ஆதீனமான ஞானப்பிரகாசமடம், மெய்கண்டார் கழகம், சங்கர மடம் முதலியவை சிறப்பானதாகும். இம்மடங்கள் சைவ சமய நெறிகளை மக்களிடையே பரப்புவதற்காகவே தொடங்கப் பட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[38]

ஏலவார்குழலி, ஏகாம்பரநாதரை தழுவக்குழைந்த போது அறுவகைச் சமயங்களுக்கும் தலைவியாகிய தேவிக்கு ஏகாம்பரநாதர் எட்டு உழக்கு நெல் கொடுக்க, அதனை வாங்கி உழவுத் தொழில் செய்யும் வேளாளர்கள் காஞ்சியில் உருவானார்கள் என்பது அறியற்பாலதாகும்.[39] அத்தகைய வேளாண் தலைவர்கள் பலர் ஒன்றுகூடி சைவசமயம் அழிந்து விடாமல் இருப்பதற்கு ஒரு மடத்தைத் தோற்றுவித்தனர். இம்மடத்திற்குத் தலைவராக திருக்கயிலைப் பரம்பரை யிலிருந்து வந்த உமாபதி என்பவர் ஒருவராவார். இந்தப் பரம்பரையும், மடமும் தொடர்ந்து வந்து கொண்டே இருப்பதை

"பூமன்னு பொழில் வெண்ணை மெய்கண்டான்
கச்சிப் புகழ்பவனை தத்துவ ஞானப் பிரகாசமாய் வந்து"

என்ற சிதம்பரப் பாட்டியல் உணர்த்துவது குறிப்பிடத் தக்கதாகும்.[40]

தொண்டை மண்டலத்திலுள்ள வேளாளர்கள் அனைவரும் ஞானப்பிரகாசர் மடத்து சீடர்களாவார்கள். இந்த மடமானது கரிகால் சோழன் காலத்திலிருந்து தொடர்ந்து செயல்பட்டு வருவது என்பது

'நீடாழியுலகத்திற் கரிகால சோழனா
முதனிகழ் தொண்டை மண்டலத்து'

என்ற ஞானப்பிரகாச பஞ்சாக்கரத்திலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது.[41]

தொண்டை மண்டல வேளாளர்களுக்கு சைவ சமயத்தை வளர்க்க ஒரு ஆசான் வேண்டுமென்பதால் இந்தக் குரு பீடம் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. ஆகவே, காஞ்சியிலுள்ள ஞானப்பிரகாச மடம் பழங்காலம் தொட்டு செயல்பட்டு வருகிறது என்பது புலனாகிறது. இம்மடத்திற்குத் தலைவர்களாக இருப்பவர்கள் ஞானப்பிரகாசர் என்ற பட்டம் கொண்டவர்களாவர். இவர்கள் சிவமதத்தின் முதல்வனான ஏகாம்பரநாதரிடம் பக்தி கொண்டிருந்தது குறிப்பிடத் தக்கதாகும்.[42]

மேலும், ஞானப்பிரகாசர் விசய நகரப் பேரரசர் கிருஷ்ண தேவராயர்மேல் `மஞ்சரிப்பா` என்ற பிரபந்தம் பாடியதை

வானப் பிரகாசப் புகழ்க் கிருஷ்ண

ராயர்க்கு மஞ்சரிப்பா என்ற தொண்டை மண்டலச் சதகப் பாடலால் அறிந்துகொள்ள முடிகிறது.[43]

இம்மடமானது தற்போது 231ஆம் பட்டத்தினைத் தலைவராகக் கொண்டுள்ளது. இவற்றினை ஆராயும்போது இம்மடம் 2300 ஆண்டுகள் பழமை கொண்டதாகும். மேலும் இம்மடமானது சைவ சமயத்தை வளர்க்கும் பணியிலும், குருபூசை விழாக்கள் நடத்துவதிலும் பெரும்பங்கு வகிக்கிறது, திங்கள் தோறும் பெரியபுராணத் தொடர் சொற்பொழிவு நடத்தப்படுகிறது.

### 3.10.1.2. மெய்கண்டார் கழகம்:

இந்தக் கழகம் வெண்ணெய் மெய்கண்டார் என்பவரால் தோற்றுவிக்கப்பட்டதால் இதுமெய்கண்டார் கழகம் எனப்பெயர் பெற்றது. அவருக்குப்பின் அவருடைய பரம்பரையினரால் இது நிருவகிக்கப்பட்டுள்ளது. அக்காலத்தில் மெய்கண்ட சிவாசாரியார் சந்தானபீடம் என்றழைக்கப்பட்டுள்ளது அறியற் பாலதாகும்.[44] இக்கழகமானது கிருஷ்ணதேவராயரின் முதலமைச்சர் அம்பி அறம்வளர்த்தான் முதலியால்

தொண்டை மண்டல ஆதீனமாக காஞ்சியில் சிறப்புடன் இன்று வரை செயல்பட்டு வருகிறது. மேலும் பெரிய நாட்டார் தானத்தால் ஈசானதேவர் மடம் ஏகாம்பரநாதர் கோயிலில் நடத்தப்பட்டதை அறிந்துகொள்ள முடிகிறது.[45]

### 3.10.1.2. காஞ்சி சங்கர மடம்:

இம்மடம் சைவசமயத்தின் பெருமையையும், ஆதி சங்கரருடைய கொள்கைகளையும் மக்களிடையே பரப்பி வருகிறது. இந்து சமயக் கல்லூரி, இந்து சமய மன்றங்கள், ஆசிரியர்கள், கல்வியாளர்கள் கலந்து கொள்ளும் விடுமுறைக்கால சமய வகுப்புகள் இம்மடத்தின் மூலம் நடத்தப்பட்டு, இம்மடம் சைவசமய வளர்ச்சிக்கு உதவி வருவது குறிப்பிடத்தக்கதாகும்.[46]

கோயில்களில் இறைவனின் திருவுருவங்களைப் பிரதிட்டை செய்வது, விழாக்கள் நடத்துவது முதலிய செயல்களுக்கு இம்மடமானது நிதியுதவியும் அளித்து வருகிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[47]

இம்மடத்தின் சார்பில் சர்வதேசக் குழந்தைகள் தினத்தன்று 12 முதல் 18 வயதுக்கு உட்பட்டவர்களிடையே கடவுள் பக்தி, நல்லொழுக்கம், நற்பண்புகள் முதலியவற்றை வேரூன்றச் செய்யும் வகையில் போட்டிகள் நடத்தப்பட்டு, பரிசுகள் வழங்கப்பட்டு வருகின்றன, இம்மடத்தில் ஒழுக்கமும், சமய அறிவையும் கற்பிப்பதற்கு, பல சாத்திரங்களைக் கற்றுணர்ந்த ஆசான்கள் இருந்துள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.[48]

விசயநகர ஆட்சியில் காஞ்சி சங்கரமடத்திற்கு பூரணா நந்தர், சதாசிவேந்திரர், வியாசாசல மகாதேவேந்திரர், அருணகிரி சந்திரசூடேந்திரர், சர்வக்ன சதாசிவபோதேந்திரர், பரமசிவேந்திரர் முதலிய புகழ் வாய்ந்த பீடாதிபதிகள் இருந்துள்ளனர் என்பது அறியற்பாலதாகும்.[49]

மாணிக்கவாசகரின் திருவெம்பாவையில் ஆறு பாடல்களில் ஏகாம்பரநாதரைப் பற்றி குறிப்பிட்டுள்ளதாலும் அதனை வெளிப்படுத்தும் வகையில் திருவெம்பாவை மாநாடுகள் நடத்தி சைவசமய வளர்ச்சிக்கு காஞ்சி சங்கரமடம் அடிகோலியது எனலாம்.

காபாலிகமடம், பாசுபத மடம், காளாமுக மடம் என பலவகையான மடங்கள் அக்காலத்தில் காஞ்சியில் இருந்தது குறிப்பிடத்தக்கதாகும். காபாலிகர் மடமானது ஏகாம்பரநாதர் கோயிலின் அருகில் அக்காலத்தில் இருந்தது என்பது அறியற்பாலதாகும்.[50]

பாசுபத சைவப் பிரிவினரும், அவர்களுக்கான மடமும் அக்காலத்தில் இருந்தது என்பதை மகேந்திரவர்ம பல்லவனால் இயற்றப்பட்ட மத்தவிலாசம் என்னும் நூல் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[51]

காஞ்சியிலுள்ள திருமேற்றளீசுவரர் கோயிலைச் சார்ந்து சைவ மடம் ஒன்று இருந்துள்ளது. அங்கு தங்கிய திருநாவுக்கரசர் 'கல்வியிற் கரையிலா காஞ்சி மாநகர்' என்று கூறியது அறியற்பாலதாகும்.[52]

## இயல் மூன்று
## சான்றெண் விளக்கம்


1. சோழன் பூர்வ பட்டையம் காஞ்சிபுரக் கல்வெட்டு, ப.7
2. தேவார ஒளி நெறித்திரட்டு அப்பர், ப.158
3. சம்பந்தர் தேவாரம் 133-10
4. மேலது, 2.99.2
5. கழகத் தமிழகராதி, ப.113
6. பல்லவர் வரலாறு, ப.271
7. தலைக்காட்டு கங்கர், ப.188
8. பல்லவர் வரலாறு, ப.271
9. சம்பந்தர் தேவாரம் 2.12.1
10. சாக்கிய நாயனார் புராணம்
11. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1955-56 எண்.274
12. மேலது எண்.276
13. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1930-31 எண்.232
14. திருநாவுக்கரசு நாயனார் புராணம் செய்யுள்-146
15. பல்லவர் வரலாறு, ப.15
16. தென்னிந்தியர் கல்வெட்டுக் சான்று Vol-I P-14-18
17. பல்லவர் வரலாறு ப.153
18. திருக்கோயில் கும்பாபிஷேக மலர் 1992 ப.83
19. தமிழர் மதம் ப.கசூஇ (163)
20. பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை ப.271
21. தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி கைலாசநாதர் கோயில் கல்வெட்டு
22. திருத்தொண்டர் புராணம் பா.1587
23. தலைக்காட்டுக் கங்கர் ப.190
24. கோயிற்களஞ்சியம் அறிமுகம் ப.78
25. மேலது ப.79
26. பல்லவர் வரலாறு ப.121
27. தமிழகக் கோயிற்கலை ப.115
28. திவ்வியப் பிரபந்தம் திருநெடுந்தாண்டகம் பாடல் 8

29. கோயில் களஞ்சியம் அறிமுகம் ப.22
30. மேலது, ப.23
31. மேலது, ப.25
32. சோழன் பூர்வபட்டையம் காஞ்சிபுர கல்வெட்டு ப-6
33 கோயிற்களஞ்சியம் ப.27
34. திருக்கோயில் கும்பாபிஷேக மலர் 1979 ப.34
35. கோயிற்களஞ்சியம் ப.80
36. காஞ்சி காமாட்சி சைவக்காஞ்சி ப.84
37. தமிழ்ப் புலவர்வரிசை 16ம் நூற்றாண்டு ப.30
38. சிதம்பரப் பாட்டியல் பாயிரம் - 4
39. ஞானபபிரகாச பஞ்சாக்கரம் வரி - 1
40. செந்தமிழ்ச் செல்வி தொகுதி -29 ப.145 - 150
41. தொண்டை மண்டல சதகம் பாடல்-95
42. தமிழ்ப் புலவர்கள் வரலாறு 16ம் நூற்றாண்டு ப.31-32
43. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1939-40 எண்.349
44. காஞ்சி காமாட்சி சைவக்காஞ்சி-ப. 93
45. மேலது, ப.93
46. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1925, ப.110
47. விசயநகரப் பேரரசு, ப.301
48. பல்லவர் வரலாறு ப.263
49. செந்தமிழ்ச் செல்வி தொகுதி 28, ப.65
50. பல்லவர் வரலாறு ப.264
51. மகேந்திரவர்மன் ப.63
52. மேலது, ப.65

## இயல் நான்கு

# அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் விழாக்கள்

### 4.0 முன்னுரை:

இவ்வியலில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் நடைபெறும் தினத்திருவிழா, மாதத்திருவிழா, வருடத்திருவிழா ஆகியவற்றைப் பல்வேறு வகைப்பாட்டில் ஆயப்படுகிறது. அவை முறையே திருவிழாக்களின் முக்கியத்துவம், ஏகாம்பர நாதர் கோயில் விழாக்கள் - வழிபாடும் விழாக்களும், விழாக்களின் வகைகள் - நாள் வழிபாடுகள், பிற பூசைகள், சித்திரைமாத விழாக்கள் - விடையாற்றி விழா, பாலூர் திருவிழா, நால்வர் பெருமக்கள் விழா; வைகாசி மாத விழாக்கள்; ஆனித்திருமஞ்சனம்; ஆடிமாத விழா - பவித்ரோற்சவ விழா, ஆடிப்பூரவிழா; ஆவணி விழா - பிட்டுக்கு மண் சுமந்தவிழா, விநாயகர் சதுர்த்தி விழா; புரட்டாசி விழா - நவராத்திரி விழா; ஐப்பசி விழா - தீபாவளி விழா, கந்தசஷ்டி விழா; கார்த்திகை விழா - சோம வார இலட்ச தீபப் பெருவிழா, கார்த்திகை தீபத் திருவிழா; மார்கழி விழா திருவாதிரைத் திருவிழா, மாணிக்கவாசகர் பல்லக்கு உதய விழா; தை விழா - உத்தராயணத் திருவிழா, தைப்பூசத் தெப்பவிழா, சூரியனின் ஈஸ்வர வழிபாடு; மாசி விழா - தவன விழா, மாசி மகம், சிவராத்திரி விழா, சுந்தரமூர்த்தி நாயனார் இடக்கண்பார்வை பெற்ற உற்சவம்; பங்குனி உத்திரவிழா, பிரம்மோற்சவ விழா ஆகிய 29 தலைப்புகளில் ஆயப்படுகிறது.

### 4.1. திருவிழாக்களின் முக்கியத்துவம்:

திருவிழாக்கள் மனித சமுதாயத்தில் இன்றியமை யாதவையாகும். மக்களுக்கு கடவுள் உணர்வையும், மகிழ்ச்சியையும் ஒரே நேரத்தில் அளிக்கக் கூடியவையாகும்.

கோயில்களில் நாள்தோறும் வழிபாடுகள் நடந்தாலும், திருவிழாக்களின் போது சிறப்பு வழிபாடுகளால் மக்கள் இறைவனுடைய முழுமையான அருளைப் பெறுகின்றார்கள். 'விழா' என்ற சொல்லின் அடிச்சொல் 'வீழ்' என்பதாகும். வீழ் - விழவு அதாவது மக்கள் விருப்பத்துடன் கொண்டாடுவது விழாவாகும். 'விழா' என்பதற்கு மங்கலச் சடங்கு என்று பொருளாகும் என்பது அறியற்பாலதாகும். விழா என்னும் சொல் திரு என்னும் அடைமொழி பெற்று விளங்குகிறது. திருவிழா என்றால் சிறப்பான கொண்டாட்டம் எனக்கொள்ளலாம். இச்சொல்லே 'உற்சவம்' என்னும் வடமொழிச் சொல்லால் அழைக்கப்படுகிறது. திருவிழாக் களைக் குறித்த பழந்தமிழ்ச்சொல் 'சாறு' ஆகும். இதனை 'சாறயர் மூதூர்' என்ற சிறுபாணாற்றுப்படை வரிமூலம் அறியற்பாலதாகும்.[1]

மேலும், விழாக்கள் கொண்டாடுவது பற்றி மதுரைக் காஞ்சி உணர்த்துவது காணலாம்.[2]

'கருஞ்சூல் மகளிர் பேணிக்கை தொழுது
பெருந்தோட் காலினி மருப்ப ஒரு சார்
சூல் மகளிர் தேவராட்டியுடன் நின்று
தெய்வத்திற்கு மடை கொடுக்க'

அதாவது செவ்வழி என்னும் யாழை இசைத்து, சிறுபறை முழங்க, பூசைக்குரிய பொருள்களோடு நல்ல மயில் போல மெல்ல மெல்ல நடந்து சென்று திருக்கோயிலின் கண் இறைவனைக் கைதொழுது ஏத்தித் தேவரடியார்கள் மடை கொடுக்கின்றனர் என்பதாகும். அவ்வாறே திங்கள் தோறும் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலிலும் பல விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

இக்கோயிலில் மட்டும் அருள்மிகு ஏகாம்பரநாதர் வழிபாட்டில் தலைமீது 'ருத்ரபாதுகை' வைக்கப்படுகின்றன. உமாதேவி இலிங்க வழிபாட்டில் ருத்ரபாதுகைமூலம் தீட்சை

பெற்றதனால் சிவபாதம் தலைமீது தாங்கிட ஆசீர்வதிக்கப்படுகிறது என்பது அறியற்பாலதாகும்.

### 4.1.1. வழிபாடும் விழாக்களும்:

இவ்வாறு ஏகாம்பரநாதர் கோயில் திருவிழாக்களை அறியும் முன்பு வழிபாட்டின் இன்றியமையாமையை அறிய வேண்டியுள்ளது. கடவுள் வழிபாட்டிற்கும், விழாக்களுக்கும் ஒரு நெருங்கிய தொடர்புண்டு. விழாக்கள் கொண்டாடுவதன் முக்கிய நோக்கம் அந்நாட்களில் மனிதர்கள் கடவுளை வழிபட்டு இறையருள் பெறவேண்டும் என்பதேயாகும்.

“வழிபாடு” என்னும் சொல் வழிபடு என்ற அடிச் சொல்லிலிருந்து பிறந்து, வணக்கம், பூசனை என்ற பொருளைத் தருகிறது.[3]

### 4.2. விழாக்களின் வகைகள்:

சிவாகமங்கள் விதித்தபடி ஒரு கோயிலில் நாள், வாரம், பட்சம், மாதம் ஆகியவைகளில் விழாக்களும், ஆண்டிற்கு ஒருமுறை பிரம்மோற்சவமும் (பெருவிழா) நடைபெறுதல் வேண்டும். அந்த வகையில் ஆண்டு முழுவதும் விழாக்கள் நிகழும் கோயிலாக விளங்குவது காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலாகும். இக்கோயிலில் நிகழும் விழாக்கள் தனித்தன்மை வாய்ந்தவையாகும். கோயிலில் கொண்டாடப்படும் விழாக்களில் பலவகைகள் உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கதாக 1) விடியற்காலப் பூசை 2) காலைச் சந்திப் பூசை 3) உச்சிக் காலப் பூசை 4)மாலைக் காலப் பூசை 5) சாயங்காலப் பூசை 6)அர்த்தயாமப் பூசை என்று ஆறு கால நாள் வழிபாடுகளும், சித்திரை முதலான பன்னிரண்டு மாதங்களில் கொண்டாடப்படும் விழாக்கள் என்பதை சங்க இலக்கிய அகநானூறு எடுத்து உரைப்பது அறியற்பாலதாகும்.

### 4.2.1. அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் நாள் வழிபாடுகள்:

ஏகாம்பரநாதர் கோயிலில் காலம் தவறாது ஆறுகாலப் பூசைகள் நடைபெறுகின்றன. இவற்றை நித்தியப் பூசை என்பர். இத்திருக்கோயிலில் நாள்தோறும் பூசைகள் தொடங்கு வதற்கு முன்பே 'ஓம் சிவாயநம:' என்ற ரீங்கார ஒலியைக் கொண்ட சுப்ரபாதம் (துயில் உணர்த்தல்) பாடப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.[4]

#### 4.2.1.1. விடியற்கால பூசை:

சூரிய உதயத்திற்கு ஒன்றரை மணி நேரம் முன் ஆரம்பித்து சூரிய உதயத்தின் பொழுது முடிக்கும் பூசை விடியற்கால பூசையாகும். கடவுளைக் காலையில் வழிபட்டால் அனைத்துத் துன்பங்களும் விலகி இன்பம் பெருகும் என்பது ஆன்றோர் கூற்றாகும். அவ்வாறே காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலிலும் விடியற்காலப் பூசையைச் செய்யும் சிவாசாரியார் நீராடித் தம்முடைய நித்திய அனுட்டானத்தை முடித்துக் கொண்டு கையில் மலர்களை எடுத்துக்கொண்டு பள்ளியறைக்குச் சென்று மலர்களைச் சாத்தி, தூபம், தீபம், நைவேத்தியம் முதலியவற்றைச் செய்து ஏகாம்பரநாதரைச் சிவிகையில் ஏற்றி பிரகார வலம் வந்து கருவறையில் உள்ள மூல இலிங்கத்தில் சேர்ப்பர்; பின்பு மூல இலிங்கத்துக்கு அபிஷேகம், தீபாராதனை முதலியவற்றைச் செய்வர் என்பது அறியற்பாலதாகும்.[5] அப்பொழுது மாணிக்கவாசகர் அருளிய திருப்பள்ளியெழுச்சி பாடப்படுகிறது.

#### 4.2.1.2. கால சந்திபூசை:

சூரிய உதயத்திலிருந்து மூன்று மணி நேரத்துக்குப் பிறகு சிவபெருமான் சூரியனைத் தமது எட்டு மூர்த்தங்களில் ஒன்றாகக் கொண்டுள்ளதால் முதலில் சூரிய பூசை நடைபெறும். பின்னர் சிவபூசை ஆரம்பிக்கப்பட்டுப் பின்னர் அப்பூசையானது ஐந்து பிரகாரங்களில் அமைந்துள்ள

பரிவார தெய்வங்களையும் பூசித்து நித்திய அக்னிகாரியம், பலி பீடத்தில் பலி சமர்ப்பித்தல் முதலானவற்றுடன் காலசந்தி பூசை நிறைவு பெறுகிறது.

### 4.2.1.3. உச்சிக்கால பூசை:

காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் உச்சிக் காலப்பூசை தொன்று தொட்டு இன்று வரையிலும் தொண்டை மண்டல ஆதி சைவ வேளாள மரபினரால் செய்யப்பட்டு வருகிறது. இப்பூசையில் கலசநீர், பஞ்சகவ்வியம், பஞ்சாமிர்தம் முதலியவற்றோடு துவார பூசைகள் செய்து ஏகாம்பரநாதருக்கு அபிஷேகம் செய்கின்றனர். பின்னர் நைவேத்தியம் படைக்கப்பட்டு, ஓமம் வளர்க்கப்பட்டு பலி சமர்ப்பிக்கப்படுகிறது. பின்பு கோயிலின் நடை சாத்தப்படும்.

### 4.2.1.4. மாலைக் கால பூசை (பிரதோஷ கால வழிபாடு)

சூரியன் மறைவதற்கு ஒன்றரை மணி நேரம் முன்பு நடப்பது மாலைக்கால பூசையாகும். இப்பூசையில் அருள்மிகு நடராசர், அருள்மிகு ஏகாம்பரநாதர் ஆகியோர் தூப தீபங்களுடன் பூசிக்கப்படுவர்; பின்பு பஞ்சபுராணங்களான தேவாரம், திருவாசகம், திருப்பல்லாண்டு, திருவிசைப்பா, பெரியபுராணம் முதலியவற்றிலிருந்து பஞ்ச புராணப் பாடல்களைக் கோயில் ஓதுவார் பாடுவார். இத்தகையப் பாடல்கள் கேட்பவர் மனதை இறைவன்பால் மனமொன்றச் செய்வதாக அமையும். இதனைப் பிரதோஷகால வழிபாடு என்பர். இக்காலத்தில் சிவபெருமானை முப்பத்து முக்கோடி தேவர்களும் வந்து வணங்குவர். இக்காலத்தில் இறைவனை வணங்கினால் அத்தனைத் தேவர்களையும் வணங்கியது போலாகும். மாதத்திற்கு இருமுறை அதாவது அமாவாசைக்கு முன்பும், பௌர்ணமிக்கு முன்பும் வரும் பிரதோஷ வழிபாடு மிகவும் சிறந்ததாகும். அதிலும் சனிப்பிரதோஷம் மிகவும் சிறப்பானதாகக் கருதப்படுகிறது.

மிகப் பழங்காலந்தொட்டே இறைவனின் வழிபாடுகளின் போது பாடல்கள் பாடும் வழக்கம் இருந்துள்ளது. வேதங்களில் காணப்படும் மந்திரங்களாகவே அவை அமைந்திருக்கின்றது பிற்காலத்தில் சைவ சமயம் தழைக்கத் தோன்றிய நாயன்மார்கள் இயற்றிய பக்திப் பனுவல்கள் பாடப்படுகின்றன.

### 4.2.1.5. சாயங்கால பூசை:

இப்பூசையானது சூரியன் மேற்கில மறையும் வேளையில் எங்கும் அமைதி நிலவுகின்ற அழகான சூழலில் நடைபெறுகிறது. அருள்மிகு ஏகாம்பரநாதருக்கு அபிஷேகம் செய்து, நைவேத்தியம் படைக்கப்படுகிறது. பின்பு ஷோடஷோப சாரம் என்றழைக்கப்படும் பதினாறு வகையான பணிவிடைகள் செய்யப்படுகின்றன என்பது அறியற் பாலதாகும்.[6] 16 வகையான ஷோடஷோபசாரம் மற்றும் தீபங்களின் வகைகளைக் காணலாம். அவையாவன:

1. புஷ்ப தீபம், 2.நாக தீபம், 3. இடப தீபம், 4.விருட்ச தீபம், 5.அடுக்க தீபம், 6.புருஷாமிருக தீபம், 7.கும்ப தீபம், 8.ஆராத்திரகம், 9.நட்சத்திர தீபம், 10.கற்பூர தீபம், 11.திருநீறு உபசாரம், 12. தர்ப்பணம், 13. குடை, 14. கொடி, 15.சாமரம், 16. விசிறி

**சாயங்காலப் பூசையில் சிவபெருமானுக்குச் செய்யப்படும் பதினாறு உபசாரங்கள்:**

1. ஆவாகனம், 2. ஸ்தாபனம், 3. பாத்தியம்(திருவடிநீர்) 4.ஆமனம்(உண்நீர்) 5.அர்ச்சிவம்(குடிநீர்) 6.அபிஷேகம் (கலச நீராட்டு) 7.ஆடை, சந்தனம் முதலிய வாசனைப் பொருள்களைச் சாத்துதல், 8.பூஷ்பம் சாத்துதல், மலர் மாலைகள் அணிவித்தல், 9.தூபம், தீபம் ஆகியவை காட்டுதல், 10.நைவேத்தியம் படைத்தல், 11.பலி, 12. ஹோமம் செய்தல், 13.நித்தியயோத்சவம், 14. வாத்தியங்கள், 15.நடனம், 16. உத்வாசனம்

### 4.2.2.6. நள்ளிரவு பூசை அல்லது அர்த்தசாம பூசை:

இப்பூசை இரவு எட்டு மணியிலிருந்து எட்டரை மணிக்குள் நடைபெறுகிறது. திங்கட்கிழமை மற்றும் பிற விசேஷ நாட்களில் சில நிமிடங்கள் தாமதமாவது வழக்கம்.

ஏகாம்பரநாதருக்கு அபிஷேகமும், ஆராதனையும் நடைபெற்ற பின்னர் பள்ளியறைக்குப் பெருமானைச் சிவிகையில் எடுத்துச் செல்வர். இச்சமயத்தில் கைலாயத்தில் அந்தரதுந்துபிகள் முழங்குவது போன்ற இசைக்கருவிகள் ஒலிக்கப்படுகின்றன. இவற்றை கேட்பவர் மனம் சிவபெருமானுடனேயே ஒன்றிவிடும் தன்மை கொண்டதாகும். இவ்வேளையில் மாணிக்கவாசகரால் இயற்றப்பட்ட திருவாசகத்திலுள்ள "ஏகம்பத்துறை எந்தாய் போற்றி! பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி" என்ற போற்றித் திருஅகவல் வரிகள் பாடப்பட்டு வருவதை அறிந்துகொள்ள முடிகிறது.[7]

மேலே நடக்கிற பூசைகள் மட்டுமின்றி அருள்மிகு ஏகாம்பரநாதருக்கு பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை மகாபிரதோஷப் பூசையும் நடைபெறுகிறது. அவ்வேளையில் இடபவாகனதத்தில் ஏலவார்குழலியோடு ஏகாம்பரநாதர் அலங்காரக் கோலத்தில் கோயிலின் உள்பிரகாரத்தில் பவனி வருவார். நாள்தோறும் நடக்கும் பூசைகளோடு நைமித்திய, காமிய பூசைகளும் நடக்கின்றன. நைமித்தம் என்பது ஒரு செயலின் பொருட்டு செய்வது என்பது அறியற்பாலதாகும்.[8] காமியபூசை என்பது விருப்பத்தின் காரணமாக பயனை எதிர்பார்த்தோ அல்லது நமது பழம் வினைகளை நீக்குவதற்கோ செய்யப்படும் பூசை என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.[9] இவ்வாறு காஞ்சி அருள்மிகு ஏகாம்பர நாதர் கோயிலில் நித்திய, நைமித்திய, காமிய பூசைகளைத் தவறாமல் பண்டைக்காலம் தொட்டு வாழையடி வாழையாக நடைபெற்று வருவது அறியற்பாலதாகும்.

## 4.3. மாதத் திருவிழாக்கள்:

திருவிழாக்கள் சமயத் தொடர்பான சடங்குகள் என்பது மட்டுமின்றி கலைகளையும். வாணிகத்தையும் அபிவிருத்தி செய்ய முக்கியமானதாகத் திகழ்வதுடன் தேசிய ஒருமைப் பாட்டுக்கும் உறுதுணைபுரிகின்றன. இத்தகைய விழாக்கள் பன்னிரண்டு மாதமும் ஏகாம்பரநாதர் கோயிலில் நடைபெறுவதின் சிறப்பு இங்கு இயம்பப்படுகிறது.

### 4.3.1. சித்திரை மாதம்:

சித்திரை மாதம் தமிழர்களுக்குச் சிறப்புக்களை அளிக்கும் முதல் மாதமாகும். இம்மாதத்தில் சித்திரைத் திருவிழா என்ற பெயரிலேயே ஒரு மாபெரும் விழா தொன்று தொட்டு நடைபெறுகிறது. இம்மாத முதல் நாளில் பஞ்சாங்கம் படிக்கும் நிகழ்ச்சியை அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் நிர்வாகிகளே பொறுப்பேற்று நடத்திக் கொடுக்கின்றனர் என்பது அறியற்பாலதாகும்.[1] இம்மாதத்தில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் விடையாற்றி விழா, பாலூர்த் திருவிழா, நால்வர் பெருமக்கள் விழா ஆகிய விழாக்கள் நடைபெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

#### 4.3.1.1. விடையாற்றி விழா:

ஏகாம்பரநாதர் கோயிலில் சித்திரை மாதத்தில் விடையாற்றி விழா ஆறுநாட்கள் நடைபெறுகின்றன. இவ்விழாவானது ஒரு பரிகார விழாவாகக் கருதி கொண்டாடப் படுகிறது. அதாவது பங்குனி உத்திரத் திருவிழா பெரிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது. ஒரு பெரிய திருவிழாவை நடத்திய பிறகு அதற்கான பரிகார விழாவாக விடையாற்றி விழா கொண்டாடப்படுகிறது. மக்கள் தங்களுக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்கிக்கொள்ளும் பொருட்டு ஏகாம்பர நாதருக்கு விழாவினைச் செய்து வணங்குகின்றார்கள். இந்நாட்களில் ஏகாம்பரநாதருக்குச் சந்தனத் திருமுழுக்கும், விசேஷ அலங்காரங்களும் செய்யப்படுவதுண்டு. கடைசி நாள்

விழாவன்று ஏகாம்பரநாதரும், ஏலவார்குழலியும் புஷ்பப் பல்லக்கில் அமர்ந்து நான்கு ராஜ வீதிகளிலும் எழுந்தருளுவார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.3.1.2. பாலூர்த் திருவிழா:

சித்திரை மாதத்தில் நடைபெறும் மற்றொரு புகழ்மிக்க விழா பாலூர்த் திருவிழாவாகும். ஒவ்வொரு ஆண்டும் சித்திரை மாதம் தேய்பிறை பஞ்சமி திதியில் காஞ்சியின் கிழக்கே உள்ள ஊரான பாலூரில் வாழும் பெருமக்கள் ஏகாம்பரநாதரை வரவழைப்பார்கள். காஞ்சியிலிருந்து அருள்மிகு ஏகாம்பரநாதர் இரவு புறப்பட்டுப் பாலூர் கிராமத்திற்குச் செல்கிறார். அக்கிராமத்தைச் சுற்றிவந்த பிறகு பாலாற்றின் கரையில் அமைந்துள்ள மண்டபத்தில் எழுந்தருளுகிறார். இங்கு திருமுழுக்கு, ஒப்பனை, ஒளி வழிபாடு ஆகியவை நடந்த பின்னர் மாலையில் நாதசுர இசை முழங்க இரவு எட்டு மணியளவில் மண்டபத்தை விட்டுப் புறப்பட்டு ஆற்றுமணல் வெளியில் அருள்மிகு ஏகாம்பரநாதர் செல்கிறார். இவ்விழாவினை இவ்வூர்மக்கள் `பாலூர்த் திருவூரல் விழா` என் அழைக்கின்றனர். ஊரல் என்றால் நீருற்று ஆகும். ஏகாம்பரநாதர் இந்நீருற்றுப் பகுதிக்குச் செல்வதால் மக்கள் இவ்விழாவினைத் திருவூறல் விழா என்றே அழைப்பர்.

### 4.3.1.3. நால்வர் பெருமக்கள் விழா:

சைவசமய வளர்ச்சிக்கு அரும்பாடுபட்ட திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் ஆகிய நால்வருக்கும் அவரவர்க்குரிய காலத்தில் ஏகாம்பரநாதர் கோயிலில் விழாக்கள் நடைபெறுகின்றன. திருநாவுக்கரசர் முக்தியடைந்த நாளாகிய சதய நட்சத்திரத்தில் அவரது திருவுருவச் சிலைக்கு அபிஷேகம் செய்து வழிபாடு நிகழ்த்தப் பெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

"சித்திரைச் சதயம் அப்பர்; சிறந்தவை காசிமூலம்
அத்தரைப் பணிசம்பந்தர்; ஆனி மாமகத்தில் அந்த
முத்தமிழ் வாதவூரர், முதிய நல் ஆடிதன்னில்
சுத்தமாம் சுவாதிநாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்"

என்ற பாடலின் மூலம் நால்வர் பெருமக்கள் முக்தியடைந்த நாளில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் விழாக்கள் நடைபெறுகின்றன. அதேபோல் மற்ற நாயன்மார்களும் முக்தியடைந்த நாட்களில் அவர்களின் திருவுருவச் சிலைகளுக்கு அபிஷேக ஆராதனைகள் செய்யப்பட்டு நைவேத்தியம் படைக்கப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்க தாகும்.

### 4.3.2. வைகாசி மாத விழாக்கள்:

வைகாசி மாதத்தில் தெப்பத்திருவிழா, வைகாசி விசாகத் திருவிழா என இரண்டு திருவிழாக்கள் அருள்மிகு ஏகாம்பர நாதர் கோயிலில் நடைபெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

#### 4.3.2.1. தெப்பத் திருவிழா:

பிறவிக்கடலை நீந்தும் தோணிக்கு மீகாமனாகவும், அத்தோணியை உடையவனாகவும் அருள்மிகு ஏகாம்பர நாதரை இவ்விழாவானது சித்திரிக்கின்றது. வைகாசி மாதத்தில் வெந்தனலின் கொடுமையிலிருந்து தம்மை காத்துக் கொள்வதற்காக மக்கள் விழா எடுக்கின்றனர் என்பதை

"கடுங்கதிர் திருகலின் நடுங்கஞர் எய்தி
ஆறு செல் வருத்தத்துச் சீறடி சிவப்ப
நறும்பல் கூந்தல் குறும்பல உயிர்த்தாங்கு
ஐயை கோட்டத்து எய்யா ஒருசிறை
வந்து நோய் தணிய இருந்தனர்".

என்ற சிலப்பதிகாரப் பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[13]

அதன் கொடுமையைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் மக்கள் அதிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ளும் பொருட்டு கடவுளிடம் விண்ணப்பிப்பதற்காக வேனில் விழாவை நடத்தியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலில் தெப்பத்திருவிழா மூன்று நாட்கள் சர்வதீர்த்தக்குளத்தில் நடைபெறுகிறது. இவ்விழா கடவுளின் நட்சத்திரத்திலோ, மன்னனின் நடசத்திரத்திலோ நடத்தியதை ஸ்ரீ பிரசன்ன ஸம்ஹிதை என்ற நூலின் மூலமாக அறிந்துகொள்ள முடிகிறது.[13]

அருள்மிகு ஏகாம்பரநாதரைத் தெப்பத்தில் எழுந்தருளச் செய்து தெப்பக்குளத்தைச் சுற்றிவரச் செய்வர். நீரில் வாழும் அனைத்து உயிரினங்களுக்கும் அருள் பாலிக்கிறார் என்பதே இவ்விழாவின் தத்துவமாகக் கருதப்படுகிறது. அருள்மிகு ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் மின் விளக்குகளாலும், மலர்களாலும் அலங்கரிக்கப்பட்ட தெப்பத்தில் மேளவாத் தியங்கள் முழங்க தினமும் மூன்றுமுறை வலம் வருவர்.

#### 4.3.2.2. விசாகத் திருவிழா:

வைகாசி மாத விசாக நட்சத்திரத்தில் திங்கள் சார்ந்த நிறைமதி நாளில் விசாகத் திருவிழா கொண்டாடப்படுகிறது. அந்நாளில் ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள நிலாத்துண்டப் பெருமாளுக்கு அபிஷேக ஆராதனைகள் செய்யப்பட்டு வழிபாடு நடத்தப்படுகின்றன.

### 4.3.3. ஆனிமாத விழா:

ஆனி மாதத்தில் ஆனி திருமஞ்சன விழா சிறப்பானதாகும்.

#### 4.3.3.1. ஆனி திருமஞ்சனம்:

ஆனித் திங்கள் உத்திரம் நட்சத்திரத்திற்கு முன்னதாக கொடியேற்றி திருவிழா கோயிலில் நடைபெறுகிறது. ஏகாம்பர நாதரும் ஏலவார்குழலியும் அலங்காரம் செய்யப்பட்டு

கோயிலின் உட்புறத்திலுள்ள சபாநாதர் மண்டபத்தில் எழுந்தருளச் செய்து வழிபாடு செய்வார்கள். இம்மாதத்தில் மகம் நட்சத்திரத்தில் மாணிக்கவாசகர் முக்தியடைந்த நாளாதலால் அன்றைய தினம் மாணிக்கவாசகர் பஞ்ச மூர்த்திகளுடன் நான்கு ராஜ வீதிகளிலும் உலா வருவார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[14]

### 4.3.4. ஆடிமாத விழா:

ஆடி மாதத்தில் பயிரிடப்படும் பயிர்களுக்கான விதை ஆனி மாதக் கடைசியில் விதைப்பது போல ஆடிமாதத்தில் விழாக்கள் அதிக அளவில் கொண்டாடப்படுகின்றன. ஆடிமாதம் முழுமையும் பண்டிகைகள் கொண்டாடப் படுகின்றன.

''இன்றோ திருவாடிப்பூரம் - எமக்காகவன்றோ

...........................................................................

ஆழ்வார் திருமகளாராய்'' என்ற மணவாள மாமுனிகள் கூற்றின்படி ஆண்டாளுடைய வைபவமே ஆடி மாதமாகும். ஆடி பிறந்தால் பண்டிகைகளின் வாயில் திறக்கப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[15] அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் திருப்பவித்ரோற்சவம், ஆடிப்பூர விழா ஆகிய இருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

#### 4.3.4.1. திருப்பவித்ரோற்சவ விழா:

பவித்திரம் என்பது பருத்தியாலோ, பட்டுநூலினாலோ தொடுக்கப்பட்ட மாலை என்பதாகும். இப்பவித்திரமாலையை கோயிலிலுள்ள சிலைகளுக்கு அணிவிப்பார்கள். இவ்விழா பழங்காலத்தில் பிரம்மாவால் தொடங்கப்பட்டதாக ஆன்றோர் குறிப்பிடுவர். பூனூல் அணியும் விழா எனவும் அழைக்கப் படுகிறது. இவ்விழாவின் நோக்கம் தின வழிபாட்டில் குறையேதும் நேரிட்டு இருந்தால் அதனைப் போக்கும் பொருட்டுச் செய்யப்படுவதால் இதனைத் தூய்மைப்படுத்தும்

விழா எனவும் அழைப்பர். அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் ஒருவார காலம் இவ்விழா நடைபெறுகிறது. இந்நாட்களில் ஏகாம்பரநாதருக்கும், ஏலவார் குழலிக்கும் பட்டாடைகளாலானா மாலைகளில் மஞ்சள் நீர் தெளித்து அலங்காரம் செய்யப்படுகின்றன. தினமும் கோயிலில் வேள்விச் சடங்கு செய்வது குறிப்பிடத்தக்கதாகும்.[16]

### 4.3.4.2. ஆடிப்பூர விழா:

ஏகாம்பரநாதருக்கும், ஏலவார்குழலிக்கும் ஆடிப் பூர நட்சத்திரம் கூடிய இரவில் சிறப்பு அபிஷேக ஆராதனைச் செய்யப்பட்டு மக்கள் வழிபடுகின்றனர். இவ்வகை அபிஷேகம் மக்களின் மனதில் பக்திப் பெருக்கை அதிகரிக்கச் செய்கிறது.

### 4.3.5. ஆவணி மாத விழா:

பிட்டுக்கு மண் சுமந்த திருவிழாவும், விநாயகர் சதுர்த்தி விழா ஆகிய இரு விழாக்கள் கொண்டாடப்படுகிறது.

### 4.3.5.1. பிட்டுக்கு மண் சுமந்த திருவிழா:

நால்வர் பெருமக்களிள் ஒருவரான வாதவூரர் எனப்படும் மாணிக்கவாசகரை மதுரை மன்னனான அரிமர்த்தன பாண்டியன் 'தென்னவன் பிரமராயர்' என்ற பட்டத்தை அவருக்கு வழங்கி தனது முதலமைச்சராக நியமித்தார். ஒரு தினம் அரசன் மாணிக்கவாசகரிடம் பொருள் கொடுத்து சோழநாடு சென்று குதிரைகள் வாங்கி வரும்படி அனுப்பினார். வழியில் திருப்பெருந்துறை என்னுமிடத்தில் சிவபெருமானே ஞானாசிரியர் உருவத்தில் மாணவர்களுக்கு அருளுபதேசம் செய்து கொண்டிருந்தார். இறை அன்பு அதிகமாகப் பெற்ற வாசகர் அழகாகப் பாடினார். இதைக் கண்ட ஞானாசிரியர் 'மாணிக்கவாசகர்' என்ற சிறப்புப் பெயரைக் கொடுத்து மறைந்துவிட்டார். அரசன் மாணிக்க வாசகர் திரும்பி வராததால் கடிதம் எழுதினான். அதற்கு வாதவூரார் ஆவணி மூலநாளன்று குதிரைகள் மதுரை வந்து சேரும் என பதில் கடிதம் எழுதி அனுப்பினார். அவ்வாறு

நடக்காததால் மாணிக்கவாசகரை மன்னன் சிறையில் அடைத்தான். இறைவனே குதிரை விற்பவனைப்போல் மன்னனிடம் வந்து கயிறு மாற்றிக் கொடுத்தான். அன்றைய இரவே அனைத்துக் குதிரைகளும் நரிகளாக மாறிவிட்டது. மன்னன் மீண்டும் மாணிக்கவாசகரைச் சிறையில் அடைத்தான். இதனைக் கண்ட சிவபெருமான் வைகை ஆற்றில் அதிகம் வெள்ளம் வரச்செய்து பயமுறுத்தினார். வெள்ளப்பெருக்கைத் தடுக்க அணை கட்டும் பொருட்டு வீட்டுக்கு ஓர் ஆள் வரவேண்டுமென்பது மன்னனின் உத்தரவாக இருந்தது. அந்நிலையில் 'வந்தி' என்னும் பாட்டி கூலி ஆள் கிடைக்காமல் துயரம் கொண்டார். அதனால் சிவபெருமானே கூலியாளாக வந்து பிட்டுக்காக மண் சுமந்து அருளினார். இதுவே பிட்டுக்கு மண் சுமந்த விழாவாகக் கொண்டாடப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.[17]

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் ஆவணி மாதம் மூலம் நட்சத்திரத்தில் பிட்டுக்கு மண் சுமந்த திருவிழா கொண்டாடப்படுகிறது. அன்றைய தினம் ஏகாம்பரநாதருக்கும் ஏலவார்குழலிக்கும் சிறப்பு அபிஷேகம் செய்து அலங்காரம் செய்யப்பட்டு வீதியுலா செல்வது குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.3.5.2. விநாயக சதுர்த்தி விழா:

விநாயகர் அவதரித்த தினம் ஆவணி கிருஷ்ணபட்ச சதுர்த்தியாகும். அந்நாளைக் கொண்டாடும் வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் இவ்விழாவினைக் கொண்டாடுகின்றனர். அன்றைய தினம் மண்ணால் விநாயகர் திருவுருவம் செய்து மக்கள் வணங்குகிறார்கள். விநாயகர் எடுத்த காரியங்களில் வெற்றி அளிப்பவராதலால் இவர் குறிப்பிடத்தக்கவராவர். விநாயகரைத் தேவர்கள் வழிபட்டு சகல சித்திகளையும் அடைந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[18] விநாயகர் உருவத்துக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் செய்யப்பட்டு வெள்ளி பெருச்சாளி வாகனத்தில் நான்கு இராஜ வீதிகளிலும் எழுந்தருளச் செய்வர்.

### 4.3.6. புரட்டாசி மாத விழா:

இம்மாதம் நவராத்திரி விழா சிறந்ததாகும்.

### 4.3.6.1. நவராத்திரி விழா:

இவ்விழா அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் புரட்டாசி மாதத்தில் அமாவாசையில் தொடங்கி ஒன்பது நாட்கள் தொடர்ந்து விழா நடைபெறும். நவராத்திரி என்பது ஒன்பது இரவுகள் சேர்ந்து வருவது ஆகும். இந்நாட்களில் மக்களிடையே வீரவுணர்வு பெருகும் பொருட்டு முதல் மூன்று நாட்கள் அன்னையைத் துர்க்கையாக அலங்காரம் செய்து வழிபாடு செய்வார்கள். அடுத்துவரும் மூன்று நாட்களில் மக்களிடையே செல்வ வளம் பெருகும் பொருட்டு அன்னையை மகாலட்சுமியாக அலங்காரம் செய்து வழிபாடு செய்வார்கள். இறுதி மூன்று நாட்களில் மக்களிடையே கல்விச் செல்வம் பெருகும் பொருட்டு அன்னையை கலைமகள் அலங்காரத்தில் வழிபாடு செய்வார்கள். இவ்வாறு செய்வதால் இவ்விழா துர்க்கா, இலட்சுமி, சரஸ்வதி பூசை என்றும் அழைக்கப்படுகிறது.

பத்தாவது நாளில் ஏகாம்பரநாதரை குதிரை வாகனத்தில் எழுந்தருளச் செய்வார்கள். தமிழ் நாட்டில் நாயக்க மன்னர்களின் ஆட்சியில் இவ்விழா சிறப்படைந்தது என்பது அறியற்பாலதாகும்.[19]

### 4.3.7. ஐப்பசி மாத விழா:

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் ஐப்பசி மாதத்தில் தீபாவளி மற்றும் கந்த சஷ்டி விழா ஆகிய இருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

### 4.3.7.1. தீபாவளி விழா:

கிருஷ்ண பரமாத்மா நரகாசூரனை வதை செய்த நாள் தீபாவளி என்று கொண்டாடப்படுகிறது. ஐப்பசி மாதம் கிருட்டின பட்சத்தில் இப்பண்டிகை கொண்டாடப்படுகிறது. தமிழகத்தில்

கார்த்திகை முழுமதி அன்று விளக்குகளை வரிசையாக வைத்து ஒளிவடிவில் கடவுளை வணங்குதல் போலவே வடஇந்திய தமிழ் மக்கள் ஐப்பசி மாதத்தில் விளக்குகளை வரிசையாக வைத்து முழுமுதற்கடவுளுக்கு விழா கொண்டாடினார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[20] குறிப்பாக ஏகாம்பரநாதர் கோயிலில் சிறப்பு அபிஷேகம் செய்து, அலங்காரம் கொண்டு மக்கள் வழிபாட்டுக்கு இறைவனை எழுந்தருளப்பண்ணுவர்.

### 4.3.7.2. கந்தசஷ்டி விழா:

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் வளர்பிறையில் பிரதமையில் தொடங்கி சஷ்டி வரையிலுள்ள ஆறு நாட்கள் முருகப்பெருமானுக்கு விழா நடைபெறுகிறது. அந்நாட்களில் மாவடிக்கந்தர் சந்நிதி எதிரே சூரபத்மன் சிலையை வைத்து முருகப்பெருமான் அம்பு எய்யும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. இதனை சூரசம்காரம் என்றும் அழைப்பர்.

### 4.3.8. கார்த்திகைத் திருவிழா:

கார்த்திகை மாதத்தில் சோமவார விழா, கார்த்திகை விழா ஆகிய இரு விழாக்கள் கொண்டாடப்படுகிறது.

### 4.3.8.1. சோமவார விழா, இலட்ச தீபப் பெருவிழா:

கார்த்திகை மாதம் திங்கட்கிழமை ஏகாம்பரநாதர் கோயிலில் சோமவாரம் கொண்டாடப்படுகிறது. இந்நாளில் மக்கள் அதிக அளவில் விளக்குகள் வைத்து ஏகாம்பர நாதரை வழிபடுவர். ஒவ்வொரு சோமவாரத்தன்றும் சொற்பொழிவு கோயிலினுள்ளே நடைபெறுகிறது. கடைசி சோமவாரத்தன்று இலட்சதீபப் பெருவிழா கொண்டாடப்பட்டு வருகிறது. அன்றைய தினம் ஏகாம்பரநாதருக்கும் ஏலவார்குழாலிக்கும் விசேஷ அலங்காரங்கள் செய்யப் பட்டிருக்கும். மக்கள் அதிக அளவில் வந்து தீபங்களை வரிசையாக, பல்வேறு வடிவங்களைக் கொண்ட வகையில் ஏற்றி வணங்குவர். சொற்பொழிவினைக் கேட்டு பரவசம் அடைவர்.

### 4.3.8.2. கார்த்திகை விழா:

கார்த்திகை மாதத்தில் கிருத்திகையன்று மாலை நேரத்தில் விளக்கு வைத்து விழா கொண்டாடுவர். இந்நாளில் ஏகாம்பரநாதர், ஏலவார்குழலி, விநாயகர், சுப்பிரமணியர், சண்டேசுவரர் ஆகிய பஞ்சமூர்த்திகள் நான்கு ராஜ வீதிகளிலும் எழுந்தருளுவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[21] இவ்விழா இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலிருந்து நடைபெற்று வருவதை

> "மழைகால் நீங்கியமாக விசும்பிற்
> ........................................................
> பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
> விழவுடன் அயர வருகதில்லம்ம"

என்ற அகநானூறு பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

'கார்த்திகைத் திங்களில் கார்த்திகை விளக்கு' என்ற தொல்காப்பிய நூற்பாவின் மூலமும் கார்த்திகை விழா பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.[22]

### 4.3.9. மார்கழி மாத விழா:

மார்கழி மாதத்தில் திருவாதிரை விழா, மாணிக்கவாசகர் பல்லக்கு உதய விழா ஆகிய இருவிழாக்கள் நடைபெறுகிறது.

### 4.3.9.1. திருவாதிரை திருவிழா:

மார்கழி மாதம் தெய்வவழிபாடுகளுக்கேற்ற மாதம். நட்சத்திரங்களுள் சிவபெருமானுக்குரியது திருவாதிரை ஆகும். நிறைவான திதியான பௌர்ணமியும் கூடி வரும் நாளே திருவாதிரைத் திருவிழாவாகும். இரண்டாயிரம் ஆண்டுகளாக சிவபெருமானுக்குரிய பெரிய விழாவாகக் கொண்டாடப்பட்டு வருவதை

> "கனைக்கும் அதிர்குரல்கார் வானம் நீங்கப்
> ....................................................................

.........................................................................

பூநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப''

என்ற பரிபாடல் உணர்த்துகிறது.[23]

ஆதிரை நாள் சிவனுக்குரிய நாளாகவும், சிவபெருமான் ஆதிரை முதல்வன் என்றும், அவரைப் பண்டைக் காலத் தமிழ் மக்கள் போற்றினர் என்பதும் அறிந்துகொள்ள முடிகிறது.[24] பழங்காலத்தில் இத்திருவிழா கொண்டாடு வதற்காக 600 கலம் (12 மரக்கால்) நெல் வழங்கப்பட்டு வந்தது குறிப்பிடத் தக்கதாகும்.[25] இந்நாளில் மறைகளில் சிறந்த அந்தணருக்கு திருவமுது வழங்குவதற்காக துளை நிறைப் பொன்னும், மதுராந்தகன் மாடை ஆகிய காசுகளை அளித்தது குறிப்பிடத்தக்கதாகும்.[26] அந்த வகையில் ஏகாம்பரநாதர் கோயிலில் திருவாதிரை விழா நாளன்று நடராசப் பெருமானுக்கும், சிவகாமசுந்தரிக்கும் அபிடேக ஆராதனைகள் செய்யப்படும். மேலும் நடராசரின் செப்புத் திருமேனி மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டு நான்கு இராஜ வீதிகளிலும் வீதியுலா எழுந்தருளுவர். மக்கள் அன்றைய தினம் அரிசிமாவினால் செய்யப்பட்ட 'உருவாகளி' என்ற உணவினைச் செய்து ஏகாம்பரநாதருக்குப் படையலிட்ட பின் தாமும் உட்கொண்டு அனைவருக்கும் பகிர்ந்தளிப்பர். இறைவனுக்கு நெய்காப்பும் சிற்சில இடங்களில் செய்வர் என்பது அறியற்பாலதாகும்.[27]

### 4.3.9.2. மாணிக்கவாசகர் பல்லக்கு உதய விழா:

இவ்விழா பத்து நாட்கள் கொண்டாடப்படுகிறது. மாணிக்கவாசகரின் செப்புத்திருமேனியை அபிஷேகம் செய்து அலங்கரிக்கப்பட்ட பல்லக்கில் வீதியுலா அழைத்துச் செல்வர். அப்பொழுது அவரால் அருளிச் செய்யப்பட்ட திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் ஓதப்படும். ஏழு இடங்களைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொரு இடத்திலேயும் பல்லக்கினை நிறுத்தி ஏகாம்பரநாதர் மீது பாடிய பாடல்களை ஓதுவார்கள். முதலில்

கோயிலின் வெளிக்கோபுர வாசல், கங்கை கொண்டான் மண்டபம், பூக்கடைச் சத்திரம், கச்சபேஸ்வரர் ஆலயம் முதலிய இடங்களில் இந்நிகழ்ச்சி நடைபெறும். இதேபோல் பத்துநாட்கள் நடைபெறும். பிற நேரங்களில் மாணிக்க வாசகரின் செப்புத் திருமேனி நடராசர், சிவகாம சுந்தரி திருமேனிகளுக்கருகில் மக்கள் வணங்குவதற்காக வைக்கப் பட்டிருக்கும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.3.10. உத்தராயணத் திருவிழா:

சிவன் கோயில்களில் சங்கராந்தி, தைப்பூசம், சிவராத்திரி, சித்திரை விஷு, கார்த்திகை திருநாள் ஆகிய நாட்களிலும், கிரகணங்கள் நிகழ்ந்த நாட்களிலும் விழா எடுப்பது அறியற்பாலதாகும்.[28] உத்தராயணம் என்பது சூரியன் தென்திசையிலிருந்து வடதிசை நோக்கிப் பயணம் தொடங்கும் நாளாகக் கருதப்படுகிறது. தை மாதத்தில் உத்தராயணச் சிறப்பு எனும் விழா கோயிலில் நிகழ்த்தப்பட்டதையும், அவ்விழாவில் பழுவூரைச் சார்ந்த அழகன் ஞானசம்பந்தன் என்பவன் கொடையாகப் பொற்காசு அளித்ததை திருவொற்றியூர்க் கல்வெட்டு மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[29]

தைத்திங்களில் தற்போது தமிழகத்தில் பொங்கல் திருவிழா கொண்டாடப்படுகிறது. அவ்விழாவை மக்கள் தங்களுடைய உழைப்பின் பலனை அறுவடை செய்து மகிழ்ச்சியடையச் செய்யும் நாளாகக் கொண்டாடுகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவ்விழாவிற்குப் புதியீடுவிழா என்ற பெயர் காணப்படுகிறது. புதியீடு என்பதற்கு அவ்வாண்டின் 'முதல் அறுவடை' என்பது பொருளாகும்.

#### 4.3.10.1. தைப்பூசத் தெப்ப விழா:

ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு நட்சத்திரம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. அந்த நட்சத்திரமும், பௌர்ணமி திதியும் இணைந்து ஒரே நாளில்

வருவது குறிப்பிடத்தக்கதாகும். உதாரணமாக வைகாசி விசாகம், ஆடிப்பூரம், ஆவணி மூலம், மார்கழி திருவாதிரை நட்சத்திரம் போன்று தை மாதத்திற்கு பூச நட்சத்திரம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. அந்த வகையில் ஏகாம்பரநாதர் கோயிலில் தைப்பூசத்தன்று அருள்மிகு ஏகாமபரநாதரும் ஏலவார்குழலியும் இடபவாகனத்தில் அமர்ந்து காலையிலேயே இரயில்வே கேட் அருகிலுள்ள வாழைத் தோட்டத்துக்குச் செல்வார்கள். அங்கே மண்டபப்படியும், வழிபாடும் முடிந்தபிறகு இரவு கோயிலுக்குத் திரும்புவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மேலும் இம்மாதத்தில் சிவகங்கைத் தீர்த்தத்தில் மூன்று நாட்கள் தெப்பவிழா நடைபெறும். ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் மலர்களாலும், வண்ண மின்விளக்கு களாலும் அலங்கரிக்கப்பட்டு தெப்பத்தில் அமர்ந்து குளத்தினை மூன்று சுற்றுகள் சுற்றி வருவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.3.10.2. சூரியனின் ஈசுவர வழிபாடு:

தை மாதம் ரதசப்தமியன்று ஏகாம்பரநாதரின் மீது சூரியன் தன் கிரணக்கதிர்களை அவர்மேல்படுமாறு செய்து வழிபாடு செய்வார். இதனைச் சூரியனின் ஈசுவர வழிபாடு என்பர். அதாவது வெளிப்புறத்தில் அமைந்துள்ள பெரிய நந்திக்கு அருகிலுள்ள மண்டபத்தின் துவாரத்தின் வழியே சூரிய ஒளி ஏகாம்பரநாதர் மீது விழும். இது மாபெரும் அரிய காட்சியாகும். மக்கள் பக்தி பரவசத்தோடு இதனைக் கண்ணுற்று வணங்குவது சிறப்புடையதாகும்.

### 4.3.11. மாசிமாத விழா:

மாசி மாதத்தில் மகம் நட்சத்திரம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் தவனவிழா, மாசி மகவிழா, சிவராத்திரி விழா, சுந்தரமூர்த்தி நாயனார் இடக்கண் பார்வை பெற்ற உற்சவம் ஆகிய நான்கு விழாக்கள் நடைபெறுகிறது.

### 4.3.11.1. தவன விழா:

தவனம் என்பது ஒருவகை மரமாகும். இம்மரங்கள் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் நந்தவனத்தில் அதிக அளவில் இருந்துள்ளது. மரத்துக்கும் உயிருள்ளதால் அவற்றிற்கும் அருள் பாலிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் இவ்விழா கொண்டாடப்படுகிறது. அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் மாசி மாத புனர்பூச நட்சத்திரத்தில் மூன்று நாட்கள் தவன விழா நடைபெறுகிறது. இந்நாட்களில் ஏகாம்பரநாதருக்கும் ஏலவார்குழலிக்கும் தவன மரத்தின் இலைகளால் அலங்காரம் செய்து தவன மண்டபத்தில் வீற்றிருந்து அருள்பாலிப்பார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.3.11.2. மாசி மகவிழா:

முதலாம் இராசேந்திரன் காலத்தில் மாசி மகவிழா சிறப்பாக கோயில்களில் கொண்டாட நெல் அளித்துள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.[30] ஏகாம்பரநாதர் கோயிலிலும் இவ்விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.[31]

### 4.3.11.3. சிவராத்திரி விழா:

மாசிமகம் கிருஷ்ணபட்ச சதுர்த்தசி அன்று சிவராத்திரி விழா கொண்டாடப்படுகிறது. இந்நாளன்று ஏகாம்பரநாதருக்கு தினமும் நடைபெறும் ஆறுகால பூசைகளோடு இரவு நேரத்தில் நான்கு கால பூசைகளும், அர்ச்சனைகளும் நடைபெறும். பொழுது புலர்ந்த பின்பு இடபவாகனத்தில் ஏகாம்பரநாதர் வீதியுலா வருவார். சிவபெருமான் வேடனாக உருமாற்றம் பெற்று பிறிதொரு வேடுவனைச் சோதித்து கடைசியில் அவனுக்குக் காட்சி தந்ததைப் புலப்படுத்தும் ''வேடநாடகன்'' என்னும் நாடகம் சிவராத்திரியன்று வெகு விமரிசையாக தமிழ்நாட்டின் பல இடங்களில் நிகழ்த்தப்பட்டு வருகிறது என்பது சிறப்புடையதாகும்.

### 4.3.II.4. சுந்தரமூர்த்தி நாயனார் இடக்கண் பார்வை பெற்ற உற்சவம்.

சமயக் குரவர்களில் மூன்றாமவரான சுந்தரமூர்த்தி நாயனார் தம் முதல் மனைவியான பரவையாரை நினைத்து திருவாரூருக்குச் செல்லமாட்டேன் என்று தம் இரண்டாம் மனைவியான சங்கலியாருடன் திருவொற்றியூரில் வாழ்ந்து வந்தார். அதற்காகச் சத்தியம் செய்து கொடுத்திருந்தார்; ஆனால், திருவாரூரில் கோயில் கொண்டுள்ள வீதிவிடங்கப் பெருமான் மீது பக்தி கொண்டு அவரைக் காண்பதற்கு புறப்பட்டார். அவர் செய்த சத்தியத்தை மீறவே இரண்டு கண்களும் பார்வை இல்லாமல் போனது. இதனால் வருத்த முற்ற அவர் திருக்கழுக்குன்றத்திலுள்ள இறைவனை வணங்கி ஊன்றுகோல் பெற்று பல தலங்களையும் தரிசித்த பின்பு, காஞ்சிபுரம் வந்து ஏகாம்பரநாதரை வணங்கினார். அந்நிலையில் ஏகாம்பரநாதர் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு இடது கண் பார்வையை மீண்டும் அளித்து தமது திருவுருவத்தை அவர் காணுமாறு செய்தார். அப்பொழுது ஏற்பட்ட பரவசத்தால் சுந்தரர்

> "ஆலந்தான் உகந்து அமுதுசெய்தானை
>
> ............................................................
>
> காணக்கண் அடியேன் பெற்றவாறே"

என்ற பாடலைப் பாடியது அறியற்பாலதாகும்.[32] இந்நிகழ்ச்சியை வெளிப்படுத்தும் விதமாக ஏகாம்பரநாதர் கோயிலில் சுந்தரமூர்த்தி நாயனார் திருவுருவச் சிலைக்கு அபிஷேக அலங்காரங்கள் செய்யப்படுகிறது. அதேபோல் ஏகாம்பரநாதருக்கும் ஏலவார்குழலிக்கும் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.3.II.5. பங்குனி உத்திர விழா:

பங்குனி மாதம் நடைபெறும் விழாக்களில் உத்திர நட்சத்திரம் அன்று நடைபெறும் விழா மிகவும் முக்கியமான

தாகும். இம்மாதத்தில் திருமணங்கள் அதிக அளவில் நிகழும்; மல்லிகை மலர் பூத்துக் குலுங்கும்; மாம்பூவின் வாசனையும் அதிலே தோன்றும்; மாம்பிஞ்சுகளின் வாசனையும்; வேப்பம் பூ பூத்துக்குலுங்கும் மாதமாகும்; அதேபோல் வேரிலிருந்து கிளை வரை காய்த்துத் தொங்கும் பலாவிற்கு உரிய மாதமும் இம்மாதமாகும். குளிர்காலம் மறைந்து வசந்தக் காலத்தின் வருகையைப் பறை சாற்றும் மாதமும் பங்குனியாகும்; இம்மாதத்தில் வரும் உத்திர நட்சத்திரம் கோயில்களிலும், வீடுகளிலும் மிகவும் சிறப்புடன் கொண்டாடுவார்கள்.

அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் இவ்விழாவினைப் பதினான்கு நாட்கள் விமரிசையுடன் கொண்டாடுகின்றார்கள்.

| நாள் | காலை | இரவு |
|---|---|---|
| | ........ | விநாயகர் உற்சவம் |
| 1. | கொடியேற்றம் | சிம்மம், கிளி வாகனம் |
| 2. | சூரியப்பிரபை | சந்திரப்பிரபை அன்ன வாகனம் |
| 3. | பூதவாகனம் | சின்னகாஞ்சிபுரம் எழுந்தருளி ஏசல் |
| 4. | நாகவாகனம் | வெள்ளி இடபவாகனம் |
| 5. | வெள்ளி அதிகார நந்திசேவை | கைலாச பீட இராவணேச்வர வாகனம் |
| 6. | அறுபத்து மூவர் | வெள்ளித்தேர்(மாபெரும் உற்சவம்) |
| 7. | ............. | மரத்தேர் |
| 8. | ஆறுமுகசாமி எடுப்புத் தேர் மாலை பிட்சாடனர் | குதிரை வாகனம் |
| 9. | ஆள்மேல் பல்லக்கு | வெள்ளி மாவடிசேவை |
| 10. | சபாநாதர் தரிசனம் அம்பிகை ஒக்கப்பிறந்தான் குளத்திற்கு எழுந்தருளல் | பங்குனி உத்திரம் திருக்கல்யாணம் |

| | | |
|---|---|---|
| 11. | கந்தபொடி வசந்தம் | புண்ணியகோடி விமானத் திருவூடல் சேவை |
| 12. | புருடாமிருக வாகனம் | பஞ்சமூர்த்திகள் உலா |
| 13. | தீர்த்தவாரி (சர்வதீர்த்தகுளம்) | யாவை வாகனம் |
| 14. | கொடியிறக்கம் | திருமுறைப் பெருவிழா |

இவ்விழாவின் முக்கிய நிகழ்ச்சியாக கொடியேற்றுதல், வெள்ளி அதிகார நந்தி சேவை, அறுபத்து மூன்று நாயன்மார்கள் உற்சவம், வெள்ளித்தேர், வெள்ளி மாவடி முதலான திருவிழாக்கள் சிறப்புடையதாகும். இத்திரு விழாவினால் உலகத்து உயிர்கள் சிவஞானம் பெற்று மோட்சத்தை அடைகின்றன என்ற நம்பிக்கை மக்களிடம் நிலவுவது குறிப்பிடத்தக்கதாகம்.[33] 'பலி விழாப்பாடல் செய் பங்குனி உத்திரநாள் ஒலி விழா' என்ற தேவாரப்பாடல் மூலமும் பங்குனி உத்திரவிழாவின் சிறப்பு அறியற்பால தாகும்.[34]

**கொடியேற்றம்:**

கொடியேற்றும் விழா ஏகாம்பரநாதர் கோயிலில் காலையில் நடைபெறுகிறது. கொடி மரத்திற்குரிய கடவுள் சிவபெருமானாவார். கொடிமரமே அமைப்பில் சிவலிங்கத் திருமேனியை ஒத்து திகழ்கின்றது. ஆகவே, இம்மரம் சதாசிவரையும் அவருடைய தொழில்களையும் உணர்த்துகிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[35] இடபதேவர் உருவத்தை கொடித்துணியில் எழுதி பூசைகள் புரிந்து தர்ப்பைக் கயிற்றால் கட்டிமரத்தின் உச்சியில் ஏற்றுவது கொடியேற்ற நிகழ்ச்சியாகும். இடபதேவர் ஆன்மாவையும், தர்ப்பைக்கயிறு பாசமாகிய மாயையையும் குறிப்பிடுவது ஆகும். மேலே உச்சியில் உயிர் சிவத்துடன் கலந்து நிற்பதை உணர்த்துவது அறியற்பால தாகும்.[36]

கொடியேற்றிய பிறகு ஏகாம்பரநாதரும் ஏலவார் குழலியும் பவழக்கால் தாங்கியில் நான்கு இராசவீதிகளிலும் வீதியுலா செல்வர். இக்கோயிலுள்ள வாகனங்களின் பார்வை நேர்கொண்ட நிலையிலும், ஏகாம்பரநாதரின் பார்வையும் நேர்கொண்ட நிலையிலும் அமைந்துள்ளது சிறப்பாகும்.

**முதல் நாள் விழா:**

மாயை அனைத்துக்கும் மூலகாரணமாக உள்ளதை உணர்த்தி உலகத்து உயிர்களை அம்மாயையிலிருந்து தோற்றுவிக்கும் படைப்புத் தொழிலை உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[37]

முதல் நாள் இரவில் ஏகாம்பரநாதர் சிம்மவாகனத்திலும், ஏலவார்குழலி கிளி வாகனத்திலும் வீதியுலா வருவர்.

**விழாவின் பயன்:**

உயிரானது பிரகிருதி மாயைவிட்டு அகலுதல் இதன் பயனாகும்.

**இரண்டாம் நாள் விழா:**

காலையில் ஏகாம்பரநாதர் சூரியப் பிரபையில் அமர்ந்து வீதியுலா வருவார். ஏகாம்பரநாதர் உயிர்களுக்குப் பேரொளியாய் நின்று ஞானத்தைத் தருவதைக் குறிப்பிடுவது ஆகும். அதாவது காணும் உயிர்களுக்கு வழிகாட்டியாகிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்

இரவில் சந்திரப் பிரபையில் ஏகாம்பரநாதரும், அன்ன வாகனத்தில் ஏலவார்குழலியும் வீதியுலா வருவார்கள். சந்திரன் குளிர்ச்சியைத் தருவதாகும். அதனால் சந்திரப்பிரபையில் ஏகாம்பரநாதரை அமரவைத்து வணங்குவார்கள். சிவபிரான் சடையினில் சந்திரன் தங்கி இருப்பதும் ஒப்புநோக்கத் தக்கதாகும்.

**விழாவின் பயன்:**

மக்களைப் பிறவித்துன்பங்களிலிருந்து நீக்கி பேரின்பப் பெருவாழ்வு பெற இறைவன் வீதிஉலா வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

**மூன்றாம் நாள் விழா:**

இந்நாளன்று காலை பூதவாகனத்தில் ஏகாம்பரநாதர் வீதியுலா வருவார். பூதங்கள் சிவகணமாகும். பூத வாகனம் ஐந்து அண்டங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களையும் அழிக்கும் பிரம்மா, திருமால், உருத்திரர், மகேசன், சதாசிவன் ஆகிய ஐந்து காரனேசுவரரையும் குறிப்பதால் ஏகாம்பரநாதர் பூத வாகனத்தில் எழுந்தருளுகிறார். உலகில் நிலையாக மழைபெய்ய வேண்டும். அதனால் உலக உயிர்கள் இன்புறவும் இவ்விழாக் கொண்டாடப்படுவது குறிப்பிடத் தக்கதாகும்.[38]

இரவு விழாவில் ஏகாம்பரநாதரும், ஏலவார்குழலியும் பவழக்கால் தாங்கியிலும், விநாயகர், சுப்பிரமணியர், பெருச்சாளி, மயில் வாகனங்களில் அமர்ந்து சின்ன காஞ்சிபுரம் அருளாளப் பெருமாள் கோயில் வாசலில் ஏசல் செய்யும் நிகழ்ச்சி நடைபெறும். அவ்வாறே அருளாளப் பெருமாள் கோயில் வைகாசி பிரம்மோற்சவத்தின் ஆறாம் நாள் அருளாளப்பெருமாள் யானை வாகனத்தில் ஏகாம்பரநாதர் கோயிலில் ஏசல் செய்யும் நிகழ்ச்சியும் நடைபெறும். இவ்விரு ஏசல் நிகழ்ச்சிகளும் சமய நல்லிணக் கத்தைத் தோற்றுவிக்கும் வகையில் அமைந்துள்ளது சிறப்பு உடையதாகும்.

**விழாவின் பயன்:**

மூன்றாம் நாள் விழாவானது உயிர்களின் பாசத்தை நீக்குவதற்கு வழி செய்யும் விழாவாகும் என்பது அறியற்பாலதாகும்.

**நான்காம் நாள் விழா:**

காலையில் ஏகாம்பரநாதர் நாகவாகனத்தில் வீதியுலா வருவார். ஐந்து சுத்த மாயாதத்துவ உலகுடன் உயிர்களை ஏகாம்பரநாதர் இயக்குவர் என்பதால் நாகவாகனத்தில் எழுந்தருளுகிறார் என்பது அறியற்பாலதாகும்.[39]

நாட்டையாளும் தலைவனின் சத்ருக்களை அழிக்கும் வகையில் இவ்விழா கொண்டாடப்படுவது குறிப்பிடத் தக்கதாகும்.[40] இரவில் வெள்ளிக் கவசம் பொருந்திய இடப வாகனத்தில் ஏகாம்பரநாதரும், ஏலவார்குழலியும் வீதியுலா வருவார்கள். இவ்வாகனம் இறைவன் எல்லா அண்டங்களிலும் நீக்கமற நிறைந்தும், அதனையும் கடந்து பரிபூரண நிலையில் உள்ள தன்மையைக் குறிப்பதால் ஏகாம்பரநாதர் இவ்வாகனத்தில் எழுந்தருளுகிறார் என்பது சிறப்புடைத்தாகும். இக்காட்சி தரிசிப்பவர்களைப் பக்திப் பரவசத்தின் உச்சிக்கே கொண்டு செல்கிறது என்பது வெளிப்படையான உண்மையாகும்.

**விழாவின் பயன்:**

உயிர்கள் பக்குவப்படுத்தப்பட்டு, ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களிலிருந்து விடுதலை பெறுவதையும் குறிக்கும். மேலும், உயிர்கள் பாசத்தை ஒழிந்து சிவபோதம் பெற்றுத் திகழ்வதைக் குறிக்கிறது.

**ஐந்தாம் நாள் விழா:**

காலையில் வெள்ளி அதிகார நந்தியின் மீது அமர்ந்து ஏகாம்பரநாதர் வீதியுலா செல்கின்றார். வெள்ளி அதிகார நந்தி அருள்புரியும் தன்மை கொண்டவர். மேலும், சங்கார மூர்த்தியாகவும் திகழ்வதால் ஏகாம்பரநாதர் அவர் மீது எழுந்தருளுகிறார் என்பது உணரத்தக்கதாகும்.[41] மேலும், மான்; மழு முதலிய மூன்று கண்கள் உடைய அடையாளம் பெற்றவர்களுள் வெள்ளி அதிகார நந்தி சிறந்தவராதலால் அவர்மீது ஏகாம்பரநாதர் எழுந்தருளுகின்றார் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.[42]



இரவில் ஏகாம்பரநாதர் பத்துத்தலைகள் கொண்ட இராவணேஸ்வர வாகனத்தில் வீதியுலா வருவார். கைலாய மலையின் அடியில் இராவணன் இருப்பதுபோல் இவ்வாகனம் வடிவமைக்கப்பட்டிருக்கும். இராவணன் சிறந்த சிவபக்தன். இருப்பினும் ஆணவத்தால் கயிலை மலையைப் பெயர்த்து எடுக்க முயற்சி செய்தான். இதனை அறிந்த ஏகாம்பரநாதர் தனது கால்விரலை மலைமீது ஊன்ற இராவணன் அலறித்துடித்து, 'ஏகாம்பரநாதா!' என்று அழைத்தான். அந்த அளவில் 'நலங்கொள்; செல்க' என்று ஏகாம்பரநாதர் உத்தர விட்டார். அதனால் இராவணன் மீது ஏகாம்பரர் அமர்ந்து வீதியுலா வருகிறார். மேலும், 'சூழ்ச்சி நிறைந்த உன்மத்தர்கள் இறுதியில் அழிந்துவிடுவார்கள்' என்பதை உலகிற்கு உணர்த்த இவ்விழா நடத்தப்பெறுவது அறியற்பாலதாகும்.[43]

**விழாவின் பயன்:**

இவ்விழா சங்காரத்தைக் குறிக்கும் வகையில் கொண்டாடப் பெறுவது சிறப்புடைத்தாகும்.

### ஆறாம் நாள் விழா:

சிவபிரானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு அவரிடம் அன்பு செலுத்தி மேம்பாடுற்ற, சைவ சமயத்தின் வளர்ச்சிக்குப் பாமாலைகள் புனைந்து சிறப்புறச் செய்தவர்கள் நாயன்மார்கள் ஆவார்கள். காலையில் அவர்களுடைய செப்புத் திருமேனிகள் அபிஷேக ஆராதனை செய்யப்பட்டு, மலர்களால் அலங்கரிக்கப்பட்டு பல்லக்கில் வைத்து வீதியுலாவிற்கு எடுத்துச் செல்வர். ஏகாம்பரநாதரும் ஏலவார் குழலியும் கண்ணாடி பல்லக்கில் வீதியுலா வருவர். இவ்விழாவானது ஏகாம்பரநாதர் கோயிலில் வெகுசிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. மேலும், திருமயிலை, திருக்கழுக் குன்றம், பெருநகர் முதலிய கோயில்களிலும் அறுபத்து மூவர் விழா நடைபெறுவது அறியற்பாலதாகும்.[44]

இரவு நடைபெறும் விழாவில் ஏகாம்பரநாதரும் ஏலவார் குழலியும் வெள்ளித்தேரில் வீதியுலா வருவர். இது அற்புதமான காட்சியாகும். வெள்ளித்தேரினை நான்கு குதிரைகள் இழுத்துச் செல்வதாகவும், பிரம்மதேவன் தேரினை இயக்குவதாகவும் உருவங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன. நான்கு மூலைகளிலும் நாரதர் கையில் வீணைவாசிப்பது போன்ற உருவங்களும் அமைக்கப்பட்டுள்ளன. மின் விளக்குகளாலும், மலர் மாலைகளாலும் வெள்ளித்தேர் பார்ப்பதற்கு கண்கொள்ளாக் காட்சியாகும். ஏகாம்பரநாதருக்கு அணிவிக்கப்படும் மலர்மாலை பருமன் அதிகம் கொண்டதான மரக்கால் மாலை என்றழைக்கப்படும் மலர் மாலையினை அணிவிப்பார்கள். இவ்வுற்சவத்தினை காஞ்சிப் புராணம் சுட்டும் தொண்டை மண்டல ஆதிசைவ வேளாள மரபினர் காலம் காலமாகச் செய்து வருகின்றார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**விழாப் பயன்:**

சிவபெருமான் முப்புரங்களையும் அழித்தவர். உயிர்களைச் சார்ந்துள்ள மும்மலங்களான ஆணவம், மாயை, கன்மம், ஆகிய மூன்றின் சேர்க்கையே முப்புரங்களாகும். ஆகவே, தேர்த்திருவிழா உயிர்களிடத்தே உள்ள மும்மலங்களை அழிப்பதற்குத் துணை செய்வது என்பது அறியற்பாலதாகும்.[45]

**ஏழாம் நாள் விழா:**

ஆறாம்நாள் இரவு தேர் கோயிலைச் சென்றடைய வெகுநேரம் ஆவதால், காலையில் திருவிழா நடைபெறுவ தில்லை. இரவு நடைபெறும் திருவிழாவில் ஏகாம்பரநாதரும், ஏலவார்குழலியும் சிறப்புடன் அலங்கரிக்கப்பட்ட மரத்தேரில் வீதியுலா வருவார்கள். மரத்தேர் சிறிய அளவிலேயே உள்ளது. இக்கோயிலுக்காகவே விசயநகர மன்னர்கள் செய்து அளிக்கப்பட்ட மிகப்பெரிய மரத்தேரானது பின்னர் வந்த படையெடுப்பாளர்களால் அழிக்கப்பட்டு சிதைந்து போனது.

**எட்டாம் நாள் விழா:**

காலையில் ஆறுமுக சாமி எடுப்பு இரதத்தில் வீதியுலா வருவார். ஏகாம்பரநாதர் பிட்சாடனர் கோலத்தில் வீதியுலா வருவார். தாருகாவனத்தைச் சேர்ந்த முனிவர்களும், அவர்களுடைய பத்தினிகளும் ஆணவத்தினால் சிவனை மறந்துவிட்டனர். அவர்களுக்கு சிவஞானத்தை அருளவே சிவபெருமான் கையில் கபாலத்தையும், சடாமுடியையும், இடுப்பில் அரவாபரணத்தையும், நெற்றியில் பட்டத்தையும் மூன்று கண்களையும், மார்பில் முப்புரி நூலையும் கொண்டு பிச்சை ஏற்றுச் சென்றார் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இரவில் ஏகாம்பரநாதர் குதிரை வாகனத்தின் மீது அமர்ந்து வீதியுலா வருவார் என்பது அறியற்பாலதாகும்.[46] இறைவனுக்கு வேதமே குதிரையாக அமைவது; வேதத்தைத் தோற்றுவித்து அதன் உட்பொருளாய் வேதத்திற்கு

மேலானவராக விளங்குபவர் ஆவார். ஆகவே, குதிரை வாகனத்தின் மீது ஏகாம்பரநாதர் எழுந்தருளுகிறார்.

**விழாப் பயன்:**

வேதங்களின் பயனாகக் கிடைக்கும் ஞானம் அபர ஞானம் என்றழைக்கப்படுகிறது. சிவபெருமான் திருவருளாகிய சிவஞானத்தை அறியக்கூடியவர்; சிவஞானம் பரஞானம் என்றழைக்கப்படுகிறது. அத்தகைய ஞானத்தை மக்கள் பெறுவதற்கு வழி செய்வது குதிரை வாகன விழா என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[47]

மேலும், மக்களிடையே நிறைந்து காணப்படும் ஆணவத் தன்மையை அறவே போக்கி மோட்சத்தை அடைவதற்காக இவ்விழா நடத்தப்படுவது அறியற்பால தாகும்.[48]

**ஒன்பதாம் நாள் விழா:**

காலையில் ஏகாம்பரநாதர் ஆள்மேல் பல்லக்கில் அமர்ந்து சேவை செய்யும் விதத்தில் வீதியுலா வருவார். பல்லக்கு மறைத்தல் சக்தியைக் குறிக்கிறது. உயிர் மறைத்தல் சத்தியின் தொழிற்பாட்டில் பக்குவம் அடைந்து பரஞானம் பெற்று விளங்குவதாக ஏகாம்பரநாதர் பல்லக்கில் அமர்ந்து சேவை செய்கிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இரவு விழாவில் ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் வெள்ளி மாவடியில் அமர்ந்து வீதியுலா வருவர். வெள்ளிக் கவசம் பொருத்தப்பட்ட மாவடியில் மாமரத்தின் இலைகள் தொங்க விடப்பட்டும், வண்ண மின் விளக்குகளால் அலங்கரிக்கப் பட்டும் திகழும். மாமரததில் உள்ள அதன் உறுப்புகள் போல உலகத்துவங்கள் திகழும். மாமரத்தில் உள்ள அதன் உறுப்புகள் போல உலகத்துவங்கள் உள்ளன. ஆகவே, எல்லாவற்றுக்கும் ஆதாரமாக ஏகாம்பரநாதர் திகழ்வதால் வெள்ளி மாடியில் அமர்ந்து சேவை செய்கிறார்.



**விழாப் பயன்:**

உலகத்தில் காணப்படும் தொழில்கள் செம்மையாகச் சிறக்கவே இவ்விழா நடத்தப்பெறுவது அறியற்பாலதாகும்.[49]

**பத்தாம் நாள் விழா:**

காலையில் ஏகாம்பரநாதர் கோயிலின் உள்ளேயே உள்ள கம்பாநதியில் தீர்த்தவாரி நடைபெறும் என்பது அறியற்பாலதாகும்.[50] ஏகாம்பரநாதர் திருநடனப்

பாவனையுடன் கூடிய சபாநாதராக வீதியுலா வந்து மக்களுக்குக் காட்சியளிப்பார். சிவபெருமான் பல்வேறு சூழ்நிலைகளில் கொடுகொட்டி, சந்தியா, பாண்டரங்கம், சண்டம் போன்ற பலவகை நடனங்களை ஆடுபவர் என்பதனைப் புலப்படுத்தும் விதத்தான் சபாநாதராக உலாவரச் செய்யும் காட்சியாகும் என்பது அறியற் பாலதாகும்.[52] இரவு விழாவில் உத்திர நட்சத்திரம் கூடிய வேளையில் ஏகாம்பரநாதருக்கும் ஏலவார்குழலிக்கும் திருக்கல்யாண உற்சவம் நடக்கும். ஏகாம்பரநாதர் தமது திருவருளாகிய சக்தியுடன் நின்று மக்களுக்கு இந்தப்பிறவியிலும், அடுத்து வரக்குடிய பிறவிகளிலும் இன்பங்களை வாரி வழங்குவார் என்பதைக் குறிக்கும் வகையில் நடத்தப்படுவது தான் திருக்கல்யாண உற்சவம் ஆகும். அந்த வகையில் ஏகாம்பரநாதர் கோயிலில் அன்று இரவு முழுவதும் வண்ண விளக்குகள் அலங்கரிக்கப்பட்டு இருக்கும். ஏகாம்பரநாதரின் பெருமைகள் பற்றிய சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படும். ஆயிரக்கணக்கான மக்கள் இரவு நேர உணவினை எடுத்துக் கொண்டு வந்து கோயிலில் தங்குவார்கள். 3500 ஆண்டுகள் பழமை வாய்ந்த மாமரத்தின் அடியில் திருமணம் நடைபெறும். ஒருவரை யொருவர் விரும்பும் ஆணும், பெண்ணும் இங்குத் திருமணம் செய்து கொள்வர். இங்கு நடைபெறும் திருமணம் சட்டப்படி ஏற்றுக்கொள்ளப்படுகிறது. மக்கள் எப்பொழுதும் ஊக்கமும் உற்சாகமும் நிறைந்திருப்பதற்கு திருமண விழா நடத்தப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[52]

மறுநாள் பொழுது புலர்ந்தபின் ஏகாம்பரநாதரும ஏலவார்குழலியும் தங்க இடபவாகனத்தில் கல்யாண கோலத்தோடு வீதியுலா வருவார்கள்.

**விழாப் பயன்:**

ஏகாம்பரநாதர் உயிர்களுக்கு இவ்வுலக இன்பங்களை எல்லாம் அள்ளித்தந்து பாசப் பிணைப்பை ஏற்படுத்துகிறார்.

அப்பிணைப்புக்குப் பின்னர் பேரின்பமாகிய முக்தி நெறியினை உயிர்களுக்கு வழங்கி அருள் பாலிக்கக் கூடியவர் என்பதை உணர்த்தும் வகையில் திருக்கல்யாண விழா கொண்டாடப்படுவது அறியற்பாலதாகும்.[53]

**பதினொன்றாம் நாள் விழா:**

காலையில் கந்தபொடி வசந்தவிழா கொண்டாடப் படுகிறது. மக்கள் கோடையின் தாக்கம் அதிகமானால் அதனைப் போக்கிக் கொள்வதற்கு குளிர்ச்சி நிறைந்த நீர் நிலைகளின் கரைகளில் தங்கிச் செல்வர். அந்த வகையில் ஏகாம்பரநாதரையும் ஏலவார்குழலியையும் அலங்காரம் செய்வித்து அவ்விடங்களுக்கு எழுந்தருளுமாறு செய்வர். பின்னர் அபிஷேக ஆராதனைகள் செய்யப்பட்டு நைவேத்தியம் செய்வித்து மக்களும் உண்பார்கள். இதுவே கந்தபொடி வசந்த விழாவாகும்.

இரவு நேர விழாவில் ஏகாம்பரநாதரும் ஏலவார் குழலியும் புண்ணியகோடி விமானத்தில் வீதியுலா வருவர். திருமணத்திற்குப் பின்னர் ஏலவார்குழலி ஏகாம்பரநாதர் மீது ஊடல கொண்டு காஞ்சியிலுள்ள பூக்கடைச் சத்திரம் வரை வந்துவிடுவார். ஏகாம்பரநாதர் அவ்வூடலைப் போக்கும் வகையில் தனியாக வாகனத்தில் அமர்ந்து வந்து இறைவியின் ஊடலைத் தீர்த்து வைத்து கோயிலுக்கு அழைத்துச் செல்வார். இதற்கென பூக்கடைச் சத்திரம் அருகே பந்தல் சிறப்பாக அமைக்கப்பட்டிருக்கும். இந்நிகழ்ச்சி ஏகாம்பரநாதர் கோயிலுக்கே சிறப்பைத் தருவது உணரத் தக்கதாகும்.[54] பொன் பொருளை மற்றவர்களுக்கு அளிக்கக் கூடிய வகையின் காரணத்தால் இத்திருவிழா நடத்தப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.[55]

**விழாப் பயன்:**

இவ்விழாவினைக் காண்பதே மக்கள் பெற்ற பயனாகும்

**பன்னிரண்டாம் நாள் விழா:**

இந்நாளன்று காலையில் ஏகாம்பரநாதரும், ஏலவார் குழலியும் புருஷாமிருக வாகனத்தில் வீதியுலா வருவர். புருஷாமிருகம் மனிதர்கள், விலங்குகள் முதலியவற்றைப் பாசத்தில் செலுத்தும் மறைத்தல் சக்தியைக் குறிப்பதால் ஏகாம்பரநாதர் இவ்வாகனத்தில் எழுந்தருளுகிறார். இரவு விழாவில் பஞ்சமூர்த்திகள் உலா நடைபெறும். அதாவது ஏகாம்பரநாதர் வெள்ளி இடப வாகனத்திலும், ஏலவார்குழலி யம்மை தங்க இடப வாகனத்திலும், விநாயகப் பெருமான் வெள்ளிப் பெருச்சாளி வாகனத்திலும், சுப்பிரமணியர் வெள்ளி மயில் வாகனத்திலும், சண்டேசுவரரும் வீதியுலா வருவர். இக்காட்சி அற்புதக் காட்சியாகும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.





**விழாப் பயன்:**

இவ்விழாவினால் மறைப்புச் சக்தியான திரோதான சக்தியில் உயிர்கள் பக்குவப்படுத்தப்பட்டு அவற்றின் இடையே யுள்ள ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களும் அறவே அகற்றப்படுகின்றன என்பது அறியற்பாலதாகும்.[56]

**பதின்மூன்றாம் நாள் விழா:**

காலையில் ஏகாம்பரநாதர் கோயில் அருகேயுள்ள சர்வ தீர்த்தத்தில் தீர்த்தவாரி விழா நடைபெறும். அக்குளத்தில் அருகேயுள்ள ஆன்மாக்களுக்கு அருள்பாலிப்பதே இவ்விழாவின் தத்துவமாகக் கருதப்படுகிறது. இக்குளத்து நீரில் பக்தர்கள் நீராடல் செய்து ஏகாம்பரநாதரை வழிபட்டால் மோட்சத்தினை அடையலாம் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இதுவே இவ்விழாவின் பயனாகும்.

**தீர்த்தவாரி விழாவின் முக்கியத்துவம்:**

காஞ்சிக்குத் தெற்கே 20 கி.மீ. தொலைவிலுள்ள பெருநகர் (பிரம்ம நகர்) கிராமத்தில் சேயாற்றில் பத்தொன்பது கிராமத்திலிருந்து சுவாமிகள் இடப, குதிரை, மயில் வாகனங்களில் தைப்பூசத்தினத்தன்று கூடுவர். அங்கே சுவாமிகளுக்கு சேயாற்று நீரில் தீர்த்தவாசி விழா நடைபெறும். பின்னர் நிலவு உச்சிக்கு வரும் வேளையில் பெருநகர் பிரம்மபுரீஸ்வரர் எழுந்தருளியதும் நிலவு உச்சிக்கு வரும்போது ஒவ்வொரு ஊரிலிருந்து வந்திருக்கும் சுவாமிகளின் அர்ச்சகர்கள் மேள வாத்தியங்கள் முழங்க அடுத்த ஊரிலிருந்து வந்திருக்கும் சுவாமிகளுக்கு தீபாராதனை செய்வார்கள். இவ்வாறு தைப்பூசத் தீர்த்தவாரி விழா இனிதே நிறைவுறும என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இத்திருவிழா நாளன்றே திருக்கோயிலில் ஏற்பட்டுள்ள கொடி இறக்கும் நிகழ்ச்சி நடைபெறும்.

**பதினான்காம் நாள் விழா:**

இந்நாளன்று காலையில் ஏகாம்பரநாதர் உற்சவ மூர்த்திக்கு 108 கலசாபிஷேகமும், 108 சங்காபிஷேகமும் நடைபெறும். இச்சங்காபிஷேகத்தை கண்டு ஏகாம்பரநாதரை வழிபடுகின்றவர்கள் அனைத்து நலன்களையும் அடைவர் என்பது நம்பிக்கையாகும்.

மாலையில் திருமுறைத் திருவிழா நிகழும். மறுநாள் காலை 6 மணி வரை திருமுறைப்பாராயணம் நான்கு ராஜ வீதிகளிலும் நடைபெறும். இனிய இசையுடன் கூடிய பாடல்கள் பாடப்படுவதை மக்கள் கேட்டு மகிழ்ச்சியடைவார்கள்.

இங்ஙனம் பங்குனி உத்திரப் பெருவிழா காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலில் சிறப்பாக நடைபெறும். பிரம்மோற்சவமாகத் திகழ்ந்து பல்வேறு வகையில் சிறப்பு பெற்று இருப்பது சுட்டப்பட்டுள்ளது.

## இயல் நான்கு
## சான்றெண் விளக்கம்

1. சிறுபாணாற்றுப்படை வரி -201
2. மதுரைக்காஞ்சி தொடர் வரி 604-610
   'கருஞ்சூல் மகளிர் பேணிக்கை தொழுது
   பெருந்தோட் காலினி மருப்பஒரு சா
   சூல் மகளிர் தேவராட்டியுடன் நின்று
   தெய்வத்திற்கு மடைகொடுக்க'
3. கழகத்தமிழகராதி ப.832
4. இதுபற்றி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் திரு.இ.ரவிச்சந்திர குருக்கள் அவர்களிடம் 25-3-2006 அன்று பேட்டி கண்டு எழுதப்பட்டுள்ளது.
5. கோயிற்களஞ்சியம் ப.130
6. மேலது, ப-131
7. போற்றித் திருவகவல் வரிகள் 151-152
8. Religious festivals in S.India
9. மேலது, ப.29
10. கழகத்தமிழகராதி ப.858
11. திதி, வாரம், யோகம், நட்சத்திரம், கரணம் பற்றிக் கூறுவதால் இப்பெயர் பெற்றது
12. சிலப்பதிகாரம் பாடல் 61
13. ஸ்ரீ பிரசன்ன சம்மிதை அத்தியாயம் 39 வரிகள் 1-46
14. ஏகாம்பரநாதர், ஏலவார்குழலி, விநாயகர், முருகர், சண்டிகேசுவரர்
15. பாரதப் பண்டிகைகளும், அனுஷ்டானமும்-ப.52
16. மேலது, ப.53
17. தல அடியார் வாதவூரர் ப.64
18. அபிதானசிந்தாமணி ப.1440
19. தொல்லியல் நோக்கில் ப.106
20. தமிழர் மதம் ப.சுஅ

21. அகநானூறு சுகக
22. தொல்காப்பியம் புறத்திணையியல் நூற்பா.35
23. பரிபாடல் 11-77
24. மேலது, பாடல்-8
25. தொல்லியல் நோக்கில் ப.108
26. மேலது, ப.108
27. மேலது, ப.108
28. தென்னிந்தியக் கல்வெட்டுச் சாசனம் Vol.V No.578
29. தொல்லியல் நோக்கில் ப.109
30. மேலது, ப.110
31. தென்னிந்தியக் கல்வெட்டுச் சாசனம் IV No.225
32. சுந்தரர் தேவாரம், ஏழாம் திருமுறை ப.61 பாடல்-1
33. கோயிற்களஞ்சியம் ப.135
34. சம்பந்தர் தேவாரம் பாடல்-7
35. கோயிற்களஞ்சியும் ப.138
36. திருக்கோயில் வழிபாட்டு முறைகள் ப.80
37. மேலது, ப.139
38. காஞ்சிப்புராணம் திருவிழாச் சருக்கம் பா.1192
39. கோயிற்களஞ்சியும் ப.140
40. காஞ்சிப்புராணம் திருவிழாச் சருக்கம் ப.1193
41. கோயிற்களஞ்சியம் ப.139
42. கழகத்தமிழகராதி ப.442
43. காஞ்சிப்புராணம் திருவிழாச் சருக்கம் பா.1194
44. கோயிற்களஞ்சியம் அறிமுகம் - பா.79
45. காஞ்சிப்புராணம் திருவிழாச் சருக்கம் பா.1195
46. மேலது, பா.1199
47. கோயிற்களஞ்சியும் ப.142
48. காஞ்சிப்புராணம் திருவிழாச் சருக்கம்-பா.1197
49. மேலது, பா.1198
50. ஏகாம்பரநாதர் குளத்திலுள்ள உயிரினங்களுக்கு அருள்புரிய அங்கே எழுந்தருளல்

51. கோயிற்களஞ்சியம் ப.143
52. காஞ்சிபுராணம் திருவிழாச் சருக்கம் பா.1199
53. கோயிற்களஞ்சியியம் அறிமுகம் ப.143
54. திருவேகம்பன் செம்பொற்கோயில் ப.40
55. காஞ்சிப்புராணம் திருவிழாச் சருக்கம் பாடல்-1200
56. கோயிற்களஞ்சியம் ப.140

## இயல் ஐந்து

# அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் வளர்த்த கலைகள்

### 5.0 முன்னுரை:

கலைகளின் வகைப்பாட்டை ஏழு வகையாகக் காணலாம். அவையாவன; வழிபாட்டுக்கலை, ஆடற்கலை, பாடற்கலை, ஒப்பனைக்கலை, கட்டிடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை இவற்றுள் ஆடற்கலை கொடுகொட்டி; குடக்கூத்து, ஆடற்கலை வளர்த்த அடிகள்மார் என்ற 3 வகையிலும், பாடற்கலை - பாடற்கலை வளர்த்த நாயன்மார், தேவாரகாலத்து இசைக்கருவிகள் என்ற 2 வகையிலும், சிற்பக்கலை - சரபேச மண்டபம், கம்பாதீர்த்தம், ஆயிரங்கால் மண்டபம், பல்லவர் கோபுரம், தம்பட்ட விநாயகர், விஷ்ணுவேச்வரர், இடபேசுவரர், சிவகங்கைத் தீர்த்தம், முதல் பிரகாரத்தில் காணலாகும் சிற்பங்கள், இரண்டாம் பிரகாரத்துள் காணலாகும் சிற்பங்கள், பௌர்ணமி மண்டபம், நடராசர் சந்நிதியில் காணலாகும் தூண் சிற்பங்கள், ஏலவார்குழலி உற்சவ மூர்த்தி மண்டப தூண் சிற்பங்கள், சபாநாதர் மண்டபம், கோயில் மதில்கள், மேற்கு இராச கோபுரம், லிங்கபேசுவரர் ஆலயம் என்ற 17 வகையிலும் அமைந்தது பற்றி இவ்வியலில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

### 5.1. கலைகள்:

அழகு உணர்ச்சியை வெளிக்கொணர்வது கலையாகும். கலை வாழ்க்கையை இன்பமயமாக்குகிறது. அழகுச் செயல்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது கலையாகும். கலைகள் அறுபத்து நான்கு என்பது அறியற்பாலதாகும்.[1]

கோயில்களின் கட்டமைப்பைக் கலைகளின் உறைவிடமாகக் கருதுவர். அக்கலைகளை வழிபாட்டுக்கலை,

ஆடற்கலை, பாடற்கலை, ஒப்பனைக்கலை, கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை எனப்பலவகைகளாகப் பிரிக்கலாம். இவ்வாறு பலவிதமான கலைகளின் நிலைக்களனாகக் கோயில்கள் திகழ்கின்றன. அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் வளர்த்த கலைகள் என்ற ஐந்தாவது இயலில் இக்கோயில் வளர்த்த வழிபாட்டுகலை, ஆடற்கலை, பாடற்கலை, ஒப்பனைக்கலை, சிற்பக்கலை முதலியவற்றை விளக்கமாகக் காண்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 5.1.1. வழிபாட்டுக் கலை:

அங்கு, இங்கு என்னாதபடி எங்கும் நீக்கமற நிறைந் திருக்கும் நிமலனை மனத்தால் சிந்தித்து, வாக்கால்பாடி, மெய்யால் பரவுவதே பிறவிப்பயனாகும். ஆகவே. இறைவனது திருவடியைச் சரணமடைவது அவனை வழிபடும் முறைகளில் அமைந்துள்ளது. அவற்றை நாம் தவறாது கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

1. அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் தென்புற இராச கோபுரத்திற்கு வெளியே அமைந்துள்ள விநாயகர் மற்றும் ஆறுமுகப்பெருமானை வணங்குதல் வேண்டும்.
2. கோபுரத்தின் உள்ளே சென்று இடதுபுறம் அமைந்துள்ள கம்பா நதியின் நீரை தலையில் சிறிது தெளித்துக் கொள்ளுதல்;
3. ஆயிரங்கால் மண்டபத்தினுள் சென்று வலப்புறம் பல்லவ மன்னர்களால் கட்டப்பட்ட பல்லவர் கோபுரத்தின் இடது பக்கமுள்ள தலவிநாயகரான விகடச்சக்கர விநாயகரை வணங்குதல்;
4. வலப்பக்கமுள்ள ஆறுமுகப் பெருமானை வணங்கிய பின்பு உள்பகுதிக்குச் செல்லுதல் வேண்டும்.
5. வலப்பக்கம் திரும்பி திருக்கச்சி மயானத்தின் அருகிலுள்ள நந்தி தேவரை வணங்குதல்;

6. பின்பு உள்ளே செல்ல அனுமதி கேட்டு கோயிலினுள் செல்லல்;

7. வாயிற்புறத்திலுள்ள இரு துவாரபாலகர்களையும் வணங்குதல்;

8. பின்பு இடப்பக்கம் திரும்பி பிரளயகால காளியை வணங்குதல்;

9. சந்நிதியை வலம் வந்து சபாநாதர் மண்டபத்தின் ஆமையின் மேல்பீடத்தில் அமர்ந்திருக்கும் உற்சவ மூர்த்தியான அருள்மிகு ஏகாம்பரநாதர் ஏலவார்குழலியை வணங்குதல் (இருவரும் சோமாஸ்கந்த மூர்த்தத்தில் அமர்ந்துள்ளனர்);

10. பஞ்சமுக விநாயகரை வணங்குதல்;

11. வலப்பக்கம் திரும்பி மாமரத்தின் கீழ் கல்யாண கோலத்தில் வீற்றிருக்கும் எம்பெருமானை வணங்குதல்;

12. ஒரே லிங்கத்தில் 1008 சிறு லிங்கங்களைக் கொண்ட சஹஸ்ர லிங்கத்தை வணங்குதல்;

13. ஏலவார்குழலி உற்சவரையும், மாவடிக்கந்தரையும் வணங்குதல்;

14. கிழக்கு நோக்கிச் சென்று அருள்மிகு நடராசர், சிவகாம சுந்தரியை வணங்குதல்;

15. பின்பு உள் பிரகாரம் சென்று இடப்பக்கமுள்ள பாலச் சந்திர விநாயகர், படிகலிங்க மூர்த்தி, பிரளயம் காத்த லிங்கம் முதலியவற்றை வணங்குதல்;

16. தென்புறவாயில் வழியாக உள்ளே சென்று அருள்மிகு ஏகாம்பரநாதரை (மணல்லிங்கம்)யும், அவருக்குப் பின்னால் அமர்ந்த நிலையிலுள்ள இறைவன், இறைவியை வணங்குதல்;

17. பின்பு வெளியில் வந்து வெள்ளைக்கம்பர், விநாயகர், ஆறுமுகப்பெருமான், மார்க்கண்டேசுவரர், மத்தள மாதேசுவரர், கள்ளக் கம்பர் முதலியவரை வணங்குதல்;

18. சண்டேசுவரரிடம் சிவ புண்ணியங்களைத் தருமாறு வேண்டி வணங்குதல்;

19. நல்லகம்பர், ஆறுமுகப்பெருமானை (உற்சவமூர்த்தி) வணங்குதல்;

20. திரு நிலாத்திங்கள் துண்டத்துப் பெருமாளைச் சேவித்துக் கொண்டு வெளியில் செல்லவேண்டும்.

21. கொடிமரத்தின் அருகில் தென்திசையைத் தவிர்த்து, கீழே விழுந்து வணங்குதல்;

22. திருக்கச்சி மயானத்து இறைவர், வாலீசுவரரை வணங்கிய பின்பு மீண்டும் தென்புற கோபுரத்தின் வழியாக வெளியில் செல்லுதல் வேண்டும்.

பொதுவாக இறைவன் சந்நிதி கிழக்கு வாயிலை நோக்கி இருந்தாலும் நாம் தெற்குப்புறவாயில் வழியாகத்தான் உள்ளே சென்று வணங்க வேண்டும். இது ஆன்றோர் கூற்று. அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் இராசகோபுரமும் தெற்குப்புறத்தில் உள்ளது. அதேபோல் நாம் அருள்மிகு ஏகாம்பரநாதரை வணங்க உள்ளே செல்லும் வழியும் தெற்குப்புறத்தில் அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.[1]

### 5.1.2. ஆடற்கலை:

ஆடற்கலை கூத்துக்கலை என்றழைக்கப்படுகிறது. இக்கால இசைக்கலையுடன் இது தொடர்புடையதாகும். பழங்காலத்தில் பதினோரு வகையான ஆடல்கள் ஆடப்பட்டு வந்தன. அவையாவன:

1. அல்லியம், 2. கொடுகொட்டி, 3.குடை, 4.குடம், 5.பாண்டரங்கம், 6. மல், 7. துடி, 8. கடையம், 9. பேடு, 10. மரக்கால், 11. பாவை

இவற்றுள் கொடுகொட்டிக்கலை, குடக்கூத்துக் கலை (கரகாட்டம்) சிறப்பாக ஏகாம்பரநாதர் கோயிலில் நடைபெறுகிது.

### 5.1.2.1. கொடுகொட்டி:

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் கொடுகொட்டி எனும் நடனமானது ஏகாம்பரநாதரால் ஆடப்பட்டுள்ளது அறியற்பாலதாகும்.[2] கொடுகொட்டியானது சிவபெருமான் முப்புரங்களை எரித்தபோது அது எரிவதைக்கண்டு வெற்றி மகிழ்ச்சியால் கைகளைக் கொட்டி ஆடிய ஆடல் ஆகும். தீப்பற்றி எரிவதால் மனம் சற்றும் இளகாமல் கைகொட்டி ஆடியதால் இப்பெயர் பெற்றது என்பர்; கொட்டிச் சேதம் என்ற பெயரும் இவ்வகை நடனத்திற்கு உண்டு என்பது அறியற்பாலதாகும்.[3] இவ்வகை நடத்தைக்

''பாரதி யாடிய பாரதியரங்கத்துத்

..................................................

இமையவன் ஆடிய கொடுகொட்டி பாடல்''

என்ற சிலப்பதிகார வரிகள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது [4]

அருள்மிகு ஏகாம்பரநாதர் கொட்டிச்சேதம் ஆடிய போது உமாதேவியார் ஆடாமல், அசையாமல் இருந்தார். அந்நிலையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் நடனமாடி தம்முடைய சடாமுடியில் சுமந்திருந்த கங்கை நீரைக் கொட்டி காமாட்சியின் தவத்திற்கு இடையூறு விளைவித்ததால் இந்நடனம் கொட்டிச் சேதம் என்றழைக்கப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.[5]

### 5.1.2.2. குடக்கூத்து:

இதனைக் கரகாட்டம் என்று அழைப்பர்; அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் திருவிழாவின் போது இக்கூத்து

நடைபெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

### 5.1.2.3. ஆடற்கலை வளர்த்த அடிகள்மார்:

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் சமயத்தின் இரண்டு அங்கங்களாகக் கருதப்பட்ட ஆடற்கலையையும், இசைக் கலையையும் வளர்க்கப் பெண்கள் இருந்துள்ளனர். அப்பெண்களுக்கு அடிகள்மார், மாணிக்கத்தார், கணிகையர், தேவரடியார் எனப்பல பெயர்களில் அழைக்கப்பட்டனர். அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் திருவிழாவில் இறைவன் வீதியுலா செல்லும் பொழுது முன்பாக இப்பெண்கள் நடனம் ஆடுவர். இவர்கள் ஆயிரங்கால் மண்டபத்தில் இன்றும் காணப்படும் சிறுசிறு அறைகளில் தங்கி இருந்துள்ளனர். இவ்வாறு இவர்கள் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் நடனக்கலையை வளர்த்துள்ளனர் என்பது அறியற்பால தாகும்[6] ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள தூண் சிற்பங்களில் மேளம் கொட்டுவதும், அதற்கேற்பப் பெண்கள் பலவகை நடனங்கள் ஆடுவதும் போன்ற சிற்பங்களைக் காணும்போது ஆடற்கலை அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் வளர்ச்சி யடைந்திருந்ததை உறுதிப்படுத்துகிறது.

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் நூற்றுக்கும் மேற்பட்ட அடிகள்மார் இருந்துள்ளனர். அதேபோல காஞ்சி முத்தீசுவரர் கோயிலில் 42 அடிகள்மார் இருந்துள்ளதும் அறியற்பாலதாகும்.[7]

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் திருவலகிடுதலும், திருமெழுகிடுவதும், மலர்தொடுப்பதும் ஆகியன இவர்களுடைய முதன்மையான பணிகளாகும். மேலும் தேவாரம், திருவாசகம் ஓதுதல், இறைவன் முன்பு நடனம் ஆடுதல் முதலிய கலைத் தொண்டுகளையும் இவர்கள் செய்து வந்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[8] திருவிழா நடைபெறும் சமயத்தில் தேவரடியார்கள் நாடகங்களில் நடிப்பதும் நடைபெற்றுள்ளது அறியற்பாலதாகும்.[9]

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் அமைந்துள்ள சபாநாதர் மண்டபத்தூண்களில் சிவபெருமான் ஆடிய நடனங்கள் சிலவற்றை மக்கள் அறிந்துகொள்ளும் வகையில் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். அவற்றுள் தூக்கிய திருவடி நடனம் சிறந்ததாகும். இச்சிற்பங்கள் அநேகமாக இராசசிம்ம பல்லவனால் அமைக்கப்பட்டிருக்கக்கூடும். ஏனெனில் அவனால் உருவாக்கப்பட்ட கயிலாசநாதர் கோயிலில் இவ்வகை நடனச் சிற்பங்களை அம்மன்னனே அமைத்திருக்கக்கூடும் என்பது உறுதியாகிறது.

மேலும், அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் கோபுரத்தின் நிலைக்கற்களில் 108 நாட்டிய கரணங்கள் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

தொன்றுதொட்டுவரும் இப்பரத நாட்டியக் கலை வளரும் வகையில் இன்றும் பரத நாட்டியம் கற்றுக்கொண்ட சிறுமிகள் தங்கள் நாட்டியத்தை அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் வெளிப்பிரகார மண்டபத்தில் அரங்கேற்றம் நடைபெற்று வருவது காணலாம். இவ்வாறு அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் ஆடற்கலையை இன்றும் வளர்த்துவருவது குறிப்பிடத்தக்கதாகும்.

### 5.1.3. பாடற்கலை:

பாடற்கலை இசைக்கலை எனவும் அழைக்கப்படுகிறது. காதால்கேட்டு இன்புறத்தக்க இனிய கலையாகும். சைவ சமய வளர்ச்சிக்குப் பாடுபட்ட நாயன்மார்களில் திருநாவுக்கரசு நாயனார், திருஞானசம்பந்தர், பாணபத்திரர், திருமால் அடியவரான திருப்பாணாழ்வார் முதலானோர் பாடற்கலையை நன்கு வளர்த்துள்ளனர் என்பது அறிந்துகொள்ள முடிகிறது. இசை என்பது குரல், துத்தம், கைக்கிளை, உழை, கிளி, விளரி, தாரம் என ஏழு வகைப்படும். வடமொழியில் இவற்றை மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம், ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம் என்று அழைப்பர்.

### 5.1.3.1. பாடற்கலையை வளர்த்த நாயன்மார்கள்:

சைவ சமயக் குரவர்களில் ஒருவரான திருநாவுக்கரசு நாயனார் பலவகைப் பண்களைக் கொண்ட தேவாரப் பாடல்களைத் தலங்கள் தோறும் பாடி மகிழ்ந்தார். திருக்கச்சியேகம்பத்தைப் பற்றி நான்காம் திருமுறையில் காந்தாரம் [9அ] என்ற இசையில் பத்து பாடல்கள் பாடியுள்ளார் என்பது அறியற்பாலதாகும்.[10] அதேபோல ஐந்தாம் திருமுறையில் கொல்லி[10அ] என்ற இசையில் 12 பாடல்கள் பாடியுள்ளார் என்பதும் அறியற்பாலதாகும்.[11] மேலும் ஆறாம் திருமுறையுள் பதினொரு பாடல்கள் பாடியுள்ளார் என்பதும் அறியற்பாலதாகும்.[12]

இப்பாடல்கள் இன்றும் ஆறுகால பூசையின்போது கோயில் ஓதுவாரால் தேவாரம் பாடப்பட்டு இசைக்கலையை மேலும் மெருகூட்டி வருகிறது எனலாம். அதேபோல திருஞான சம்பந்தர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் முதலியவர்களின் பாடல்களும் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் இன்றும் பாடப்பட்டு வருகின்றன.

மேலும், தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் ஆகிய பஞ்சபுராணங் களையும் கோயிலில் பாடி வருகின்றனர். இவ்வாறு அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் இசைக்கலையானது சிறப்புடன் வளர்ச்சியடைந்துள்ளது அறியற்பாலதாகும்.

### 5.1.3.2. தேவார காலத்து இசைக்கருவிகள்:

1. யாழ், 2.வீணை, 3. குழல், 4.கொக்கரி[13], 5.சச்சரி[14], 6. தக்கை[15], 7. முழவம், 8. சின்னரி[16], 9. மொந்தை[17], 10. மிருதங்கம், 11. மத்தளம், 12. தமருகம், 13. துந்துபி, 14. குடமுழா[18], 15. தத்தலகம், 16. முரசம், 17. உடுக்கை, 18. தாளம், 19. துடி, 20. கொடுதொட்டி முதலிய இசைக் கருவிகள் இருந்துள்ளமை அறியற்பாலதாகும்.[19]

### 5.1.4. ஒப்பனைக் கலை:

ஒப்பனைக் கலை என்பது அழகுக் கலை என்ற பொருளிலும் வரும். பலவிதவழிகளில் தம்மை ஒப்பனை செய்துகொண்டு தம்முடைய அழகை மேலும் சிறப்பாகக் காட்டிக்கொள்ளுதல் ஒப்பனைக் கலையாகும் என்பது அறியற்பாலதாகும்.[20] சோழ மன்னர்களின் ஆட்சிக்காலத்தில இக்கலை மிகவும் உன்னத நிலையிலிருந்தது. அதேபோல அருள்மிகு ஏகாம்பரநாதருக்கும் ஏலவார்குழலிக்கும் நறுமணம் கொண்ட மலர் மாலைகள் சாற்றுவது, இறைவன், இறைவி உற்சவ மூர்த்தங்களுக்குத் திருவாபாரணங்கள் சூட்டுவது, பலவித வடிவங்களில் இறைவனையும் இறைவியையும் அலங்காரம் செய்து வழிபடுவது ஆகியன ஒப்பனைக் கலையாகும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 5.1.5. கட்டிடக்கலை:

கோயில் வளர்த்த கலைகளுள் கட்டிடக்கலை இன்றியமையாததாகும். சங்க காலத்திலேயே கட்டிடக் கலைக்கு வழி காட்டுவது மனை நூல்கள் ஆகும். இந்நூல்கள் முறையோடு இயற்றப்பட்டிருந்தன. அக்காலத்தில் புகார், மதுரை, காஞ்சி, வஞ்சி முதலான நகரங்கள் நன்கு திட்டமிட்டு அமைக்கப்பட்டிருந்தன.

சங்க காலத்தில் அந்தணர், ஆசான் முதலியவர்கள் உடன் இருக்க அழகிய கோயில்கள் அமைக்கப்பட்டன. இவ்வாறு அவர்கள் அமைந்த கோயில்களில் ஒன்றுதான் காஞ்சியிலுள்ள அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயில் ஆகும். இதேபோன்று மதுரை, திருவேரகம், திருவாவினன்குடி, திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், பழமுதிர்சோலை, திருவேங்கடம், திருவரங்கம், திருவனந்தபுரம் முதலிய இடங்களிலும் அமைக்கப்பட்டதை அறிந்துகொள்ள முடிகிறது.[21]

சோழன் கோச்செங்கணான் காலத்தில் கி.பி.200-225ல் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் செங்கல், மரம், சுண்ணாம்பு போன்ற அழியக்கூடிய பொருள்களைக் கொண்டு கட்டியிருக்கக்கூடும். இதனையே திருநாவுக்கரசு நாயனார்

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும் பெருங்கோயில் எழுபதினோடெட்டும்" என்ற பாடல் மூலமாக உணர்த்துவது அறியற்பாலதாகும்.[22]

மேலும், திருமங்கையாழ்வாரும்,

"இருக்கிலங்கு திருமொழிவாய் என்தோளீசற்கு
எழில் மாடம் எழுபது செய்து உலகமாண்ட"

என்று பெரிய திருமொழியில் குறிப்பிடுவது அறியற்பால தாகும்.[23] ஆகவே, அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் கோச்செங்கணாணால் கட்டப்பட்டது என்றும், தலமரமாக மாமரத்தை உரிமையாக்கியதும் என்றும் தெளிவாகிறது. பிற்காலத்தில் வந்த அரசர்கள் பலர் இக்கோயிலை வளர்ச்சி யடையச் செய்திருக்கிறார்கள் என்பது உறுதியாகிறது.

### 5.1.6. *சிற்பக்கலை:*

கட்டிடக்கலையைப் போலவே சிற்பங்கள் பாரப்போர் மனதை ஈர்க்கும் வகையில் கலைச்செல்வமாகத் திகழ்கிறது. சிற்ப வல்லுநர்கள் இவ்வுலகத்தில் காணப்படும் உருவங்களை சுதை, மரம், கல், உலோகம் முதலிய பொருள்களினால் சிற்பங்களாகச் செய்து வந்தனர். இச்செய்தியினைத் திவாகர நிகண்டு மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.[24] போர்க்களத்தில் வீரமரணம் எய்திய வீரர்களுக்கு நடுகல் நட்டு அவற்றில் அவனது உருவத்தைச் சிற்பமாக வடித்ததை தொல்காப்பியர் காலத்தில் இருந்துவந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.[24]

சிற்பங்களைத் தெய்வத் திருவுருவங்கள், கற்பனை உருவங்கள், இயற்கை உருவங்கள், பிரதிமை உருவங்கள் என நான்கு வகையாகச் சொல்லலாம். அவற்றுள், தெய்வ உருவங்களைச் சைவ சமயம் சார்ந்தது, வைணவ சமயம் சார்ந்தது என்று இருவகைப்படுத்தலாம்.

அந்த வகையில் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் சரபேச மண்டபம், கம்பாதீர்த்தம், ஆயிரங்கால் மண்டபம், பல்லவர் கோபுரம், தம்பட்ட விநாயகர், விஷ்ணுவேச்வரர், இடபேசுவரர், சிவகங்கைத் தீர்த்தம், முதல் பிரகாரத்தில் காணலாகும் சிற்பங்கள், இரண்டாம் பிரகாரத்துள் காணலாகும் சிற்பங்கள், பௌர்ணமி மண்டபம், நடராசர் சந்நிதியில் காணலாகும் தூண் சிற்பங்கள், ஏலவார்குழலி உற்சவமூர்த்தி மண்டபத்தின் தூண் சிற்பங்கள், சபாநாதர் மண்டபம், கோயில் மதில்கள், மேற்கு இராசகோபுரம், லிங்கபேசுவரர் ஆலயம் ஆகிய 17 உட்பிரிவுகளில் உள்ள சிற்பங்கள் விளக்கப்படுகிறது.

### 5.1.6.1. சரபேச மண்டபம்:

சரபேச மண்டபம் என்பது அருள்மிகு ஏகாம்பரநாதர் தென்புற இராசகோபுரத்துக்கு நேராக உள்பகுதியில் அமைந்துள்ளது. இம்மண்டபத்தில் திருவிழா நடைபெறும் பொழுது வாகனங்கள் வண்டியில் வைக்கப்பட்டிருக்கும். அருள்மிகு ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் அலங்காரம் செய்யப்பட்ட பின்பு இம்மண்டபத்திலுள்ள வாகனங்களின் மீது வைத்து வீதியுலா எழுந்தருளச் செய்வர்.

சரபேச மண்டபத்தில் பத்து தூண்கள் அமைக்கப் பட்டுள்ளன. நடுவிலுள்ள இரு தூண்களில் இரு துவாரபாலகர்கள் சிற்பம் கையில் தண்டத்தையும் ஒரு காலை அதன்மேல் ஊன்றியும் நிற்கும் வகையில் செதுக்கப் பட்டுள்ளன. மேலும், இம்மண்டபத்தில் அமைந்துள்ள சிற்பங்களில்

1) அனுமன் உருவம் மற்றும்
2) கல்லால மரத்தின் கீழ் தட்சிணாமூர்த்தியும் தெற்கு திசையை நோக்கி யோக நிலையில் அமர்ந்திருக்கும் வடிவத்தில் செதுக்கப்பட்டுள்ளன.
3. கண்ணப்பநாயனார் காளத்தி இறைவனிடம் கொண்ட பக்தி சிற்பமாக அமைந்துள்ளது. காளத்தி மலையில் கோயில் கொண்டுள்ள காளத்திநாதரின் கண்களில் இரத்தம் வடிவதைக் கண்ட கண்ணப்பநாயனார் தம்முடைய வலது காலை இறைவன் கண்களில் அடையாளத்திற்காக ஊன்றிக் கொண்டு, தம்முடைய கையிலுள்ள அம்பினால் கண்ணப்ப நாயனார் கண்களைத் தோண்டும் காட்சி செதுக்கப்பட்டுள்ளது.
4. உமாதேவியார் காளி வடிவம் கொண்டு மகிஷாசூரனைக் கொல்லும் காட்சி சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.
5. ஒரு தூணில் பிரம்மா, திருமால் உருவங்கள் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளன.
6. விநாயகர், நடனமாடும் பெண் ஆகியவர்களின் உருவங்கள் செலுக்கப்பட்டுள்ளன.
7. அருள்மிகு ஏகாம்பரநாதர் ஏலவார்குழலி ஆகியவர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

### 5.1.6.2. கம்பா தீர்த்தம்:

கம்பா தீர்த்தம் என்று தற்போது அழைக்கப்படுவது பழைய காலத்தில் கம்பா நதியாக இருந்துள்ளது. இந்நதிக் கரையில்தான் ஏலவார்குழலி மணலால் லிங்கம் அமைத்து அருள்மிகு ஏகாம்பரநாதரை பூசைசெய்த இடமாகும். தற்போது இந்நதி பூமிக்கு அடியில் அந்தர்வாகினியாக பாய்கிறது என்பது ஆன்றோர் கூற்று.

கம்பா தீர்த்தத்தின் வடக்குக் கரையில் இரண்டு கல்லாலான சிங்கங்கள் காணப்படுகின்றன. இதன் அமைப்பை உற்று நோக்கும்போது காஞ்சி கயிலாசநாதர் கோயிலில் காணப்படும் சிங்கத்தின் சிலையைப் போன்றே

தோற்றமளிக்கின்றன. ஆகவே, இக்கோயிலைக் கட்டிய இராச சிம்மன் என்ற பல்லவ அரசனே அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலிலும் சிங்கச்சிலையை நிறுவியிருக்க வேண்டும் என்பது உறுதியாகிறது.[25] அதற்கு எதிர்புறத்தில் வரிசையாக நிறுத்தப்பட்டுள்ள கற்தூண்கள் சதுரமான வடிவத்தில் இருப்பதால் அது மகேந்திரவர்ம பல்லவன் காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம். எவ்வாறாகில் மகேந்திரன் காலத்துத் தூண்கள் நான்கு பக்கமும் சதுரமாகவும் நடுப்பகுதி எட்டுப்பட்டையாகவும், சதுரப்பகுதியில் தாமரைப் பூவின் சிற்பமும் அமைந்திருக்கும். எனவே, இந்தத் தூண்கள் பல்லவர் காலத்தது என்பது தெளிவாகிறது.[26]

### 5.1.6.3. ஆயிரங்கால் மண்டபம்:

சோழர்கள் காலத்தில் நூற்றுக்கால் மண்டபமாக இருந்தது விசயநகர மன்னர்கள் காலத்தில் ஆயிரங்கால் மண்டபமாக மாற்றப்பட்டது அறியற்பாலதாகும்.[27] அம்மண்டபத்தின் மேல் பகுதியில் இறைவியான ஏலவார்குழலி அருள்மிகு ஏகாம்பரநாதரை நோக்கித் தவம் செய்வது போலவும், அப்பொழுது கம்பாநதியின் வெள்ளத்திலிருந்து மணல் லிங்கத்தைக் காப்பாற்ற அப்படியே லிங்கத்தை தழுவுவது போன்ற காட்சிகள் சிற்பமாக செதுக்கப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

மேலும் அருள்மிகு ஏகாம்பரநாதரின் திருநடனக் காட்சியைச் சித்தரிக்கும் சிலையும், விநாயகர், முருகர் முதலியவர்களின் உருவங்களும் செங்கல் மற்றும் சுண்ணாம்புக் கலவையினால் செய்யப்பட்டுள்ளது அறியற்பாலதாகும்.

ஆயிரங்கால் மண்டபத்தில் சிறுசிறு அறைகள் தற்போதும் காணப்படுகின்றன. அவ்வறைகளில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் இருந்த அடிகள்மார் தங்கியிருந் துள்ளார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

அம்மண்டபத்துக்கு வலப்புறத்தில் அமைந்துள்ள பல்லவர் கோபுரத்தின் இடப்பகுதியில் விகடச்சக்கர விநாயகர் சிலை அமைந்துள்ள சிறிய கோயிலும், இடப்புறம் ஆறுமுகர் சிலையும் கொண்ட சிறு கோயில்கள் அமைந்துள்ளன.

ஆயிரங்கால் மண்டபத் தூண்களில் இரண்டு வரிசைகளிலுள்ள தூண்களின் அடிப்பகுதியில் சிங்கங்கள் தூணைத் தாங்குவது போன்று உள்ளது. ஆகவே, இவ்வகை அமைப்பை உற்றுநோக்கும்போது பல்லவர் காலத்தைச் சார்ந்தவை என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.[28] மற்ற வரிசையிலுள்ள தூண்களில் குதிரை மீது அமர்ந்த வீரன், யாளி என்றும் ஒருவகை விலங்கு, துர்கை முதலான உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளது. இன்னும் சற்று மேற்குப் பகுதியிலுள்ள தூண்கள் உருண்டைவடிவத்தில் எவ்விதச் சிற்ப வேலைப்பாடும் இல்லாமல் உள்ளது. பல்லவர் கோபுரத்தின் இருபக்கங்களிலுள்ள வாயில்களில் இரண்டு அழகான பதுமைகளின் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அதனை ஒட்டி விநாயகர், முருகர், வராகம் போன்ற உருவங்கள் தொடர்ச்சியாக செதுக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

### 5.1.6.4. பல்லவர் கோபுரம்:

பல்லவ மன்னர்களால் கட்டப்பட்ட கோபுரமாதலால் இக்கோபுரம் பல்லவர் கோபுரம் என்றழைக்கப்படுகிறது. இது ஏழு அடுக்குகள் கொண்டுள்ளது. ஒவ்வொரு அடுக்கிலும் வடக்கு நோக்கிய வண்ணம் இரு துவார பாலகர்கள் உருவச் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. கோபுரத்தின் கிழக்குப் பகுதியில் திருமாலின் உருவம் அமைக்கப்பட்டு உள்ளது.

கோபுரத்தின் மேல் விமானம் தாமரைமலர் போன்ற அகன்ற அமைப்பினைக் கொண்டுள்ளது. நான்கு திசைகளிலும் நந்தியின் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளது. இக்கோபுரத்தில் அமைக்கப்பட்டுள்ள துவாரபாலகர்கள் நான்கு

கைகளை உடையவர்களாகவும், இடது கையில் தண்டத்தை கீழே ஊன்றி வலது காலை அதன்மீது வைக்கப்பட்டுள்ளது போல் உள்ளது. இவ்வகையிலான துவாரபாலகர்களின் உருவங்கள் எதிர்பார்வை கொண்டதாகவும் உள்ளது. ஆகவே இவ்வகை மகேந்திரவர்மன் காலத்திலும் அவனது மகனான முதலாம் நரசிம்மவர்மனின் காலத்தில்தான் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.[1]

பல்லவ கோபுரத்தின் மேற்குப் பகுதியிலுள்ள 7 அடுக்குகளிலும் முதல் அடுக்கில் சாந்த நிலையிலுள்ள நரசிம்மர் உருவம் அமைக்கப்பட்டுள்ளது. மற்ற அடுக்குகளில் மகாலட்சுமியை அமர வைத்த நிலையிலும் நரசிம்மரின் உருவங்கள் அமைக்கப்பட்டு உள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். இக்கோபுரத்தின் இரண்டாம் அடுக்கில் இறைவியான ஏலவார்குழலி மணல் லிங்கத்தைக் கட்டித் தழுவுவது போன்ற உருவம் அமைக்கப்பட்டுள்ளது. கோபுரத்தின் மேல்தளத்தில் அருள்மிகு ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் அமர்ந்துள்ள நிலையில் உள்ள சோமாஸ்கந்த மூர்த்தம் அமைக்கப்பட்டுள்ளது.

### 5.1.6.5. தம்பட்ட விநாயகர்:

பல்லவர் கோபுரத்திற்கு எதிரில் தம்பட்ட விநாயகர் கோயில் உள்ளது. அக்கோயிலின் வெளிப்பகுதியில் சிங்கம் அடிப்பகுதியைத் தாங்குவது போன்ற கல்லினால் ஆன இருக்கை உள்ளது.

### 5.1.6.6. விஷ்ணுவேச்வரர் கோயில்:

விஷ்ணுவேச்வரர் கோயிலின் வெளிப்புறத்தில் இரு துவாரபாலகரின் கல் சிலைகள் தனியாகவுள்ளது. கோயிலின் உள்ளே லிங்கம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயில் கோபுரத்தின் வடக்குப் பகுதியில் பிரம்மா தெற்குப் பகுதியில் தட்சிணாமூர்த்தி ஆகியோரின் உருவங்கள் அமைக்கப்

பட்டுள்ளது. நான்கு திசைகளிலும் நந்தியின் உருவம் அமைக்கப்பட்டுள்ளது அறியற்பாலதாகும்.

### 5.1.6.7. இடபேசுவரர் கோயில்:

இடபேசுவரர் கோயில் மகேந்திரவர்ம பல்லவனால் அமைக்கப்பட்டது அறியற்பாலதாகும். இக்கோயில் கோபுரத்தின் தென்பகுதியில் கல்லால மரத்தின் கீழ் யோக நிலையில் அமர்ந்துள்ள தட்சிணாமூர்த்தியின் உருவம் அமைக்கப்பட்டுள்ளது.

### 5.1.6.8. சிவகங்கைத் தீர்த்தம்:

சிவகங்கைத் தீர்த்தமானது பண்டாசூரன் என்கிற அசுரனுக்காக உலக உயிர்கள் ஆகுதியாக வேள்வித் தீயில் தாமாக முன்வந்து பலியிடப்பட்டது. அத்தகைய வேள்வியில் ஹோம குண்டம் இருந்த பகுதிதான் தற்போது சிவகங்கைத் தீர்த்தம் என்றழைக்கப்படுகிறது. இதன் வடக்கிலும், கிழக்கிலும் சிறு தூண்களைக் கொண்ட தாழ்வாரம் போன்ற அமைப்பு உருவாக்கப்பட்டுள்ளது. தெப்போற்சவம் நடக்கும்போது மக்கள் அதனைக் கண்ணுறும் வகையில் இவை அமைக்கப் பட்டிருக்கலாம் என நம்பப்படுகிறது.

### 5.1.6.9. கோயிலின் முதல் பிரகாரத்தில் காணலாகும் சிற்பங்கள்:

1. முதல் பிரகாரத்தில் நுழையும் வாயிலின் இருபுறங்களிலுமுள்ளத் தூண்களில் வடபகுதியிலுள்ள தூணில் நடராசர் நர்த்தன தாண்டவம் ஆடுதல், பதினாறு வயது நிரம்பிய மார்க்கண்டேயனின் உயிரைப் பறிக்க வரும் எமதர்மராசன், லிங்கத்தைக் கட்டியணைத்த நிலையில் இருந்தாலும் அவர்கள் மீது பாசக்கயிற்றினை வீசும் காட்சி உள்ளபடியே செதுக்கப்பட்டுள்ளது. மணல் லிங்கத்தை வெள்ளத் திலிருந்து காப்பாற்றும் நோக்கத்துடன் ஏலவார்குழலி கட்டித்தழுவும் காட்சியும் வடிக்கப்பட்டுள்ளது.

2. தலையில் கொண்டை அணிந்த தோற்றமுடைய வீரன் வலது கையில் கத்தியையும், இடது கையில் தண்டத்தையும் கொண்டுள்ள சிற்பம் தூண்களில் செதுக்கப்பட்டுள்ளன.

3. மற்றொரு தூணில் அன்னப்பறவை, யாளி எனும் ஒருவகை மிருகம், கொம்புடைய மிருகம், சிரிக்கும் முகம் கொண்ட சிங்கம் ஆகியவற்றின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

4. பூக்கூடையைக் கையில் கொண்டுள்ள பெண், நாட்டிய மங்கை, நந்தியின் உருவம், குதிரை வீரன், அனுமன், யானை, நாய் போன்றவைகளின் உருவங்கள் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளன.

5. தலையில் கொண்டையுடன் கூடிய பெண் தனது கையில் இசைக் கருவியை வைத்துள்ள காட்சி, மற்றும் ஒரு பெரிய நாகம் சிவலிங்கத்தைப் படமெடுத்து காத்தல் முதலிய உருவங்கள் உள்ளன. இப்பிரகாரத்தின் தெற்குப்புறச் சுவரின் அருகில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் திருவுருவங்களும், அவற்றின் பின்புறம் சுவற்றில் நாயன்மார்களது உருவங்கள் ஓவியங்களாக வரையப்பட்டு பின்னர் அவை மறைக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

### 5.1.6.10. இரண்டாம் பிரகாரத்தில் காணப்படும் சிற்பங்கள்:

1. இரண்டாம் பிரகாரத்தில் நுழையும்போதே வலப்பக்கத் தூணில் விநாயகர் உருவமும், இடப்பக்கத்தில் எட்டு கைகளைக் கொண்ட பிரளயகாளியின் உருவமும் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளன.

2. அதற்கு அடுத்து வலப்பக்கத்தூணில் கயிலையில் சிவபெருமான் கண்களை உமாதேவியார் மூடிய நிகழ்ச்சி செதுக்கப்பட்டுள்ளன.

3. இடப்பக்கத்தூணில் சிவபெருமான், உமாதேவியாரைத் திருமணம் செய்துகொள்ளும் காட்சி, திருமால் தம் தங்கையாகிய உமாதேவியை சிவபெருமானுக்கு மணம் செய்து கொடுக்கும் காட்சியும் செதுக்கப்பட்டுள்ளன.

**தென்புறமுள்ள தூண்:**

1. எட்டு கைகளையுடைய காளி மகிடாசூரமர்த்தினியாய் மகிடாசூரனைக் கொல்லும் காட்சி வடிக்கப்பட்டுள்ளது.
2. காபாலிகனின் தோற்றம் மற்றும் காலபைரவர் உருவம் முதலியன செதுக்கப்பட்டுள்ளன.
3. சிவபெருமானின் நடனக்காட்சி, கையில் சங்குடன் ஆணின் தோற்றம், உட்கார்ந்த நிலையில் உள்ள சிங்கம் முதலியவை செதுக்கப்பட்டுள்ளன.
4. வராக அவதாரக் காட்சியைச் சித்திரிக்கும், மகாலட்சுமியை மடியில் வைத்திருக்கும் வகையில் சிற்பங்களும் செதுக்கப்பட்டுள்ளன.
5. நரசிம்மாவதாரம் கொண்டு இரணியனைத் தன் மடியில் வைத்துக் கொல்லும் காட்சி செதுக்கப்பட்டுள்ளன.

**5.1.6.11. பௌர்ணமி மண்டபம்:**

பவித்திரவிழா ஆடிமாதம் நடைபெறும், இவ்விழா இம்மண்டபத்திலேயே நடைபெறுவதால் இதனைப் பவித்திர மண்டபம் என்றழைக்கப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். இந்த பௌர்ணமி மண்டபத்தில் அமைந்துள்ள மண்டபத் தூணை பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஜோவிடுப்ரோல் கண்ட பிறகு மகேந்திரவர்மன் காலத்துக்கு முன்னரே கோயில் கட்டிடங்கள் தமிழகத்தில் இருந்துள்ளதை உறுதிப்படுத்தி Conjeevaram Inscriptions of Mahendravarman-I by G. Jouven Dubrense of Pondicherry College 1919 என்ற நூல் எழுதியுள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.[29]

மேலும் இம்மண்டபத்திலுள்ள ஒரு கல் தூணில் 'அபிமுக', 'சித்ரகாரபுலி', 'கூற்றம்பு' முதலிய மகேந்திர வர்மனுடைய சிறப்புப் பெயர்கள் எழுதப்பட்டுள்ளது அறியற்பாலதாகும்.[30] இம்மண்டபத்தில் தற்போது பிரதோஷ காலத்தில் அருள்மிகு ஏகாம்பரநாதர் ஏலவார்குழலி உற்சவமூர்த்தி அபிஷேக அலங்காரங்கள் செய்யப்பட்டு பக்தர்களின் வழிபாட்டுக்கு வைக்கப்படுகின்றன.

### 5.1.6.12. நடராசர் சந்நிதியில் காணலாகும் தூண் சிற்பங்கள்:

இரண்டாம் பிரகாரத்தில் வடக்குப்பகுதியில் நுழைந்தவுடன் நடராசர் சந்நிதியில் தூண் சிற்பங்கள் அழகுடன் காணப்படுகின்றன.

**1. பிட்சாடனர்:**

சிவபெருமான் முனிபத்தினிகளின் அகங்காரத்தை அடக்கும் வகையில் தாமே பிட்சாடனர் உருவம் மேற்கொண்டார். அவ்வுருவத்தைப் பிரதிபலிக்கக்கூடிய வகையில் சிற்பம் செதுக்கப்பட்டள்ளது.

**2. நரசிம்ம அவதாரம்:**

இரணியன் மகன் பிரகலாதன் தன் தந்தையின் பெயரை உச்சரிக்காமல் 'ஓம் நமோ நாராயணாய' என்ற நாமத்தை உச்சரிக்க, கோபம் கொண்ட இரணியன் பிரகலாதனைக் கொல்ல முற்பட்டபோது மகாவிஷ்ணு நரசிம்மாவதாரம் எடுத்து இரணியனைத் தம் மடியின் மேல் வைத்துக் கொல்லும் காட்சி சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது.

**3. கண்ணப்பநாயனார் தம் கண்ணைப் பெயர்த்தெடுத்தல்:**

திருக்காளத்தி மலையில் கோயில் கொண்டுள்ள எம்பெருமானின் கண்களில் இரத்தம் வடிவதைக் கண்ட கண்ணப்பநாயனார் தமது வலது காலை இறைவன்

கண்மேல் அடையாளம் வைத்துக்கொண்டு, அம்பினால் தம் கண்களைப் பெயர்த்து எடுக்கும் காட்சி சிற்பமாக செதுக்கப்பட்டள்ளது.

4. தட்சணாமூர்த்தி:

கல்லால மரத்தின் கீழ் தெற்கு நோக்கி சின்முத்திரை காட்டி தவத்தில் அமர்ந்திருக்கும் தட்சணாமூர்த்தியின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது.

5. பிரளயகால காளி:

எட்டு கைகளைக் கொண்ட கோபப் பார்வையுடைய பிரளயகால காளியின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது.

6. வராகம்:

திருமால் வராக அவதாரம் கொண்டு இரண்யகசிபுவைக் கொன்றதை நினைவுறுத்தும் சிற்பமாகும்.

7. மழு, பிறைச்சந்திரன், முழுமதி, நாட்டியமாடும் மங்கையின் தோற்றம் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.

8. மேலும் கீழ்க்காணும் சிற்பங்கள் உள: தலையில் கொடி சுற்றிய நாட்டியமாடும் மங்கை.

9. நான்கு கைகளைக் கொண்ட உமாதேவியார் சின் முத்திரை காட்டும் உருவம்.

10. சிவபெருமானின் தளபதிகளாகக் கருதப்படும் சிவகணங்களின் உருவம்

11. மயில் வாகனத்துடன் முருகப்பெருமான் உருவம்

12. மேளம் கொட்டும் வீரன்

13. நாட்டியமாடும் மங்கை

14. சிவபெருமான் அமர்ந்த கோலத்திலும், உமாதேவியார் நின்ற கோலத்திலுமுள்ள உருவம்

15. மாவின் கீழ் அருள்மிகு ஏகாம்பரநாதர் அமர்ந்த நிலை ஏலவார்குழலி நின்ற நிலையிலுள்ள தோற்றம்

16. சிங்கத்தின் முதுகில் இடது காலை வைத்துக்கொண்டு கைகளில் சூலம் ஏந்திய கொற்றவையின் உருவம்

17. விநாயகர் நர்த்தனமாடும் காட்சி

18. மயில்மீது அமர்ந்த முருகப்பெருமான்

19. இடப வாகனத்தின்மீது அருள்மிகு ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் அமர்ந்த தோற்றம்

20. நான்கு கைகளையும் நேர்முகப்பார்வையும் கொண்ட தூவாரபாலகர்கள் உருவம்.

### 5.1.6.13. ஏலவார்குழலி உற்சவ மூர்த்தி மண்டபத்தூண் சிற்பங்கள்:

இரண்டாம் பிரகாரத்தில் வடபகுதியில் ஏலவார்குழலி சந்நிதி உள்ளது. அதில் உள்ள சிற்பங்கள்.

1. நாட்டிய மங்கை ஒயிலாக நாட்டியமாடும் காட்சி அழகுற செதுக்கப்பட்டுள்ளது.

2. கண்ணப்பர் தனது வலது காலை சிவலிங்கத்தின் மீது வைத்து அம்பால் தன் கண்ணை பெயர்க்கும் காட்சி செதுக்கப்பட்டள்ளது.

3. தாமரை மலர் அழமுற செதுக்கப்பட்டள்ளது.

4. கொற்றவை, முருகர், நடனமாது; முனிவர் தவம் இயற்றும் காட்சி.

5. கால பைரவர், காவல் தெய்வமான சாத்தன்

6. ஒருநபர் கையில் மேளம் கொட்டும் நிலையில் உள்ள சிற்பம்; அதற்கேற்றபடி நடனமாடும் பெண்கள்.

7. விநாயகர், திருமால், காளி, தட்சணாமூர்த்தி

8. ஏலவார்குழலி சிவபெருமானை பூசை செய்யும் காட்சி, வில்லினைக் கையில் கொண்ட வீரர் உருவம் முதலியவை சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளன.

9. மேளமடிக்கும் வீரர், வாயில் சங்கு ஊதும் வீரன், பன்றி, இடபவாகனம், நடனமாது, புருடாமிருக உருவம் முதலியவை செதுக்கப்பட்டுள்ளன.

10. மாவின் கீழ் லிங்கம், மத்தளம் கொட்டுவதும், அதற்கேற்ப நடனமாடுவது போன்ற உருவமும், பிறைச் சந்திரன், எருது, மழுவாயுதம், முழுநிலா முதலிய உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளது.

11. பெருச்சாளி வாகனத்தில் விநாயகர், கையில் ஊதுகுழல் கொண்ட வீரர் முதலிய உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

12. ஆண், பெண், ஒருவர் தோளின் மீது மற்றவர் கைபோடும் காட்சி செதுக்கப்பட்டுள்ளது.

13. சிவலிங்கத்தை அனுமன் வணங்கும் காட்சி, விநாயகர், முருகர் முதலியவர்களின் உருவங்கள் செதுக்கப் பட்டுள்ளன.

**சபாநாதர் மண்டபம்:**

சபாநாதர் மண்டபத்திலுள்ள தூண்களை உட்கார்ந்த சிங்கங்கள் தூண்களைத் தாங்குவது போல அமைக்கப் பட்டுள்ளது. இவ்வகைத் தூண்களை முதன்முதல் உண்டாக்கியவன் முதலாம் நரசிம்மவர்மன் ஆவார் என்பது அறியற்பாலதாகும்.[31]

**இம்மண்டபத் தூண்களில் அமைக்கப்பட்டுள்ள சிற்பங்களாவன:**

பெரும்பாலான தூண்களில் யாளி எனும் ஒருவகை மிருகத்தின் உருவம் மற்றும் காளி தாண்டவமாடும்

காட்சி, மத்தளம் வாசித்தல் முதலிய உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

2. காலபைரவர் மற்றும் பிரளயகால காளியின் தோற்றம்

3. உமாதேவியார் சிவபெருமானுக்கு மாலையிடல், போர் வீரர்கள் முதலிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

4. நடராசர் தாண்டவமாடும் காட்சி; வெள்ளத்தால் சிவலிங்கம் அழியாமல் இருப்பதற்காக ஏலவார்குழலி கட்டித் தழுவுதல் முதலிய சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ளன.

5. எமதர்மராசன் மார்கண்டேயன் மீது பாசக்கயிறு வீசும் காட்சி; ஒரு காலில் தவம் செய்யும் குதிரைவீரனின் காட்சி முதலியவை சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன.

**கோயில் மதில்கள்:**

இரண்டாம் பிரகாரத்தை ஒட்டியுள்ள மதிலில் 10 அடிக்கு ஒரு நந்தியின் உருவச்சிலை அமைக்கப்பட்டள்ளது. பல்லவர் கோபுரத்தின் நேர் எதிரில் நந்திமீது அமர்ந்துள்ள நிலையில் அருள்மிகு ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் அமர்ந்தநிலையில் உள்ளனர்.

இம்மதில் சந்திக்கும் நான்கு மூலைகளிலும் இரண்டு நந்திகள் இணைந்தும் நடுவில் ஒரு சிவபூதம் அமர்ந்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**மேற்கு இராசகோபுரம்:**

மேற்கு இராச கோபுரத்தின் அடிப்பகுதி கருங்கல்லினால் அமைக்கப்பட்டுள்ளது. மேலே உள்ள ஏழு அடுக்குகளும் செங்கல்லால் கட்டப்பட்டுள்ளன. இவ்வகைக் கோபுரம் முற்காலச் சோழ மன்னர்கள் ஆட்சியில் கட்டப்பட்டு வந்துள்ளது. அவ்வகையில் இம்மண்டபமும் சோழ மரபினரால் கட்டப்பட்டு இருக்கலாம் என்பது

குறிப்பிடத்தக்கதாகும். அனைத்து அடுக்குகளிலும் துவார பாலகர்கள் இடது கையில் தண்டம் தாங்கி வலது காலை அதன்மேல் ஊன்றிய நிலையில் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளது. கோபுர விமானத்தை நான்கு திசைகளிலும் நான்கு வீரர்கள் தாங்கிப் பிடிப்பதுபோல் உள்ளது. விமானத்தின் இருபுறமும் விநாயகர், முருகர் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளது.

இம்மண்டபத்திற்கு வடகிழக்கே சதுரவடிவத் தூண்களைக் கொண்ட கோயில் ஒன்று இடிந்த நிலையில் காணப்படுகிறது. இத்தூண்களில் இராமபிரான் கையில் வில்லுடன் நின்ற கோலத்தில் தோற்றம் அளிக்கிறார். அனுமார் அமர்ந்த நிலையிலும் இராமர் அவருக்கு ஆசீர்வாதம் வழங்குவது போன்ற சிற்பம் காணப்படுகிறது.

கோயிலின் அடிப்பீடத்தில் நர்த்தன விநாயகரின் உருவம் உள்ளது. தாமரை மலர்களின் சிற்பம் தூண்களில் உள்ளது. கிழக்குப் பகுதியில் உள்ள தூணில் மாமரத்தின் கீழ் ஏகாம்பரநாதருக்கு ஏலவார்குழலி பூசை செய்வது போன்ற சிற்பம் அமைந்துள்ளது. இக்கோயிலின் வடக்கு, மேற்குப் பகுதிகளில் பல கல்தூண்களைக் கொண்ட மண்டபம் இரு அடுக்கில் காணப்படுகிறது. இம்மண்டபத் தூண்களில் சிவபூதம், கால பைரவர், அனுமார், இராமர், சிவலிங்கத்தை இறைவி பூசை செய்தல் போன்ற உருவங்கள் செதுக்கப் பட்டுள்ளன.

ஒரு வரிசையில் உருளை வடிவத் தூண்களும், மற்றொரு வரிசையில் சதுரவடிவத் தூண்களும் அமைக்கப்பட்டுள்ளது. உருளை வடிவத் தூண்களில் சிற்பங்கள் காணப்படவில்லை. சதுரவடிவத் தூண்களில் மட்டும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

அனுமார், காளிதேவி, நடராசர் முதலியவர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. முனிவர் யாகம் செய்தல்,

தேவகணங்கள் இசைக்கருவி வாசித்தல், மயிலுடன் முருகர், நாட்டியமாடும் நடனமாது முதலியவர்களின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**லிங்கபேசுவரர் ஆலயம்:**

லிங்கபேசுவரர் ஆலய அடிப்பகுதி கருங்கல்லினால் அமைக்கப்பட்டது. கோபுரம் மூன்று அடுக்குகளைக் கொண்டுள்ளது. மேலே செல்லும்போது அகலம் குறைந்து காணப்படுகிறது. மகேந்திரவர்ம பல்லவன் காலத்தில் இக்கோயில் கட்டப்பட்டதாகக் கருதப்படுகிறது. இதில் அமைக்கப்பட்ட இலிங்கம் மானுடலிங்கமாகும்.

**5.1.7. ஓவியக்கலை :**

சிற்பக்கலையைப் போலவே உயிருள்ள, உயிரற்றப் பொருள்களை நேரிலோ, கற்பனையிலோ ஓவியமாகத் தீட்டி மக்களை பரவசப்படுத்தும் கலை ஓவியக்கலையாகும். அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் ஓவியக் கலையும் சிறப்பாக உள்ளன. ஓவியக்கலையானது நம் நாட்டில் தொன்றுதொட்டு நிலவக்கூடிய ஒரு கலையாகும். அக்காலத்து ஓவியங்கள் பெரும்பாலும் சுவர்களிலும், கூரையின் உள்பகுதியிலும் வரையப்பட்டிருந்ததை அறிய முடிகிறது.[32] மகேந்திரவர்மன் எனும் பல்லவ மன்னன் ஓவியக்கலையில் தேர்ச்சி பெற்றவனாதலால் சித்திரக்காரப்புலி என அழைக்கப்பட்டார்.

ஏகாம்பரநாதர் கோயில் நூற்றுக்கால் மண்டபத்தின் விதானப் பகுதியில் ஓவியங்கள் வரையப்பட்டு பின்னர் அவை ஏதோ ஒரு பொருளினால் பூசப்பட்டு மறைக்கப்பட்டுள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது. இவ்வகை ஓவியங்கள் பெரும்பாலும் பல்லவர், சோழர் காலத்தைச் சார்ந்திருக்கலாம் எனவும் அனுமானிக்க முடிகிறது. மகேந்திரவர்மனால் காஞ்சி கோயில்களில் வரையப்பட்ட ஓவியங்கள் பெரும்பாலும் அதிக அளவில் மறைந்துவிட்டன என்பது கண்கூடு. காஞ்சியில்

உள்ள கயிலாசநாதர் கோயில் இராசசிம்மனால் கட்டப்பட்டது. இக்கோயிலில் காணப்படும் சோமாஸ்கந்தர் பற்றிய ஓவியத்தில் அருள்மிகு ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் சோமாஸ்கந்த மூர்த்தமாகக் காட்சியளிப்பது அழகுற தீட்டப் பட்டுள்ளது அறியற்பாலதாகும்.[34] இக்காட்சியையே

``ஏலவார் குழலார் இறைவிக்கும் எம்பிரான்தமக்கும்
பாலன் ஆகிய குமரவேள் நடுவு உறும் பான்மை''

என்று இந்த ஓவியத்தின் அழகு கந்தபுராணத்தில் விளக்கப் பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.[35]

அடுத்து, ஆட்சிக்கு வந்த விசயநகர மன்னர்கள் நூற்றுக்கால் மண்டபத்தை ஆயிரங்கால் மண்டபமாக மாற்றியது குறிப்பிடத்தக்கதாகும். இம்மண்டபத்திலும் மறைந்து போன ஓவியங்கள் காணப்படுகின்றன.

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் முதல் பிரகாரத்தின் வடக்கு, தெற்குப் பகுதியில் கோயிலின் விதானப் பகுதியில் ஓவியங்கள் காணப்படுகின்றன. நடுப்பகுதி வட்ட வடிவமாகவும், நான்கு மூலைகளிலும் தேவமாதர்கள் காணப்படுகின்றனர். இவ்வகை ஓவியமானது நீலம், காவி, மஞ்சள் போன்ற நிறங்களில் காணப்படுகிறது. கிருஷ்ணதேவராயர் இக்கோயிலின் வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்டதால் இவ்வகை ஓவியங்கள் விசயநகர மன்னர்கள் காலத்தைச் சார்ந்தவை என்பது தெளிவாகிறது.[36] இக்கருத்துக்கு உறுதிசேர்க்கும் வகையில் காஞ்சிபுரம் வரதராசர் கோயிலில் உள்ள சிறு மண்டபத்தில் காணப்படும் ஓவியம் காணப்படுகிறது. ஆகவே அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் முதல் பிரகாரத்தில் காணலாகும் ஓவியம் இக்காலத்தைச் சேர்ந்ததே என்பது அறியற்பாலதாகும்.

மேலும் ஓவியக்கலை விசயநகர மன்னர்களின் காலத்தில் காஞ்சியில் உன்னதமான வளர்ச்சியடைந்து இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.[37]

# இயல் ஐந்து
## சான்றெண் விளக்கம்

1. சீவகசிந்தாமணி ப.718-720

1அ. இவ்வழிபாட்டுமுறை பற்றி ஏகாம்பரநாதர் கோயில் குருக்கள் திரு.நாராயண தீட்சிதர் அவர்களிடம் 4-9-2006-இல் பேட்டிகண்டு இங்கு அளிக்கப்படுகிறது.

3. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள் ப.48
4. சிலப்பதிகாரம் கடலாடுகாதை 39-44
5. திருவேகம்பன் செம்பொற்கோயில் தலவரலாறு ப.9
6. தமிழக வரலாறும், பண்பாடும் ப.329
7. பல்லவர் வரலாறு ப.288
8. தமிழர் சமுதாயம் ப.329
9. EP.Rep.57:16 EP Rep: 446/2930

9அ. காந்தாரம் - ஏழு இசைகளுள் ஒன்று பரதகலை ராக சுத்தியம் எண்.42 தமிழ் லெக்சிகன் ப.866

10. திருநாவுக்கரசு நாயனார் தேவாரம் நான்காம் திருமுறை 4-7-1-4-7-10

10அ. முற்காலத்தில் வழங்கிய ஒருவகை சிறு பண். தமிழ் லெக்சிகன் ப.115

11. மேலது ஐந்தாம் திருமுறை 5-31-1-5-48.2
12. மேலது ஆறாம் திருமுறை 6.64.1 - 6.65.10
13. தமிழக வரலாறும் பண்பாடும் ப.342
14. கொக்கரி - ஆரவாரம் செய்யும் கருவி, தமிழ் லெக்கிகன் ப.1231 Vol III
15. சச்சரி - A Kind of Drum, மேலது-ப-1231 Vol III
16. தக்கை அகப்புற முழவு; ஒருவகை மேளம், மேலது ப.944 Vol II
17. கின்னரி - யாழ்வகை, மேலது ப.944
18. மோந்தை - மட்பாண்டத்தினால் இசை எழுப்புதல், மேலது ப.965

19. குடமுழா-வாத்திய வகை- A larse heavy hencal loved soundry drum மேலது ப.965
20. பல்லவர் வரலாறு ப.284
21. தமிழக கோயிற்கலைகள் ப.283
22. திருநாவுக்கரசு நாயனார் தேவாரம் திருஅடைவு திருத்தாண்டகம்-5
23. பெரிய திருமொழி 6ஆம் பத்து 6ஆம் திருமொழி 6.6.8
24. தமிழகக் கோயிற்கலை - ப.13
25. பல்லவர் வரலாறு கயிலாசநாதர் கோயில் ப.160
26. மகேந்திரவர்மன் ப.48
27. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1893 எண்.1-13
28. வாதாபி கொண்ட நரசிம்மவர்மன் ப.90
29. மகேந்திரவர்மன் ப.41
30. மேலது ப.41
31. வாதாபி கொண்ட நரசிம்மவர்மன் சிற்பக்கலை ப.90
32. மகேந்திரவர்மன் ஓவியங்கள் ப.114
33. மேலது ப.114
34. இந்திய ஓவியக்கலை ப.65
35. மேலது ப.65
36. இந்திய ஓவியம் விசயநகரம் ப.88
37. கோயிற்களஞ்சியம் அறிமுகம் ப.110

## இயல் ஆறு

# அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் வழிபாட்டுப் பயன்கள்

### 6.0 முன்னுரை:

கோயில் வளர்த்த கலைகள் என்ற இயலின்வழி மக்கள் வழிபாட்டின் நிலை பெறுகவே இவ்வியலில் அவ்வழிபாட்டின் விளைவால் உண்டான பயனை ஆய வேண்டியுள்ளது. எனவே, இவ்வியலில் கோயில் வாழ்வு, சிவாச்சாரியார்கள், பரிசாரகர்கள், தேவார ஓதுவார்கள், இசைக்காரர்கள், அருள்மிகு ஏகாம்பரநாதரை வழிபடுவதால் அமைதியான வாழ்க்கை-திருநாவுக்கரசு நாயனார் வழிபாடு; திருஞான சம்பந்த நாயனார் வழிபாடு; சுந்தரமூர்த்தி நாயனார் வழிபாடு; பிரமன் வழிபாடு; உருத்திரர் வழிபாடு; வாலி வழிபாடு; பங்குனி உத்திரத் திருநாள் வழிபாடு, கோயிலில் நடைபெறும் சமுதாயப் பணி, சைவ மடங்கள், வேண்டுதல்கள், அறப்பணிகள், கோயில்களால் சமுதாயத்திற்குக் கிடைத்த பயன்கள் கோயில்களால் சமயத்திற்குக் கிடைத்த நன்மைகள் என 12 தலைப்புகளில் இவ்வியல் விளக்கப்பட்டுள்ளது.

### 6.1. கோயில் வாழ்வு:

சமுதாய வாழ்க்கையில் கோயில்கள் இன்றியமையாத இடத்தை வகிக்கின்றது. கோயில் வாழ்வு என்பது இறைவனின் வழிபாட்டுக்கு மேன்மை செய்யும் வகையில் அந்த இறைவனை மந்திரங்கள் சொல்லி பூசிக்கின்ற சிவாச்சாரி யார்கள், அவர்களுக்கு உதவி செய்யும் வகையில் பணிபுரியும் பரிசாரகர்கள், இந்த இரண்டு வகைக்காரர்களின் தேவைகளைக் கொடுப்பதற்காக உள்ள அதிகாரிகளும் ஆகிய மூவகையைச் சேர்ந்தவர்கள் ஆவர். இவர்களுக்கு உறுதுணையாக இறைவன் வழிபாட்டை நாள், பட்சம், வாரம், மாதம் ஆகிய எல்லாக் காலங்களிலும் மங்களகரமாக நிகழ தேவாரம் ஓதுவார்கள், கோயிலில் பண் இசைப்பவர்கள்,

வாத்தியங்கள் மற்றும் சுற்றுச் சூழலை சுத்தமாகப் பராமரிப்பவர்கள் தேவைப்படுகிறார்கள். இவர்களுடைய வாழ்வு கோயிலோடு ஒன்றிவிட்ட நிலையில் அமைந்ததால் வழிபடும் மக்கள் இறைவனை வழிபட்டு தங்கள் பயனைப் பெறுவதில் நம்பிக்கை மிக்கவர்களாகத் திகழ்கின்றார்கள். எனவே, முற்கூறிய பணியாளர்கள் கோயில் வாழ்க்கைக்கு இன்றியமையாதவர்களாவர்.

### 6.1.1. சிவாச்சாரியார்கள்:

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் சிவாச்சாரியார்கள் மக்கள் இறைவனை வழிபடுவதற்கேற்ப காலையிலிருந்து இரவு வரை ஆறுகால பூசைகள் செய்து, அலங்காரங்கள் செய்வர். விழாக்காலங்களில் மிகவும் நேர்த்தியான அலங்காரங்களை அருள்மிகு ஏகாம்பரநாதருக்கு செய்கின்றார்கள். இது மக்களை ஈர்க்கும் வகையில் பக்திப் பெருக்கை மேலிடச் செய்வதாக அமையும். அதே சமயத்தில் குடமுழுக்கும், பிரம்மோத்சவம் முதலிய பெரிய விழாக்களிலும் அவர்களின் பங்கு மக்களுக்கு மேம்பாடு செய்வதாகவே அமைந்துள்ளது அறியற்பாலதாகும்.

### 6.1.2. பரிசாரகர்கள்:

இறைவனுடைய வழிபாட்டுக்கு உறுதுணையாக சிவாச்சாரியார்கள் செய்கிற பணியில் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து தூபம் எடுத்துக் கொடுத்தல், தீபத்தினை ஏற்றிக் கொடுத்தல், நைவேத்தியங்களைக் கொண்டு வைத்தல், நைவேத்தியத்தை இறைவனுக்குப் படையல் செய்யும்போது மணியடித்தல் முதலான பல்வேறு இறைப்பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொள்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 6.1.3. தேவார ஓதுவார்கள்:

காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் தினமும் ஆறுகால பூசைகளின்போது ஓதுகிற நெறி குலோத்துங்கச் சோழன் காலத்தில் இருந்து நடைபெறுவது

குறிப்பிடத்தக்கதாகும். அதன் தொடர்ச்சியாக இன்று தேவாரத்தை ஓதுகின்ற நெறி அமைந்துள்ளது காணலாம்.

### 6.1.4. இசைகாரார்கள்:

ஆறுகால பூசையின் போதும் மற்றும் திருவிழாக் காலங்களிலும் நாதசுரத்தோடு, தவில் வாத்தியங்கள் இயங்கும் நெறி சைவ ஆகம முறைப்படி நடந்து வருகிறது. இது பெரும்பாலும் பிற ஒலிகளுடைய அமங்கலச் சொற்கள் இறைவன் காதில் விழாதவண்ணம் இந்த வாத்தியங்கள் ஒலிக்கப்படுகிறது.

## 6.2. அருள்மிகு ஏகாம்பரநாதரை வழிபடுவதால் அமைதியான வாழ்க்கை:

இறைவன் வழிபடுவதால் அமைதியான வாழ்க்கை அமைகிறது. அதற்கு எடுத்துக்காட்டாக சமயக்குரவர்களாகிய திருநாவுக்கரசு நாயனார், திருஞானசம்பந்த நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், பிரமன், ருத்திரன், வாலி ஆகியோருடைய வழிபாட்டின் பயனை அறிய வேண்டியுள்ளது. மற்றும் பங்குனி உத்திரத் திருநாளின் வழிபாடு, அதனால் மக்கள் பெறும் பேறும் அறிய வேண்டியுள்ளது.

### 6.2.1. திருநாவுக்கரசு நாயனார் வழிபாடு:

சைவ சமயக் குரவர்களில் முதலாமவரான திருநாவுக்கரசர் தாம் கருவில் இருந்தபோதே "கருவுற்ற நாள் முதலாக உன் பாதமே காண்பதற்கு" என்கிறபடியே அருள்மிகு ஏகாம்பரநாதரை மனதில் நிலைநிறுத்தியதாகத் தாம் அருளிய தேவாரத்தில் குறிப்பிட்டது காணலாம்.[1]

### 6.2.2. திருஞானசம்பந்த நாயனார் வழிபாடு:

சைவ சமயக் குரவர்களில் இரண்டாமவராகிய திருஞான சம்பந்த நாயனார் அருள்மிகு ஏகாம்பரநாதரை வழிபாடு செய்தால் நமது கொடிய துன்பங்கள் அனைத்தும்

முழுவதுமாக அகலும் என்பதற்கேற்ப

'ஏகம்பம் தொழுதுஏத்த இடர் கெடுமே

என்ற தொடர் நினைவுபடுத்துவது அறியற்பாலதாகும்.[2]

### 6.2.3. சுந்தரமூர்த்தி நாயனார் வழிபாடு:

சுந்தரமூர்த்தி நாயனார் தாம் செய்த சத்திய மீறலின் விளைவாக இரு கண்பார்வையையும் இழந்து விடுகிறார்; பின்பு காஞ்சிபுரம் வந்து அருள்மிகு ஏகாம்பரநாதரிடம் தம்முடைய குற்றத்தைப் பொறுத்து மீண்டும் தம்முடைய கண்பார்வையை அளிக்குமாறு வேண்டி வழிபட்டார். அவரது வேண்டுகோளை ஏற்று அருள்மிகு ஏகாம்பரநாதர் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு இடது கண்பார்வையை அளித்தார். இதனை

"ஆலந்தான் உகந்து அமுதுசெய்தானை
..............................................................
..............................................................
கால காலனைக் கம்பன் எம்மானைக்
காணக்கண் அடியேன் பெற்றவாறே"

என்ற பாடல் மூலம் உணர்த்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[3]

### 6.2.4. பிரமன் வழிபாடு:

இறைவன் ஆணையாலும், அருளாலும் பிரமன் உலகைப் படைப்பவன். அவன்தம் செயல் இனிதே நிறைவேற இறைனை வணங்குவர். அந்த வகையில் அருள்மிகு ஏகாம்பரநாதரை வணங்கினார் என்பதற்கேற்ப ஏகாம்பரநாதரை "வெள்ளக்கம்பர்" என்று அழைத்ததாக சிவஞானமுனிவர் குறிப்பிடுவது அறியற்பாலதாகும்.[4]

### 6.2.5. உருத்திரர் வழிபாடு:

அருள்மிகு ஏகாம்பரநாதரை உருத்திரதேவன் உத்தம மனத்துடன் வழிபட்டதால் நல்லகம்பர் எனப் பெயர் பெற்றார். அருள்மிகு ஏகாம்பரநாதரை உண்மையான பேரன்புடன்

வழிபாடு செய்தால் மேன்மையான நிலையை அடையலாம் என்பதை "உருத்திரன் நலத்தகும் ஒருமை பூண்டுயர்" என்ற காஞ்சிப்புராணத் தொடர் உணர்த்துவது குறிப்பிடத் தக்கதாகும்.[5]

### 6.2.6. வாலி வழிபாடு:

இராமாயணத்தில் வரும் குரக்கரசனான வாலி அருள்மிகு ஏகாம்பரநாதரை வழிபாடு செய்தான். அதனால் அவரை எதிர்ப்பவரின் பலத்தில் பாதியை வாலி பெறுவதாக வரம் வாங்கினான். வாலி வழிபட்ட கோயில் வாலீசுவரர் கோயில் என்று அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலுள்ளேயே அமைக்கப்பட்டுள்ளது அறியற்பாலதாகும்.[6]

### 6.2.7. பங்குனி உத்திரத்திருநாள் வழிபாடு:

பங்குனி உத்திர பிரம்மோற்சவ விழாவில் பத்தாம் நாள் உத்திர நட்சத்திரத்தில் அருள்மிகு ஏகாம்பரநாதருக்கும் ஏலவார்குழலிக்கும் திருக்கல்யாண வைபவம் நடைபெறும். 3500 ஆண்டுகள் பழமை வாய்ந்த மாமரத்தின் அடியில் திருமணம் நடைபெறும். அவ்வேளையில் அதிக அளவில் திருமணங்கள் நடைபெறுவது வழக்கம். ஒருவரை ஒருவர் விரும்பும் ஆணும், பெண்ணும் மற்றும் நடுத்தரவர்க்கத்தைச் சார்ந்தவர்களும் இவ்விடத்தில் திருமணம் செய்து கொள்வர். இங்கு நடைபெறும் திருமணம் சட்டப்படி ஏற்றுக்கொள்ளப் படுகிறது.

இங்ஙனம் அருள்மிகு ஏகாம்பரநாதரை வழிபாடு செய்வதால் அமைதியான வாழ்க்கை அமைவது மட்டுமல்லாமல், மக்களது வாழ்க்கையும் வளம் பெருகி நிலைபெறுவது அறியலாம்.

### 6.3. கோயிலில் நடைபெறும் சமுதாயப் பணி:

பல்லவர்கள் ஆட்சியிலிருந்தே அருள்மிகு ஏகாம்பர நாதர் கோயில் பல கலைகளையும் கற்றுத்தரும் பள்ளியாக இருந்துள்ளது அறியற்பாலதாகும்.[7] இங்கு சிற்பம், இசை,

நடனம், ஓவியம், நாடகம், சமயக்கல்வி, சமஸ்கிருதம் முதலியவை கற்பிக்கப்பட்டு வந்துள்ளது.

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் வெளிப்புறத்தே தற்போது ஏகாம்பரசன்னதி நடுநிலைப்பள்ளி நடைபெறும் கட்டிடமானது அக்காலத்தில் சமஸ்கிருதக் கல்வி கற்பிக்கும் பள்ளியாகத் திகழ்ந்துள்ளது. மேலும் பதினாறு கால் மண்டபத்துக்கு அருகிலுள்ள கட்டிடத்தில் தேவாரப்பாடசாலை நடைபெற்று வந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.[8]

மேலும் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலிள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் புலவர்கள் ஒன்றுகூடி நூல் வெளியிடும் இடமாகப் பயன்படுத்தியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[9]

மகாபாரதக் கதையானது இக்கோயிலில் பரமேசுவரவர்மன் என்ற பல்லவ மன்னன் காலத்தில் சொல்லப்பட்டு வந்துள்ளது என்பது அறியற்பாலதாகும்[10] இது மக்களிடையே ஒழுக்கநெறிகளை வளர்ச்சியடையச் செய்துள்ளது. மேலும் சமய நூல்கள், தேவாரப் பாடல்கள் போன்றவை அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்ததை அறியமுடிகிறது.

### 6.3.1. சைவமடங்கள்:

சைவ சமயத்தை வளர்க்கும் மடங்களான காபாலிக மடம், காளாமுக மடம், பாசுபத மடம் முதலியவை காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலை அடுத்து அமைந்திருந்தது என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.[11] ஆகவே சமய வளர்ச்சிக்கும், அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் நிலைக்களனாக இருந்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

### 6.3.2. வேண்டுதல்கள்:

கடவுள் இச்செயல் நிறைவேற எனக்கு அருள் பாலித்தால் யான் அவருக்கு இதனைத் தருவேன் என்பது

வேண்டுதலாகும். அந்த வகையில் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் மாவடியில் மாலை சாத்துதல் மற்றும் தொட்டில் கட்டுதல் முதலியவை வேண்டுதல் பொருட்டு தொன்று தொட்டு இன்றுவரை நடைபெறுவது குறிப்பிடத் தக்கதாகும்.

### 6.3.3. அறப்பணிகள்:

ஒருவரது நல்ல செயலுக்காக அவரைப் புகழ்ந்து அவரது பெயரால் கோயிலில் பொன் கொடுத்து, விளக்கு வைத்தலோ அல்லது வேறு ஒரு அறச்செயல் நடைபெறுமாறு செய்தலோ பழங்கால மரபு ஆகும். பல்லவ அரசர் நிருபதுங்கன் ஆட்சியில் இம்மரபுகள் சிறப்புற கடைப் பிடிக்கப்பட்டுள்ளன என்பதை அறிந்துகொள்ளமுடிகிறது. அந்த வகையில் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் காணப்படும் கல்வெட்டின்படி ஸ்ரீ அல்லுந்திருக்காளத்தி தேவ கண்ட கோயில் மகாராசா அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் திரு நந்தா விளக்கு எரிப்பதற்கு 32 பசுக்களையும், ஒரு காளை மாட்டினையும் தானமாகக் கொடுத்தது அறியற்பாலதாகும்.[12] அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில், அரசர்களுக்குப் பக்தி உணர்வை மட்டும் வளர்ப்பதோடு நிற்காமல் மக்களுக்குக் கடன் அளிக்கும் அறச்சாலையாகவும், அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் திகழ்ந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மேலும், அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலை அடுத்து அடியவர்களுக்கும், ஆதரவற்றவர்களுக்கும் உணவுச் சாலைகள் இருந்துள்ளன என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.[13]

### 6.4. கோயில்களால் சமுதாயத்திற்கு கிடைத்த பயன்கள்:

பலதரப்பட்ட மக்களுக்கு வேலை வாய்ப்பினை அளிக்கும் மையமாக கோயில்கள் திகழ்ந்துள்ளன. கோயில் களுக்கென்று நிலங்கள் இருந்ததால் அதனை உழுது பயிர்செய்து மக்கள் வாழ வழிவகை செய்யப்பட்டன.

மருத்துவச் சேவையையும் அக்காலத்தில் கோயில்கள் செய்து வந்தன என்பது குறிப்பிடத்தக்கது.

**6.4.1. கோயில்களால் சமயத்திற்கு கிடைத்த நன்மைகள்:**

சைவ சமய வளர்ச்சிக்காகப் பாடுபட்ட நாயன்மார்கள் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலினை வழிபாடு செய்து திருப்பதிகங்கள் பல அருளியுள்ளனர். இதனால் சைவ சமயம் புத்துயிர் பெற்றது. மக்களிடையே இறை உணர்வு பெருகியது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## இயல் ஆறு
## சான்றெண் விளக்கம்


1. திருநாவுக்கரசு நாயனார் தேவாரம் 4-99-6
2. திருஞானசம்பந்தர் தேவாரம் 1-133-1
3. சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம் 7-61-1
4. காஞ்சிபுராணம் திருவேகம்பப் படலம் பா-86
5. மேலது, பா-88
6. மேலது, பா-103
7. பல்லவர் வரலாறு ப.263
8. கோயிலின் அர்ச்சகர் திரு.நாராயண தீட்சிதர் அவர்களிடம் 1-10-2006 அன்று பேட்டிகண்டது.
9. தொல்பொருள் ஆய்வுச்சான்று 1893 எண்.1-13
10. பல்லவர் வரலாறு ப-144
11. மேலது, ப.263
12. கோயிற்களஞ்சியம் ப.441
13. தென்னிந்தியக் கல்வெட்டு Vol.II ப.509

## முடிவுரை

காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் தொடக்கத்தில் மூவேந்தர்கள் மூலமாக கம்பாநதியும், கம்பா லிங்கமும் கண்டுபிடிக்கப்பட்டு வெளியுலகிற்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டுள்ளது. மேலும், அங்கு கண்டெடுக்கப் பட்ட லிங்கம் கிரேதாயுகத்தில் தேவேந்திரன் ஆட்சிக் காலத்தில் காஞ்சியில் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது என்பது கண்டெடுக் கப்பட்டுள்ளது.

காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலானது பல்வேறு அரசர்களின் ஆட்சியில் வளர்ச்சி அடைந்திருந் தாலும், குறிப்பாக பல்லவர், சோழர், சம்புவராயர், விசய நகர மன்னர்களின் ஆட்சிக்காலங்களில்தான் படிப்படியான வளர்ச்சி நிலையினை எய்தியுள்ளது. பல்வேறு மன்னர்கள் ஏகாம்பரநாதர் கோயிலுக்குச் செய்துள்ள திருப்பணிகளை அறிந்துகொள்ள முடிகிறது. மேலும் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் அமைந்துள்ள நூற்றுக்கால் மண்டபம விசயநகர மன்னர்களின் ஆட்சியில் ஆயிரங்கால் மண்டபமாக மாற்றப் பட்டுள்ளது. அம்மன்னரின் பக்திப் பெருக்கை வெளிப்படுத்து வதற்கு சான்றாகத் திகழ்கிறது. அருள்மிகு ஏகாம்நாதர் கோயிலின்கண் அமைந்துள்ள துவாரபாலகர் உருவங்கள், சிங்கத்தூண்கள், சோமாஸ்கந்த உருவம் முதலியவை அமைந்த பாங்கு சிறப்பானதாகும்.

அருள்மிகு ஏகாம்பரநாதர் தம் அடியவர்களுக்கத் தாமே வலியவந்து காட்சி தந்து அருள்பாலிப்பார் என்பதை மூவேந்தர்களுக்கும், மல்லிகார்ச்சுனர் என்ற சைவ ஆசாரியார் வடிவத்தில் காட்சி அளித்ததை சோழன் பூர்வ பட்டையத்தின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. அருள்மிகு ஏகாம்பரநாதரது வடிவம், வீரச் செயல், அருள்புரியும் தன்மை, இரக்ககுணம் முதலியவற்றை மூவர் தேவாரம் தெளிவாக உரைப்பது அறியற்பாலதாகும்.

அருள்மிகு ஏகாம்பரநாதர் தேவலோகம் உள்ளிட்ட எல்லா உலகங்களுக்கும் தலைவராகவும், வீட்டுலகிற்குத் தலைவனான முக்தி நாதனாகத் திகழ்கின்றார் என்பதை கச்சித்திரு அகவல் மூலம் நிலை நாட்டப்பட்டது. ஒருவனுக்குத் தன் ஊர், நெருங்கிய சுற்றம், புகழ், மனைவி, மக்கள், செல்வம் முதலியவற்றைக் காட்டிலும் அருள்மிகு ஏகாம்பர நாதரே உற்ற துணையாகத் திகழ்கின்றார் என்ற நம்பிக்கை உறுதி செய்யப்பட்டது.

அருள்மிகு ஏகாம்பரநாதர் மல்லிநாதன் எனும் அரசன் அளித்த தேரில் ஏறிவந்தார் என்பதனையும், பிறப்பு, இறப்பு இல்லா பெருந்தகையாளர் என்பதை ஏகாம்பரநாதர் உலா மூலம் எடுத்தியம்பப்பட்டுள்ளது.

கல்வெட்டுகள் கோயிலின் கலைக்களஞ்சியமாகத் திகழ்கிறது. அந்தவகையில், அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் சிறப்பைப் பல்வேறு கல்வெட்டுகள் மூலமாக அறிந்துகொள்ள முடிகிறது. சாக்கிய நாயனார் பௌத்தத்தைச் சார்ந்து இருந்து, அருள்மிகு ஏகாம்பரநாதர் மீது கல் எறிந்ததையும பொருட்படுத்தாமல், அவருக்குச் காட்சி கொடுத்து, மோட்சமடையச் செய்தது ஏகாம்பரநாதரது தயாள குணத்தை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

சைவ சமய வளர்ச்சிக்கு முதலாம் மகேந்திரவர்மன் உள்ளிட்ட பல்வேறு அரசர்கள் செய்த சைவ சமயத் தொண்டு கண்டெடுக்கப்பட்டுள்ளது. அடுத்து திருநாவுக்கரசர் உழவாரப் பணி புரிந்ததால் அவரது கையில் உழவாரப்படை கொண்ட வகையில் அவரது திருவுருவம் அமைக்கப்பட்டது. அதேபோல் மற்ற நாயன்மார்களுக்கும் திருவுருவங்கள் அமைக்கப் பட்டதை அறிந்துகொள்ள ஏதுவாகிறது.

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் உள்ள சிவலிங்கங்கள் பற்றி தெளிவாக அறியமுடிகிறது. தொண்டை மண்டல ஆதீனம், காஞ்சி சங்கரமடம், மெய்கண்டார் கழகம்

ஆகியன சைவசமயத்தின் வளர்ச்சிக்கு ஆற்றிவரும் தொண்டுகள் வெள்ளிடை மலை.

அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலில் நடைபெறும் நாள் வழிபாடுகள், மாத வழிபாடுகள் பற்றியும் குறிப்பாக பிரம்மோத்சவம் என்றழைக்கும் பங்குனி உத்திரத் திருவிழா பற்றி விரிவாக எடுத்தியம்பப்பட்டுள்ளது. அருள்மிகு ஏகாம்பர நாதர் மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் நீரில் வாழும் உயிர்களுக்கும் அருள்புரியும் வகையில் தெப்பத்திருவிழா நடைபெறுகிறது. மேலும், தை மாத ரதசப்தமியில் சூரியன் தன் கிரணக் கதிர்களை அருள்மிகு ஏகாம்பரநாதர் மேல் செலுத்தி வழிபடுவது குறிப்பிடப்பட்டுள்ளது. இது இயற்கையின் ஆற்றலை வெளிப்படுத்துகிறது. சுந்தரமூர்த்தி நாயனாருக்கு அருள்மிகு ஏகாம்பரநாதர் இடதுகண் பார்வை அளித்ததால் அந்நாளில் ஏகாம்பரநாதர் கோயிலில் சுந்தரமூர்த்தி நாயனார் விழாவாகக் கொண்டாடப்படுவது அறியவருகிறது.

அருள்மிகு ஏகாம்பரநாதரை வரிசைக்கிரமப்படி வணங்கும் முறை பற்றி வழிபாட்டுக்கலை தெளிவாக உணர்த்துகிறது. பழங்காலத்தில் இருந்துள்ள ஆடல் வகையில் 'கொடுகொட்டி' என்னும் ஆடலானது அருள்மிகு ஏகாம்பரநாதரால் ஆடப்பட்டுள்ளது குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கலையை வளர்ப்பதில் அடிகள்மார் எத்தகைய பங்கு வகித்தனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது. அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் அந்தணர், ஆசான் முதலியவர்கள் உடன் இருக்கும் வகையில் நூலோர் வகுத்த நெறிப்படி கட்டப்பட்டது தெளிவாகிறது.

அடுத்து இக்கோயிலில் அமைந்திருக்கும் மண்டபங்கள், தூண்களில் அமைந்துள்ள சிற்பங்கள் பல்வேறு புராணக் கதைகளையும், நிகழ்ச்சிகளையும் பிரதிபலிக்கக்கூடிய வகையில் அமைந்துள்ளது எடுத்தியம்பப்பட்டுள்ளது. மேலும் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயிலின் உள்பகுதியில் அமைக்கப்பட்டிருக்கும் பல்வேறு சிறிய கோயில்கள் பற்றியும்

குறிப்பிடப்பட்டுள்ளது.

சமுதாய வாழ்க்கையில் கோயில்கள் முக்கியபங்கு வகிக்கின்றது என்பதும், பல்வேறு நிகழ்ச்சிகளுக்கும் கோயிலே அடிப்படையாக இருந்திருப்பதும் புலப்படுத்தப்பட்டுள்ளது. அருள்மிகு ஏகாம்பரநாதரை வழிபடுவதால் மக்கள் மனதில் அமைதி நிலவுகிறது. மேலும் பிரமன், வாலி முதலியவர்கள் ஏகாம்பரநாதரை வழிபட்டு பேறுகள் பெற்றது நம்பிக்கையையும் இறைபக்தியையும் மேம்படுத்துகிறது.

கல்வியை வளர்ப்பதிலும், பல்வேறு சமுதாயப் பணியை மேற்கொள்வதிலும் அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் ஒரு முன்மாதிரியாகத் திகழ்ந்துள்ளது குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் கோயில் பல்வேறு கல்வெட்டுக்கள் குறிப்பிடும் செய்திகளின் அடிப்படையிலும், தமிழ் இலக்கியங்களின் அடிப்படையிலும் செவ்வனே ஆய்வு செய்யப்பட்டுள்ளது. அந்த வகையில் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதருக்கு 31-08-2006 அன்று திருக்குடமுழுக்கு நன்னீராட்டு விழா நடைபெற்றது. அக்கோயில் ஒரு அரிய பொக்கிஷம்; காலத்தின் சின்னம்; அக்கோயிலை நன்முறையில் பாதுகாத்து, பராமரித்து வருங்காலச் சந்ததியினருக்கு ஒப்படைப்பது கடவுள் பற்றுள்ள ஒவ்வொருவரின் கடமையாகும் என்பதை பக்தர்களின் பக்திவழி புலப்படுத்தப்பட்டுள்ளது.

ஏகம்பத்துறை எந்தாய் போற்றி! போற்றி!!
பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி! போற்றி!!

# துணை நூற்பட்டியல்

**முதன்மை நூல்கள்:**

திருவேகம்பன் செம்பொற்கோயில் தலவரலாறு
காஞ்சி சிவனடியார் திருக்கூட்டம்
கும்பாபிஷேக மலர் 1979
கும்பாபிஷேக மலர் 1992

**துணைமை நூல்கள்:**

அரங்கராஜன். இரா.
தமிழகக் கோயிற்கலை, மதுரை, செப்டம்பர்-2000
அரங்கநாத முதலியார்
கச்சிக்கலம்பகம், தொழுவூர்-1962
அருணாசலம்.மு.
காஞ்சி மலர், ஏசியன் அச்சகம், சென்னை, மார்ச் 1979
அருணகிரிநாதர்
திருப்புகழ் சைவசித்தாந்த மகா சமாஜம் சென்னை. 1945
அறிவொளி.மு.
காஞ்சி காமாட்சி, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்
இராச மாணிக்கம்.ம.
பல்லவர் வரலாறு, கழக வெளியீடு, திருநெல்வேலி
இராமசுப்பிரமணியம்.வ.த.
திருத்தொண்டர்புராணம் மூலமும் தெளிவுரையும் திருமகள் நிலையம், சென்னை-17
இராமநாத பிள்ளை.ப.
பட்டினத்துப்பிள்ளையார் திருப்பாடல்கள் கழக வெளியீடு, திருநெல்வேலி
இராமராஜன்.எஸ்.கே.
காஞ்சிப்புராணம், உ.வே.சா.நூலகம், 1983 எண்.41
ஈசுவரப்பிள்ளை.தா.

பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்
கச்சியப்ப முனிவர்
கச்சிஆனந்த ருத்திரேசர், வண்டுவிடு தூது
கழக வெளியீடு, திருநெல்வேலி
கதிர்வேலு முதலியார்
ஏகாம்பரநாதர் உலா ஆனி 1986
காசிநாதன். நடன
தொல்லியல் நோக்கில், கழக வெளியீடு
கோவிந்தன்.கா.
மொழிபெயர்ப்பும் திறனாய்வும், கழக வெளியீடு
கோவிந்தராசனார்.சி.
தமிழகத்துக்கலைகள், மதுரை காமராசர்
பல்கலைக்கழகம், மதுரை
கோபால கிருஷ்ணமாச்சாரியார்.வை.மு.
வில்லி பாரதம்-ஆதிபருவம்
குருமூர்த்தி.எஸ்.
தொல்லியலும் தமிழ் இலக்கியமும்
சென்னைப் பல்கலைக் கழகம், 1974
சண்முகசுந்தரம்.க.
திருவரங்கம் பெரிய கோயில் திருவிழாக்களும்,
ஒழுகலாறுகளும், கந்தமேஸ்திரியார் பதிப்பகம்
திருச்சி.
சத்தியமூர்த்தி
சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
சிவஞானமுனிவர்
காஞ்சிப்புராணம், கச்சாலையார் இராசன் அண்டு கோ
சென்னை. 1983
சிதம்பரநாதன்
சங்கரவிலாசம் திருவேங்கடவன்
கீழ்க்கலை ஆராய்ச்சி கழகம், திருப்பதி. 1950

சிவசுப்பிரமணியன்.வே.
அகநானூறு, மணிமிடைப்பவளம்
மூலமும் உரையும், உ.வே.சா.நூலகம்
சென்னை-90.
சுப்பிரமணியன்
தென்னிந்திய கோயில் சாசனங்கள்-தொகுதி 2
சிவராமமூர்த்தி.க.
இந்திய ஓவியக்கலை நேஷனல் புக் டிரஸ்ட், புதுடில்லி
செல்லம்.வே.தி.
தமிழக வரலாறும் பண்பாடும், மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை-108.
செங்கல்வராய பிள்ளை
தேவார ஒளிநெறி கட்டுரை (அப்பர்)
தேவார ஒளிநெறி (சம்பந்தர்)
கழக வெளியீடு 1959
சோமசுந்தரனார்.பொ.வே.
பட்டினத்துப்பிள்ளையார் திருப்பாடல்கள்
இரண்டாம் பகுதி, கழக வெளியீடு, திருநெல்வேலி
சோமலெ
19,20ஆம் நூற்றாண்டுகளில்
காஞ்சி ஏகாம்பரநாதர் திருப்பணிகள்
தங்கவேலு.கோ.
இந்தியக்கலை வரலாறு, முதல் புத்தகம்,
பரசு பிரிண்டர்ஸ், சென்னை, பிப்ரவரி 1976
தொல்பொருள் ஆய்வுச் சான்றுகள்
தொல்லியல் துறை நூலகம்,புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை-9.
ஆண்டுகள்: 1893, 1905, 1908, 1909, 1910, 1919,
1921, 1922, 1923, 1940, 954, 1955, 1958
**Annual Report of Epigraphy Chennai.**
**Department of Epigraphy.**

நாகசாமி.இரா.
தமிழக கோயிற்கலை தொல்பொருள்,
ஆய்வுதுறை வெளியீடு, 1976
நாகப்பா
திருக்கோயில் வழிபாடு, மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை-1.
நாறாயண வேலுப்பிள்ளை
காஞ்சி மாநகர், கவிதா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை-17.
நீலகண்டன்.ஜே.டி.
பத்துப்பாட்டு பாடலும் பொருளும்
சிவசக்தி நிலையம், ஆவடி, சென்னை.
ஜுன்-2000
பட்டினத்துப் பிள்ளையார்
கச்சித்திருஅகவல், கழகவெளியீடு
திருவேகம்பமுடையார் திருவந்தாதி, 11-ம் திருமுறை
படிக்காசுப்புலவர்
பன்னிருசதகத் திரட்டு, தொண்டை மண்டல சதகம்,
கழக வெளியீடு
பாலசுந்தரன். ஆ.தி.
சங்க இலக்கியங்கள் புலப்படுத்தும் வழிபாட்டு வரலாறு
மணிமேகலைப் பிரசுரம், சென்னை-17.
முதற்பதிப்பு-2002
பிள்ளை.கே.கே.
தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை-6.
மணிவண்ணனன்.எஸ்.
பாண்டியநாட்டு வைணவக் கோயில்களின் கலையும்
கட்டிடக் கலையும், ஜெ.ஜெ.ப்பளிகேஷன்ஸ்,
மதுரை-20

மறைமலையடிகள்
தமிழர் மதம் கழக வெளியீடு, 1945
மாதவன்.இரா.
தமிழில் தலபுராணங்கள் பாவை வெளியீட்டகம், தஞ்சாவூர்.
முத்துசாமிப்பிள்ளை. சோ.மு.
கோயிற்களஞ்சியம் அறிமுகம்,
தமிழப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்
ராஜலட்சுமி ராகவன்
பாரதப் பண்டிகைகளும் அனுஷ்டானமும்
ஸ்ரீ கிரி டிரேடிங்க் கம்பெனி, சென்னை-1985
விஜயகுமார்.வரத.
கச்சித் திருவேகம்பன் திருக்கோயில்,
தில்லை வரதன் வெளியீடு, காஞ்சிபுரம்.
வித்தியானந்தன்.க.
தமிழர் சால்பு, பாரி புத்தகப் பண்ணை, சென்னை-5.
வெள்ளை வாரணனார்.க.
சைவசித்தாந்த வரலாறு,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்
வேங்கடசாமி.சீனி.
1. வாதாபி கொண்ட நரசிம்மன்
2. பௌத்தமும், தமிழும்
3. மகேந்திரவர்மன் கழக வெளியீடு
4. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்
5. நுண்கலைகள்
நாம் தமிழர் பதிப்பகம், சென்னை
ஸ்ரீ சந்திரன்.ஜெ.
சிலப்பதிகாரம் மூலமும் தெளிவுரையும்
வர்த்தமானன் பதிப்பகம், சென்னை-17.
எட்டாம் பதிப்பு, பிப்ரவரி-2000

**ENGLISH**

Ganapathi
The Early Pallavas of Kanchi

Gopalan
History of the Pallavas of Kanchi

Srinivasan.C.R.
Kanchipuram through the ages
Agam Kala Prakasham, Delhi.

Seletore.R.N.
Vijayanagara Art Sundeep Prakashan, Delhi

Narasimhaiah.B.
Metropelis Vijayanagara Significance of
Remans of Citadel

Robert Sewell
A Forgotton Empire Vijayanagar

Hiras.H.
South India under the Vijayanagar Empire

Rajeswari.D.R.
The Pallavas Sculputre

Srinivasan.K.R.
The cave temples of the Pallavas



நூலாசிரியர்

முனைவர் சு. துரைமாணிக்கம்

| | |
|---|---|
| பிறப்பு | 06-03-1963 |
| பிறப்பிடம் | நெடுங்கல், வந்தவாசி வட்டம்,<br>திருவண்ணாமலை மாவட்டம். |
| பெற்றோர் |ச. சுந்தரமுதலியார்<br>சு. கண்ணம்மாள் |
| கல்வித்தகுதி | பி.லிட்.,<br>எம்.ஏ., வரலாறு, பொருளியல், தமிழ்,<br>எம்.காம்.,<br>எம்.எட்.,<br>பி.எச்.டி., |
| பணி | தமிழாசிரியர்,<br>நெ.ச.து. அரசினர் உயர்நிலைப் பள்ளி,<br>நெய்யாடுபாக்கம் - 631 603.<br>காஞ்சிபுரம் மாவட்டம். |
| அளிப்பு | Presented the paper entitled<br>FEMINISM - A SURVEY IN NOVELS<br>CENTRAL INSTITUTE OF INDIAN LANGUAGES<br>MINISTRY OF HUMAN RESOURCE DEVELOPMENT,<br>GOVERNMENT OF INDIA, MYSORE.<br><br>THE PROBLEMS OF WORKING WOMEN IN<br>TAMIL AND TELUGU NOVELS.<br>SRI VENKATESWARA UNIVERSITY, TIRUPATI &<br>DRAVIDIAN UNIVERSITY, KUPPAM. |